இராமன் மீது செலுத்துகிறான். இராமன் அவற்றைத் தடுக்கிறான். இராமனும் இராவணனும் ஒத்துச் செருவிளைக்கின்றனர். இராமன், அரக்கர் படைக்கலன் களைத் தடுத்தல் அன்றிப், போர் செய்யாது நிற்கிறான். இராமன் தேர்க் கொடியை இராவணன் அறுக்கிறான். இராமனின் குதிரைகள் மீதும், மாதலி மீதும் இராவணன் சரம் விடுகிறான். மாதலி மார்பில் அம்பு தைக்கக் கண்டு, இராமன் வருந்துகிறான். இராமனை இராவணனது அம்புகள் மறைக்கின்றன. இராமன் இராவணன் தேர்க்கொடியை வீழ்த்துகிறான். இராவணன் தாமதப் படையை இராமன் மேல் விடுகிறான். இராமன், சிவன் படையை விட்டு, தாமதப்படையைத் தொலைக்கிறான். இராவணன் அசுரப்படையால் தாக்க, இராமன் அக்கினிப்படையால் அதனைப் பிளக்கிறான். அவன் மயன்படையை மேற்கொள்ள, இராமன் கந்தருவக்கணையால் அதனைத் துண்டாக்கிவிடுகிறான். பல்வேறு தண்டுகளும் அம்புகளும் போரில் இடம்பெறுகின்றன. அவை, இராமன் கணையால் அழிந்து ஒழிகின்றன. இராவணன் மாயைப்படையைவிட, இறந்த அரக்கர் எழுந்து ஆரவாரிக்கின்றனர். இராமன் ஞானக்கணையை விடுத்து மாயையை மாற்றுகிறான். இராவணன் சூலம்கொண்டு வீசுகிறான். இராமன் அம்புகள், சூலப்படையை அழிக்க முடியாமல்போக, அவன் உங்காரத்தால் அழிக்கின்றான்; இராமனுடைய செய்கையைக் கண்டு, வீடணன் கூறியன நினைவில் தோன்ற, 'வேத முதல்வனோ?' என இராவணன் கருதுகிறான். "அந்த இராமன் யாவனாயிருந்தாலும் அவனை நானே வெல்வேன் அல்லது இறப்பேன்" எனக் கூறுகிறான். நாகக்கணை, வாயுக்கணை, தீக்கணைகளை இராவணன் விட, இராமன் மாறுபட்டப் பாணங்களால் இராவணன் மார்பில் அழுத்துமாறு போர் புரிகின்றான். இராவணன் வித்தைகள் தளர, இராமன் வீரமும் வலியும் மிகுகின்றது. இராமன் இராவணனின் ஓர் தலையை அறுக்கிறான். அது கடலில் வீழ்கிறது. அவன், இராவணன் கையை அறுக்க, அது மீண்டும் முளைக்கின்றது. இராவணன், மாதலியை ஒரு கணையால் தாக்க, தோமரம் துகளாகிறது. இராவணன் தலைகள் அறுபட்டுச் சிதறி வீழ்கின்றன. இராவணன் மேனியை இராமன் முற்றும் அம்பினால் மூடுகிறான்.

இராவணன் தேரில் உணர்வு இழந்து கிடக்க, சாரதி தேரினை விலக்கி நிறுத்துகிறான். இத்தருணத்தில் மாதலி, இராவணனைக் கொல்லத் தூண்டவே, இராமன் 'நீதியன்று' என்கிறான். உணர்வுபெற்ற இராவணன், சாரதியைச் சினந்து, வாளை உருவ, அவன் நடுங்கி நின்றான். சாரதி, இராவணன் உயிரைக் காப்பாற்றவே அவ்வாறு செய்ததாகக் கூறுகிறான். இராமன், இராவணன் வில்லைத் துண்டிக்கிறான். அவன் படையால் இராவணன் உயிர் இழக்கின்றான். இறந்த இராவணனது முகம் பொலிவுற்றுக்கிடக்க, இராமன் இராவணன் உடம்பைப் பார்க்கிறான். இராவணன் புறப்புண் கண்ட இராமன் முறுவலிக்க, வீடணன் வருந்தி, என்திசையானைகளோடு முட்டியதால் ஏற்பட்ட வடுக்கள், 'இவன் ஒரு நல்வீரனே' என்கிறான். இராமன், இராவணனுக்கு இறுதிக்கடன் செய்ய ஏவுகிறான். வீடணன், இராவணன் மேனிமேல் விழுந்து அரற்றி, பலவாறு புலம்புகிறான். வீடணன் ஒருவாறு தேற, மண்டோதரியும் அரக்கியரும் இராவணன் கிடக்கும் இடத்தை அடைகின்றனர். அரக்கியர் அழுது அரற்ற, மண்டோதரி இராவணன் மார்பில் விழுந்து புலம்பு கின்றாள். இராவணனைத் தழுவிய மண்டோதரியின் உயிர் பிரிகிறது. வீடணன் யாவர்க்கும் உரிய கடன்களை இயற்றி, இராமனை அடைகின்றான்.

1.3.37 சீதையை மீட்டல்.

இராமன் ஆணைப்படி இலக்குவன் வீடணனுக்கு முடிசூட்டுகிறான். வணங்கிய வீடணனை இராமன் தழுவி, நீதிகளை உரைக்கிறான். சீதைக்குச் சொல்லிவர இராமன் அனுமனை அனுப்புகிறான். அனுமன் சீதையிடம் செய்தியைக் கூறுகிறான். சீதை மகிழ்ந்து "நல்ல செய்தி சொன்ன உனக்கு எத்தகைய பதில் உதவி செய்வது?" என மறுமொழி கூறுகிறாள். அனுமன் சீதையிடம் அரக்கியர்களை அழிக்க விரும்புவதாகக் கூறுகிறான். சீதை அரக்கியர்க்கு அருளுமாறு வேண்டுகிறாள். இராமன், வீடணனை நோக்கி, "தேவியைச் சீரோடு தர" பணிக்கிறான். வீடணன், சீதையிடம் கோலம் புனைந்துவர வேண்ட, அவள் அசோகவனத்தில் இருந்த

தன்மையில் வருதலே தக்கது என்கிறான். வீடணன் வற்புறுத்த, வான மாதர்கள் சீதைக்குக் கோலம் புனைகின்றனர். சீதையை இராமனிடம் வீடணன் அழைத்து வருகிறான். கோலம் கண்ட சீதை அனுமன் உதவியைப் பாராட்டுகிறாள். சீதை, இராமனைத் தொழுது ஏக்கம் நீங்குகிறாள். இராமன் சீதையை அமைய நோக்குகிறான். சீதையை இராமன் "உன்னைச் சிறையிலிருந்து விடுவிப்பதற்காக நான் இச்செயலை செய்யவில்லை. தேவர்கள் துன்பத்தை நீக்கவும், எனக்கு நேர்ந்த அவமானத்தைப் போக்கவும் போர் செய்தேன். பிறர் வசமிருந்த உன் கற்பு அழிந்து பட்டிருக்கும், அலங்கரித்து வந்தனையே! என் முன் நிற்காமல் போய்விடு!" என்று கூறுகின்றான். கேட்ட அனைவரும் வருந்துகின்றனர். இராமனின் சுடுமொழி கேட்ட சீதை துயருற்றுதான் விழுந்து இறப்பதற்குரிய தீமூட்டித் தரவேண்டுகிறாள். சீதை, தான் வேண்டியபடி, இலக்குவன் அமைத்த தீயை அணுகுகின்றாள். சீதை தீயினடப் புகுகின்றாள். சீதை எரியாமல் வாட்டமுறாது விளங்குகிறாள். தீக்கடவுள், தேவியின் கற்புத்தீ தன்னைச் சுட்டமையால் இராமனைச் சரணடைந்ததாகக் கூறி, சீதையை ஏற்றருள வேண்டுகிறான். சீதையை இராமன் ஏற்றுக்கொள்ளுகிறான். பிரமன், இராமனது உண்மை நிலையான 'திருமாலே இராமன், இலக்குமியே சீதை' என்பதை உணர்த்துகிறான். சிவபெருமான், இராமனுக்குத் அவதார உண்மையை உணர்த்துகிறான். இராமனைத் தேற்றுமாறு, துறக்கத்திலுள்ள தயரதனுக்குச் சிவபெருமான் பணிக்கிறான். தயரதன் தோன்ற, சீதை வணங்குகிறாள். தேறுதல் மொழிகள் கூறுகிறான். தயரதன், இலக்குவனைத் தழுவிப் பாராட்டுகிறான். தயரதன் "வரம் கேள்" எனக்கூறவே, இராமன் 'தெய்வமாகிய கைகேயியும், மகன் போன்ற பரதனும் தாயாகவும் தம்பியாகவும்' வரம் வேண்டுகிறான். கைகேயின் மேல் தயரதன் கொண்ட கோபம் தணிகிறது. இராமன், தேவர்களிடம், மாண்டுள குரங்குகளை எல்லாம் எழுப்புமாறு வேண்டி நிற்கிறான். வனவாசத்திற்கெனக் குறிப்பிட்ட பதினான்கு ஆண்டுகளும் கழியவே, இராமன் பரதனைக் காண, விரைந்து செல்லும் விமானம் வேண்டி நிற்கிறான்.

இராமன், சீதை, இலக்குவன் முதலியோருடன் விமானத்தில் ஏறி, துணைவர்க்கு விடைதர விழைகின்றான். துணைவர் முடிசூட்டுவிழாக்காண அனுமதி வேண்ட, இராமன் இசைகின்றான். யாவரும் நெடும்புட்பக விமானத்தில் ஏறுகின்றனர். போகும் வழியே இராமன் சீதைக்கு ஒவ்வொன்றாகக் காட்டுகிறான். சேதுவைக் காட்டி அதன் தூய்மையை இராமன் புகழ்ந்துரைக்கிறான். பரத்துவாசன் ஆச்சிரமத்தில் இறங்குகின்றனர். பரத்துவாசர் யாவரையும் வரவேற்கிறார். அனுமனை, நந்திக் கிராமத்துள்ள பரதன்பால் அனுப்புகின்றான். நந்தியம்பதியில் பரதன் பலவாறு எண்ணி, இராமன் வரவுக்காக எதிர்நோக்கியிருக்கிறான். சோதிடர், 'இராமன் வர வேண்டிய நாள் இன்று' என்கிறார். இராமன் வராமையால் பரதன் அவலமுற, சத்துருக்கனை அழைக்கிறான். பரதன் அவனிடம் 'தீயில் விழுந்து இறக்கப்போகிறேன்' என்கிறான். கேட்ட சத்துருக்கன் வருந்தி நொந்து, 'தானும் அப்படியே' என்கிறான். பரதன் எரி அமைக்கப்பணிக்கிறான். செய்தியறிந்த கோசலையும் மற்றும் அயோத்திய மக்களும் அரற்றி விரைந்து வருகின்றனர். கோசலை உரையைப் பரதன் மறுத்துரைக்கிறான். அனுமன் பரதன் முன் தோன்றி, எரியை அவிக்கின்றான். இராமனது மோதிரத்தை அடையாளமாகக் காட்ட, மோதிரம் பெற்ற பரதன் மகிழ்கின்றான். பரதன் அனுமனைப்பாராட்டி 'நீயாரென' வினவ, அனுமன் தன் வரலாற்றைக் கூறுகிறான்.

பரதன், அரக்கர் அழிவுபற்றி அனுமன் கூறக்கேட்டு, பரிசுகளை வழங்குகிறான். பரதன் அனுமனது கையைப் பற்றிக்கொண்டு கங்கையை அடைகிறான். குகன், பரத்துவாசன் இருக்கையை அடைந்து, இராமனை வணங்கி நிற்கிறான். புட்பக விமானத்தில் இராமனும் மற்றுள்ளோரும் வருகின்றனர். இராமனைப் பரதன் காண்கிறான். தொழுது நெருங்கிய பரதனை, அனுமன் இராமனுக்கு அறிவிக்க, இராமனும் தம்பியைக் கண்டு மகிழ்கிறான். புட்பக விமானம் நிலத்தைச்சார்கின்றது. இராமனது வருகையால் தாயாரும் மற்றுள்ளோரும் உணர்வு பெறுகின்றனர்.

இராமன் தாயை வணங்க, சீதையும் இலக்குவனும், முறையே வணங்குகின்றனர். அடியில் வீழ்ந்து வணங்கிய பரதனை இராமன் அன்புறத் தழுவுகின்றான். இலக்குவன், பரதனை பாதங்களில் விழுந்து வணங்குகின்றான். சத்துருக்கன் அனைவரையும் வணங்க, இராமன் அவனைத் தழுவுகிறான். பரத சத்துருக்கர் களைத் துணைவர்களுக்கு அறிமுகப்படுத்த, அவர்கள் அவ்விருவரையும் வணங்குகின்றனர். பின்னர் யாவரும் அயோத்தியை அடைகின்றனர் .

1.3.38 இராமன் திருமுடி சூடுதல்:

இராமன் தம்பியரோடு அரசகோலம் கொள்ளுகிறான். இராமன் அரண்மனையை அடைகிறான். நகரமாந்தர் மகிழ்ச்சியடைகின்றனர். இராமன் புண்ணிய நீரில் ஆடுகின்றான். வசிட்டன் இராமனுக்குத் திருமுடி புனைகின்றான். பரதனுக்கு இளவரசுப்பட்டம் சூட்டப்படுகிறது .

1.3.39 இராமன் வீடணன், சுக்ரீவன் முதலியோருக்கு விடை கொடுத்தல்:

இராமன் சீதையோடு அரியணையில் வீற்றிருக்கின்றான். சுக்ரீவன் முதலியோர் வணங்குகின்றனர். இராமன், அவனைவரையும் இனிது இருக்கப் பணிக்கின்றான். இராமன், மறையவர் முதலியோருக்குத் தானம் வழங்குகின்றான். இராமன், யாவருக்கும் பரிசுகள் வழங்கி விடை கொடுக்கின்றான். இராமன் மனுநெறி முறையில் இவ்வுலகைக் காத்து வருகிறான் .

இராமவதாரக் கதையைச் சொல்லுபவர்கள், மன்னவராகிப், பின்னும் யமனையும் வெல்லுந்தன்மையைப் பெறுவார்கள்.

## 1.4 இராமசரிதம் (யுத்த காண்டம்) கதைக்கருத்துக்கள்:

### 1.4.1 பாயிரம்: இறைவணக்கமும் அவையடக்கமும்:

பண்டையோர் மரபைப் பின்பற்றி இராமசரித ஆசிரியர் எடுத்த காரியம் எளிதில் முற்றுற இறைவணக்கம் பாடுகிறார். கணபதி, கலைமகள், திருமால், சிவன், பார்வதி, இலக்குமி ஆகிய, தாம் விரும்பும் கடவுளரை வணங்கிப் பாயிரம் பாடுகிறார். பின்னர் வான்மீகி, வியாசர் முதலியோர்களையும் வணங்குகின்றார். அவையடக்கமாகக் கதை கூறத்தொடங்குகிறார். பின்னணியாக அனுமன், சீதையைத் தேடி இலங்கைக்குச் சென்று மீண்டமை, அனுமன், சீதையின் வரலாற்றை இராமனுக்குக் கூறியவை, ஆகியன இடம்பெறுகின்றன.

### 1.4.2 சுக்ரீவன் இராமனைத் தேற்றுதல்:

அனுமன் சீதையைப் பற்றிக்கூறிய செய்திகேட்டு வருந்தும் இராமனுக்கு, சுக்ரீவன் ஆறுதல் மொழி கூறுகிறான். இலங்கைச் சூழ்நிலைகளைப் பற்றி இராமன் கேட்க, அனுமன் விவரிக்கிறான். நகர்நிலை, பாசறைகள், போர்க் கருவிகள் பற்றி விளக்குகிறான். அரக்கர் தொகை, இராவணன் வாழிடம், சீதாதேவி அசோகவனத்தில் இருக்கும் நிலை முதலியவற்றைத் தருகிறான்.

### 1.4.3 அனுமன் சீதையைக் காணல்:

அனுமன் அசோகவனத்தில் அரக்கர் காவலில் இருக்கின்ற சீதையைக் காண்கிறான். மரஇலைகளிடையே மறைந்திருக்கிறான். இராவணன், சீதையிடம் ஆசைமொழிகளை அள்ளிவீசுகின்றான். சீதை இணங்க மறுத்து, தன்னைக் கொன்றாலும் உடன்படேன் என்கிறாள். அவன் அவளை வாளெடுத்து வெட்டத் தயாராகிறான். அதனைத் தானமாலை தடுக்கிறாள், இராவணன், அரண்மனை செல்லுகிறான்[78].

1.4.4 அனுமன் சீதைக்குக் கணையாழி கொடுத்தல்:

இயலாது எனச் சீதை கூறியதைக்கேட்ட அரக்கியர்கள், கோபமடைகின்றார்கள். சீதாதேவியைப் பயமுறுத்துகின்றனர். அதைக்கண்ட திரிசடை தான் கண்ட கனவின் தன்மையைக்கூற, அரக்கியர்கள் அடங்கி உறங்குகின்றனர். அவர்கள் உறங்கிவிட்டதை உணர்ந்த சீதை, தற்கொலைக்கு முயற்சி செய்கின்றாள். அவ்வேளை, அனுமனும் நேரடியாக வந்து தடுத்துச், செய்திகளையெல்லாம் சொல்லி, கணையாழிகொடுத்துச், சூடாமணி வாங்கி, திரும்பிச் செல்லுகிறான். நடந்தவற்றை அனுமன் கூறக்கேட்ட இராமன், இலக்குவன், சுக்ரீவன் ஆலோசிக்கின்றனர். பின், அவர்கள் இலங்கையைப் பிடிப்பதற்கு வானரப்படையோடு, அனுமன் தோளில் இராமனும், புறப்பட்டு தென்கடலை வளைகின்றனர். திட்டமறிந்து, இராவணன் அமைச்சர் அவையைக் கூட்டுகிறான். அமைச்சர்கள் இராவணனைச் சமாதானப்படுத்துகின்றனர். இராவணன் தேவர்களை வீழ்ச்சியுறச் செய்ததன் வலிமையை விதந்து கூறுகின்றனர்.

1.4.5 இராவணன் மந்திராலோசனை:

இராவணனுடைய கூற்றுக்களைக் கேட்ட அமைச்சர்கள், தாம் செய்தன வற்றைக் கூறுகிறார்கள். பிரகத்தன், 'இராமன் முதலியோரின் வாழ்க்கையை முடிப்பேன்' என்கிறான். துன்முகன் 'வானரப்படையை இலங்கையில் நுழைய சற்றும் அனுமதியேன்' என்கிறான். வச்சிரதந்தன், 'இராம இலக்குவரை அழிப்பேன்' 'இராமனுக்கு எதிராகப்படையுடன் வரும் பரதனுடன் நாம் நிற்கவேண்டும்' என்கிறான். நிகும்பன் 'அரைநாழிகையில் அவர்களை அழிப்பேன்' என்கிறான். வச்சிரவல்லன், 'இராமன் படையோடும் தம்பியோடும் தன்கையால் அழிவான்' என்று உறுதிகூறுகிறான். விபீடணன் இராமனது படைவலிகூறித், தமது குலம் வாழச், சீதையை இராமனிடம் அளிக்குமாறு, அறிவுரை கூறுகிறான்.

"நல்லவற்றைக் கேட்டது யார்? பண்டிதனாக அறிவுரைகூற வேண்டாம்" என்பதில் கூறி, இராவணன் எழுந்து நடக்கிறான்.

1.4.6 அவையில் விபீடணன் முதலியோர் இயற்றிய உரை:

விபீடணன், அறிவுரையைக் கூறிய பின், மறுநாள் இராவணனை வணங்கி, சீதாதேவியை விடுமாறு வேண்டுகிறான். கும்பகருணன் சகோதரனிடம் "நானொருவனே அவர்களைத் தொலைப்பேன்" என்கிறான். "அமைச்சர் அவையில் ஆலோசித்த பின்னரே செயல்புரிதல் வேண்டும். என்னும் தங்கள் கருத்துப்படி, சீதையுடன் சேர, போர்செய்து இராமனின் தலையெடுப்பதாகக்" கூறுகிறான். மகாபார்சுவன் சீதையை வலிந்து அணையக் கூறுகிறான்

1.4.7 இராவணன் உரையும் விபீடணன் அறிவுரையும்

இராவணன், மகாபார்சுவனிடம் அனுமனின் தாயாகிய புஞ்சிகதலியை வலிந்து அனுபவித்ததை விரித்துக் கூறுகிறான். தன்னை விரும்பாத பெண்ணைப் புணர்ந்தால் தலைகள் வெடிக்கும் என்ற சபதத்தைக் குறிப்பிடுகிறான். அது கேட்ட விபீடணன், இராமனின் வலிமையைக்கூறி சீதையை இராமனுக்குத் திரும்பக் கொடுக்கும்படிக்கூறி இராமனின் சிறப்பையும் விரிவாக எடுத்துரைக்கிறான். வராகம், நரசிங்கம், வாமனன், பரசுராமன் அவதாரச் சிறப்பைக் கூறுகிறான். மேலும் அரக்கர் வம்சத்திற்குப் பெரிய நாசம் வருமென்பதை வலியுறுத்துகிறான். அதுகேட்டு, சீதையை விடுவிக்கும் கருத்தை இந்திரசித்து மறுத்துக் கூறுகிறான்.

1.4.8 விபீடணன் இராமனைச் சரணடைதல்:

இளையன் இந்திரசித்தின் கருத்தை ஏற்றுக்கொள்ளலாகாது என்று விபீடணன் கூற, பெயரின் பொருளுக்குக்கூடப் பொருத்தமற்றவன் என்று கூறுகிறான்.

வீடணன், "இராவணன் உட்பட அரக்கர் குலம் அழியும்" என்கிறான். "நாசங்களை ஏற்க என்னால் இயலாது" என்று கூறி, வீடணன் வான்வழி, இராமனைச் சரணடையச் செல்லுகிறான். வானர வீரர்கள் அவன் வரவைப் பற்றி ஒவ்வொரு படித்தாகக் கூறுகிறார்கள்.

1.4.9 <u>வீடணனை அடைக்கலமாக ஏற்றலும் சேது பந்தனமும்:</u>

சரணடைந்த வீடணனை ஏற்றுக்கொள்வதே சரி என இராமன் கூறுகிறான். இலங்கை அதிபதியாக்கி, இலக்குவனை முடிசூட்டிடச் செய்யப் பணிக்கிறான். கடல் கடக்கும் வழியைக் கோரி, சமுத்திர பகவானை, புல்லின் சயனம் செய்து, வழிபடுகிறான். மூன்று நாட்கள் ஆன பிறகும் வழிவிடாத காரணத்தால் கோபமடைந்த இராமன், அம்பெய்து கடலை வற்றி வறளச்செய்ய, வருணன் தோன்றி, நளனைக் கொண்டு சேதுபந்தனம் செய்யுமாறு வேண்டுகிறான். செயல் நடைபெறுகிறது. வானரர்கள் ஆரவாரத்துடன் முதல் நாள், 14 யோசனை, அடுத்த நாள் 20, மூன்றாம் நாள் 21, நான்காம் நாள் 22, ஐந்தாம் நாள் 23 யோசனை அமைக்கின்றனர். பின் எல்லோருடனும் கடல்கடக்கிறான் இராமன்.

1.4.10 <u>இராவணன் வானரப்படையைப் பற்றிக் கேட்டலும் ஒற்றர்கள் செயலும்:</u>

வானரப்படை சமுத்திரம் கடந்து மற்றொரு சமுத்திரம் போன்று பரவிய பான்மையை இராவணன் உணர்கிறான். படையின் வலிமையை அறிந்து வர சுகன், சாரணர் ஆகிய ஒற்றர்களை அனுப்புகிறான். அவர்கள் வானவர் வேடம் புனைந்து செல்லவே, வீடணன் தடுக்கிறான். வானரர்கள் அவர்களைப் பிடித்து, காலும் கையும் கட்டி, இராமர் முன்னிலையில் நிறுத்துகின்றனர். அவர்கள் வந்த காரணம் கூற, படைகளைக்காண இராமன் அனுமதி நல்கிறான். படை

வீரர்களான மைந்தன், தாரன், திரும்மன், சாம்பவான் இவர்களை அறிமுகப்படுத்துகிறான். ஒற்றர்கள் படைபலத்தை உணர்கிறார்கள்.

### 1.4.11 ஒற்றர் உரையும் இராவணன் செயலும்:

சுகசாரணர்கள் பிற வானரங்கள், வீடணன், இலக்குவன், இராமன் போன்றவர்களின் வலிமையை வருணித்து, இராவணனுக்குக் கூறுகின்றனர். சீதையை இராமனுக்கு அளிக்குமாறு அறிவுரை கூறுகின்றான். அது கேட்டுக்கோபமடைந்த இராவணன், ஒற்றர் சொல்லை வெறுத்து, மாயையால் இராவணன், அத்திரமும் சிலையும் எடுத்து 'சிலையும் தலையும் இராமனுடையது' எனக்கூறிச் சீதையின் முன்போய் நின்றான்.

### 1.4.12 இராவணன் மாயச்செயலும் மகுடபங்கமும்:

இராமனின் தலையையும், வில்லையும் காட்டுமாறு மாயையான வித்திச்சுவிடம் கூற, சீதை தலையையும், வில்லையும் கண்டு வருந்துகிறாள். சரமதேவி உண்மையை உணர்த்தி, ஆறுதல் கூறுகின்றாள் - அமைச்சர்கள் அறிவுரைப்படி, இராவணன் சுக்ரீவனிடம் ஒரு தூதனை அனுப்புகின்றான். தூதுவன் "வானரப்படை மலைகடந்து வந்திருக்கிறது" என்கிறான். இராவணன் படையைக் காண்கிறான். சுக்ரீவன் சுவேல மலையிலிருந்து மேலெழுந்து தாவி, இராவணனைத் தாக்குகிறான். அவனுடைய மகுடத்தைப் பற்றி இராமன் காலடியில் வைக்கிறான். இராமன் அச்செயலைக் கண்டிக்கிறான். "சீதையை அபகரித்த தசமுகனைக் கண்டபோது பொறுமையிழந்து இவ்வாறு செய்தேன்" என்கிறான்.

### 1.4.13 இலங்கை முற்றுகையும் அங்கதன் தூதும்:

இராவணன் கோட்டைக்குள் இருப்பதைக் கண்ட வானரங்கள், இலங்கை அகழியைத் தாக்குகின்றனர். நான்கு திசைகளிலும் சுற்றி வளைக்கின்றனர். நீலன், மைந்தன், துவதன் முதலியோர் அநேக ஆயிரம் படையுடன் கோட்டையின் கிழக்குக் கோபுர வாயிலிலும், சுசன் முதலிய ஐவருடன் அங்கதன் தெற்கு வாயிலிலும், உறுமன், பிரகசன், பிரமாதி - மேற்குக் கோபுர வாயிலிலும், அமலன், காகுந்தன், வானரருடன் வியீடணன் வடக்குக் கோட்டை வாயிலிலும் நிற்கின்றனர். சுக்ரீவனிடத்தில் ஒற்றன் ஒருவன் இராவணன் சமாதானம் செய்ய வேண்டிய போது, தக்க பதிலைச் சுக்ரீவன் அளிக்கிறான். செய்தி கேட்டுக் கோபமடைந்த இராவணன், "அங்கதனும் இராம இலக்குவரும் கூறியதென்ன?" என்று கேட்கிறான். வானரப்படையின் நிலையை விவரித்து, இலங்கையைத் தாக்கத் தயாராக இருக்க ஆணையிட்ட செய்தியைக் கூறுகின்றான். இராவணன் தனது படைத்தலைவர்களுக்குப் போருக்குத் தயாராகக் கட்டளையிடுகின்றான் அப்போது இராமன் அங்கதனைத் தூதாக அனுப்புகிறான். 'சீதா தேவியை விடுக அல்லது போர்செய்க' என்னும் தூதுரையோடு இராவணன் அவையில் அங்கதன் போய் நிற்கின்றான்.

### 1.4.14 இலங்கை முதல் போர்த்துவக்கம்.

அங்கதன், இராவணன் அவையில் சென்று இராமனின் தூதுரையைக் கூறுகின்றான். இலங்கைவேந்தன் அங்கதனைப் பிடித்துக்கட்ட ஆணையிடுகின்றான். பிணைக்கவந்த அரக்கர்களைக் கொன்று, இராமபிரானின் காலடியில் விழுந்து வணங்குகிறான். இராவணன், போருக்கு தயார் என்னும் பதிலுரைக்கூறுகின்றான். இராமன் போர் செய்ய முடிவு செய்கின்றான். சுக்ரீவன் படையைத் தயார் செய்து போருக்குத் தயாராகின்றான். வானரப்படைக்கும் அரக்கர் படைக்கும்

போர் நடக்கிறது. அங்கதன் இந்திரசித்தையும், அனுமன் சம்புமாலியையும், சுக்ரீவன் அப்பிரரயதனையும் தாக்குகின்றனர். அசனி பிரபன், துவித்திரனையும் நீலன் நிகும்பனையும், மைந்தன் வச்சிரமுட்டியையும், தம்பாதி பிரசங்கனையும், விபீடணன் மித்திருக்கனையும், இலக்குவன் விருபாட்சனுடனும் போரில் முடற்றுகின்றனர்.

1.4.15 இந்திரசித்தின் நாகபாசப்போர்:

இராமனுக்கு நேராக சம்பதக்கனன், யக்ஞகோபன், அக்கினிகேது, இரசுமிகேது ஒன்றாகச் சேர்ந்து எதிர்க்கின்றனர். சம ஆற்றலுமுள்ள பனசன் வித்யுச்சிகவனை எதிர்க்கிறான். நளன் புரதாபனை எதிர்க்கிறான். இரவுப் போரில் அரக்கர்கள் யசமதரு, மகாமார்ச்சுவன் போர் செய்கின்றனர். போரில் மறைந்து நின்று இந்திரசித்து எய்த நாகப்பாணத்தால் இராம-இலக்குவரும் வீரர்பலரும் நிலத்தில் விழுகின்றனர். இந்திரசித்து வெற்றி அறிவிப்பாக இதனைத் தந்தையிடம் தெரிவிக்கிறான்.

1.4.16 நாகபாசவிடுதலை:

இந்திரசித்து இராமன்படையை வென்றமை கண்டு இராவணன் மகிழ்கிறான். இலங்கையை அலங்கரித்து, சீதையை விமானத்தில் ஏற்றி போர்க்களத்திற்குக் கொண்டு வருகின்றான். இராமலக்குவர் உணர்வற்று நிலத்தில் கிடப்பதைக்கண்டு, அவர்கள் இறந்ததாக எண்ணி அவள் துக்கமடைகிறாள். திரிசடை இராமனின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கூறி, விமானம் விதவைகளைத்தாங்காது என்று கூறி, அவர்கள் இறக்கவில்லை என்னும் உண்மையைக் கூறிச்சமாதானப்படுத்துகிறாள். அப்போது வானில் கருடன் வருகிறான், அதன் நிழல் பெற்றதும், பிணைத்தை விட்டு அம்புகள் மறைகின்றன.

1.4.17 இராவணன் நாகபாச விடுதலை அறிதல்:

வீரர்கள், மயக்கம் தெளிந்த இராமனை வணங்கி, மீண்டும் துன்பம் வராதிருக்க இராமபாதம் தடவி, பின் வானரப்படைத் தீப்பந்தங்களால் தாக்கத் தொடங்குகின்றன. விவரம் அறிந்துவர இலங்கை வேந்தன் அசுர வீரனை ஏவுகிறான், நடந்த செய்தியையும் வீரர்களின் ஆர்ப்பரிப்பையும் பற்றிக் கூறுகிறான் அசுரன். இராமஇலக்குவருக்கு ஒன்றும் விளையாத நிலையை நினைந்த இராவணன் வருந்துகிறான்.

1.4.18 அனுமன் தாம்ராக்கன் போர்:

இராவணனின் கட்டளைப்படி தாம்ராக்கன், யானை, குதிரை, கழுதை, ஒட்டகங்கள் பெரும்படையுடன் போருக்கு புறப்படுகின்றான். பல தீய நிமித்தங்கள் கண்டபோதும், பொருட்படுத்தாது அவன் செல்கிறான். மேற்குப்புறவாயிலில் போர் நடக்கிறது. கடுமையாகப்போராடியும் இறுதியில் அனுமனால் கொல்லப்படுகிறான்.

1.4.19 வச்சிரதம்மிட்டிரன் அங்கதன் போர்:

வச்சிரதம்மிட்டிரன், இராவணனை வணங்கிப் போருக்குப் புறப்படுகிறான். பல தீய சகுனங்கள் வந்தபோதும் பொருட்படுத்தாமல் போகிறான். தெற்குக் கோபுர வாயிலில் போர் நடக்கிறது. அங்கதன் தனது வாளால் வச்சிரதம்மிடிரன் தலையை அறுத்து பூமியில் அலங்காரமாக வைக்கிறான்.

1.4.20 அகம்பன் நளன் முதலியோர் போரிடுதல்:

அங்கதன் வச்சிரதம்மிடிரனைக் கொன்ற செய்தி அறிந்த இராவணன் அகம்பனிடம் போருக்குச்செல்ல ஆணையிடுகிறான். அவன் இராவணனை வணங்கிப் புறப்படும் வேளையிலும் தூர்ச்சகுனங்களைக் காண்கிறான். வானரரும் அசுரரும்

போர் செய்கின்றனர். வானரர் பின்வாங்கும்போது நளன், மைந்தன், குமுதன் முதலியோரும் படையுடன் அகம்பனைத் தாக்குகின்றனர். அவர்களை அகம்பன் எளிதில் பின்னடையச் செய்கிறான். அவ்வேளையில் அனுமன் தாக்குகிறான். அகம்பன் சரமாரியால் அனுமன் உடலெங்கும் அம்புகளை நிறைக்கிறான். அனுமன் பெருமர மொன்றால் எறிந்து அகம்பனை வீழ்த்துகிறான்.

1.4.21 அகம்பன் அனுமன் போர்:

அனுமன் பெருமரமொன்றால் அகம்பனை அடித்து மேல்நோக்கி எறியவே அவன் உடல் பல கூறாகச் சிதைகிறது. மாருதியை இராமஇலக்குவர் புகழ்கின்றனர். அகம்பன் இறந்த செய்தியை அறிந்த அசுரர் தலைவன், பெருந்துன்பமடைகிறான். மறுநாள் காலை அசுரதளபதி, பிரகத்தனிடம் படைதிரட்ட ஆணையிடுகிறான்.

1.4.22 பிரகத்தன் வானரர் முதலியோர் போர்:

பிரகத்தன் படையை ஆயத்தப்படுத்தி, போருக்குப் புறப்படுகிறான். பல தீய நிமித்தங்கள் கண்டும் பொருட்படுத்தாமல் போர்க்களம் அடைகிறான். இராமனின் கேள்விகளுக்கு வீடணன் பிரகத்தன் பெருமைகளை விளக்கிக் கூறுகிறான். பின் வானர அசுரர் போர் தொடங்குகிறது. தீவ்வாதி, வானரர், நரந்தாகாதி, சமுன்னதன், சகிவன்மார், மகாநாதன் முதலிய அரக்கர்கள் பலர் மரத்தால் எறியட்டு வீழ்கின்றனர். மகாநாதனை சாம்பவான் கல்லால் எறிந்து கொல்கிறான்.

1.4.23 நீலன் பிரகத்தன் போர்:

மைந்தன் கும்பகனைக் கொல்கிறான். நான்கு அமைச்சர்கள் இறந்துபடவே, பிரகத்தனுக்குக் கோபம் வருகிறது. நீலன் பிரகத்தனை எதிர்க்கிறான். போர் பெருகுகிறது. நீலன் எறிந்தகல்லால் பிரகத்தன் இறந்து வீழ்கிறான். பயந்தோடிய

அசுரவீரர்களிடமிருந்து பிரகத்தன் இறந்த செய்தியறிந்து, இராவணன் தேர் ஏறிப், போருக்கு வருகிறான். அசுர வீரரைக்கண்டு இராமன் யார் என வினவ, விபீடணன் அவனது பெரும் பெருமையையும் கூறுகிறான்.

1.4.24 விபீடணன் இராமனுக்கு இராவணன் முதலியோர் பற்றிக் கூறல்:

பெரும்படையுடன் இராவணனே ராமனுடன் போருக்குப் புறப்பட்டபோது "யாரிவர்கள்?" என்ற இராமனின் கேள்விக்கு ஒவ்வொருவர் பற்றியும் விரிவாகக் கூறுகிறான், விபீடணன். இதைக்கேட்ட இராமன் "இவர், எவர்?" என்கிறான். "எவ்வாறு போருக்கு வந்தாலும் இராவணனின் பத்துத்தலைவகையையும் அறுத்துத் தரையிலிட்டு உருட்டி என் கோபம் தீர்ப்பேன்?" எனச் சூளுரைக்கின்றான். இவ்வாறு கூறி, வில்லேந்தி, முன் நடந்தபோது, இராவணன் படைத்தலைவர்கள் புடைசூழ, இலங்கையை அடைகின்றான்.

1.4.25 இராவணன் பொருதல்:

இராவணன் போரிடுகிறான். அம்புபட்டு சுக்ரீவன் நிலத்தில் வீழ்கிறான். பயந்துபோன வானரர்கள் இராமனைச் சரணடைகின்றனர். இராமன் இராவணனுடன் போரிடச் செல்ல, இலக்குவன் போர்செய்யும் உரிமை கேட்கிறான். இராவணன் போர்த்திறமைகளை எடுத்துக்கூறி, அறிவுரை கூறுகிறான். இலக்குவன் போருக்குப் புறப்படுகிறான். அதற்குள் இராவணனுக்கும் அனுமனுக்கும் போர் தொடங்குகிறது. இராவணன் தாக்குதலால் அனுமன் விழ, நீலன் போரிடுகிறான். நீலன் இராவணனின் கொடி, வில், முடி போன்றவைகளின் மீதேறி நடனமாடி, அவனைப் பயமுறச் செய்கிறான்.

1.4.26 இராவணனுடன் நீலன் அனுமன் பொருதல்:

போரில் வெல்ல முடியாததால் இராவணன் நீலனை ஆத்திரத்தால் வீழ்த்துகிறான். அதற்குள் இலக்குவன் வந்து சேருகிறான். அவர்களிடையே நடந்த விவாதத்தின் பின், போர் தொடங்குகிறது. தங்கள் திறமைகளை இருவரும் காட்டுகின்றனர். இலக்குவனை எதிர்த்து நிற்க இயலாமல், வேல் எறிந்து இராவணன் வீழ்த்துகிறான். மண்ணில் வீழ்ந்த இலக்குவனை எடுத்துச்செல்ல நினைத்த இராவணனுக்கு, அவனது உடலை அசைக்கக்கூட முடியவில்லை. அனுமன் பூப்போல இலக்குவனை எடுத்து, இராமன் முன் கொண்டு கிடத்துகிறான். அப்போது வேல் மீண்டும் இராவணனைச் சென்றடைகிறது. இராமன் போரிடச் சென்று "மான் விழியைத் திருடிய உன்னை எவர் காப்பாற்றுவர்? ஓராண்டு காலமாக என்மனம் உன்னை நேரில் காண ஆசை கொண்டுள்ளது" என்கிறான்.

1.4.27 இராமன் இராவணன் போர்:

"உன் வாழ்நாளை இதோடு முடிப்பேன்" என்கி கூறிக்கொண்டு போரிடச் சென்ற இராமனை அனுமன் தோளில் ஏற்றுகிறான். அதைக்கண்டு கோபமடைந்த இராவணன் அனுமனின் நெஞ்சிலும் தோளிலும் அம்பெய்கிறான். அதைத்தடுத்து, ஓரம்பினால் இராவணனின் மணிமுடியை வீழ்த்துகிறான். அயோத்தி தலைவன் மேலும் கொடி, வில் முதலியவற்றைப் பொடியாக்கவும் செய்கிறான். "உன்னை ஏழு உலகத்திற்கும் பங்கிட்டு, கழுகும் பேயும் தின்னும் முன்பு எதிர்த்துப்போரிடுவாய்" என்னும் உரை கேட்ட இராவணன், தன் விதியை நினைத்து, இலங்கைக்குள் ஒளிந்து உறங்கும் கும்பகர்ணனை உணர்த்த, ஆணையிடுகிறான்.

1.4.28 உறங்கும் கும்பகர்ணனை உணர்த்தல்:

"என் மனத்துயரகற்ற கும்பகர்ணனை உணர்த்தவும்" என்ற இராவணனின் ஆணை கேட்ட அசுரர்கள், அவனைத் துயிலெழுப்ப முயற்சிக்கின்றனர். மாமிசம், தேன்,

பால், சந்தனம், வாசமாலை முதலிய பொருட்களைக் கொண்டு வந்து துயிலெழுப்ப முயற்சிக்கின்றனர். இந்நிலையிலும், இசைக்கருவிகளை இசைத்தும், பயனில்லை. நீராட்டியும் துயிலெழாது கண்ட அசுரர்கள், மரம், ஈட்டி, கதை, குந்தம், இரும்புலக்கை முதலியவற்றால் தாக்குகின்றனர்.

1.4.29 கும்பகர்ணன் உரை:

அசுரர்களின் உலக்கைத்தாக்குதலால் உணர்வு பெறுகின்றான்; கும்பகர்ணன். அதைக்கண்டு அசுரர்கள் அஞ்சி நடுங்குகின்றனர். முன்படைத்திருந்த உணவுப்பொருட்களை உண்டபின் கும்பகர்ணன், "உணர்த்தியது ஏன்?" என்று வினவுகிறான். வானரர்கள் இராமஇலக்குவரும் வானரரும் இலங்கையைத் தாக்கியதும், ஒருவாறு தப்பித்து மீண்டுவந்தமையும் கூறி, 'இராவணனின் ஆணைப்படியே தங்களை உணர்த்தினோம்.' என்று உரைக்கின்றார்கள். கும்பகருணன் 'வானர இனத்தையும் இராமலக்குவரையும் அழித்து, இராவணனின் தாள்களை வணங்குவேன்' என்று சூளுரைக்கின்றான். அண்ணன் கூறிய அனைத்தையும் கேட்டபின், "வேண்டுவன யான் செய்வேன்" எனத் தொழுதபடிக் கூறினான்.

1.4.30 கும்பகர்ணன் இராவணனுக்கு அறிவுரை கூறல்:

கைகூப்பிய வண்ணம் கும்பகர்ணன் "இராமஇலக்குவரும் வானவரும் என் பசிக்கு உணவாவார்கள். அவர்களின் கதைமுடிந்தால் ஜானகி உங்களைச் சரணடைவாள் ஆனால், உத்தமர் நல்லவர் மீது பகைகொள்ளுதல் நன்றல்ல; மாற்றான் தாரத்தை விரும்புதல் தகாது. சீதையை இராமனுக்கு அளித்தல் நல்லது. அவன் தவறு செய்யவில்லை", என்கிறான். இதனைக் கேட்ட இராவணன், கோபமடைகிறான். அண்ணனின் கோபம் கண்டு சூலமுமேந்தி "இராமஇலக்குவரையும் வானரரையும் கொன்று தின்று விளையாட வேண்டும்" என்று கூறிப்புறப்பட, கும்பகர்ணனின் உடலை இராவணன் ஆபரணங்களால் அலங்கரிக்கிறான்.

1.4.31 இராமன் கும்பகர்ணனை அறிதல்:

போருக்குக் கும்பகர்ணன் புறப்படுகிறான். அவன் வரவைக் கண்ட வானரர் வியப்புற்றுச் சிலையாகின்றனர். இராமன் வீபீடணனிடம், "யாரிவன்?" என்று வினவுகிறான். அவன் கும்பகர்ணனின் வீரவரலாற்றை விவரிக்கிறான். அவற்றைக் கேட்ட இராமன் போருக்குப் புறப்படுகிறான். இலக்குவன் அண்ணனை வற்புறுத்தித் தனக்குப் போரிட அனுமதி வேண்டுகிறான். இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும்போது, கும்பகர்ணன், "உங்கள் யாவரையும் அழிப்பேன்" என்றபடி பாய்ந்து வருகிறான். சில தீய சகுனங்களை அவன் காண்கிறான். அவற்றைப் பொருட்படுத்தாமல் வானரர்களை அழித்தபடி அண்டையில் நெருங்க, நீலன் எதிர்க்கிறான்.

1.4.32 கும்பகருணன் வானரர் போர்:

நீலனும் வானரரும் கும்பகருணனை எதிர்த்தும், அவர்கள் தோற்று விடுகின்றனர். வானரர்கள் பயந்து நாற்றிசையும் ஓடுகின்றார்கள். அவரைத் தடுத்து நிறுத்திய அங்கதன், அவர்களின் பயம்பற்றி எள்ளி நகையாடி, ஊக்க மூட்டுகின்றான். அவர்கள் மீண்டும் கும்பகருணனுடன் போர் செய்கின்றனர். அவர்களைத் தன் கதையால் அடித்து விரட்ட, அனுமன் அங்கு வருகிறான். தன்னை எதிர்த்த மாருதியைத் தன் சூலத்தால் வீழ்த்துகிறான் கும்பகருணன்.

1.4.33 அனுமன் கும்பகருணன்போர்:

அனுமனுக்கும் கும்பகருணனுக்கும் ஏற்பட்ட போரில் அனுமன் வீழ்கிறான். உடனே நீலன் முதலியோர் மலைகளை எறிகின்றனர். அத்தனையும் வீணே. ஆயிரக்கணக்கான வானரர்கள் ஒன்றாக அவனைத் தாக்குகின்றனர். அவர்களை

வாரி விழுங்குகிறான் அவன். கும்பகருணனின் காதுகள் வழியாக தேவர்கள் வெளியே வருகின்றனர். அப்போது அங்கதன் வந்து எதிர்க்கிறான். ஒரு மலையை எறிகிறான். அது அசுரன் நெற்றியில் பட்டுத் தூளாகிறது. அங்கதனைச் சூலத்தால் தாக்க, விலகிக்கொள்கிறான். அங்கதன் கையால் கும்பகர்ணனைத் தாக்கி, மயங்கி வீழ்கிறான். உடனே சுக்ரீவன் எதிர்க்கிறான். அவனையும் சூலத்தால் தாக்குகிறான். இடையே நுழைந்த அனுமன், அதனைப்பிடித்து ஒடித்து விடுகிறான். கும்பகருணன் ஒரு மலையால் சுக்ரீவனைத்தாக்க, அவன் மயங்கி வீழ்கிறான். வீழ்ந்த சுக்ரீவனைக், கும்பகருணன் எடுத்துச்செல்லுகிறான். இனி செய்வது பற்றி ஆலோசிக்கிறான் அனுமன்.

1.4.34 கும்பகருணன் வானரப் போர்:

தனக்கு ஆபத்துவராமல் சுக்ரீவன் பார்த்துக்கொள்ளுவான். வானரப் படையைத்தான் ஒழுங்குபடுத்தவேண்டும் என்று எண்ணி, அனுமன் வானரப்படையைக் காக்கிறான். கும்பகருணன் வெற்றியோடு வருவது கண்டு, மாளிகையிலிருந்து பெண்கள் பூக்கள் சந்தனம் போன்றவற்றைத் தூவுகின்றனர். அவைபட்டு மயக்கம் தெளிந்த சுக்ரீவன், அசுரனின் மூக்கும் காதும் கடித்துப்பிடுங்கிக்கொண்டு ஆகாயத்தில் பாய்கின்றான். கோபமுற்ற கும்பகர்ணன், உலக்கையும் எடுத்து மீண்டும் போர்க்களம் வருகின்றான். கடும்போர் நடக்கிறது. வானரர்கள் பயந்துபோய், இராமனைச் சரண்அடைகின்றனர்.

1.4.35 கும்பகருணன் வதை போர்:

வானரர் இராமனைச் சரணடையும் வேளை, இலக்குவன் கும்பகர்ணனுடன் போருக்குப்போகிறான். இலக்குவனின் வரவு கண்டு மகிழ்ந்த கும்பகருணன், இராமனைத் தனக்குக் காட்டித்தரக் கேட்கிறான், இராமனிடம் புறப்பட்ட

கும்பகர்ணன், வழியில் கண்ட வானரரையெல்லாம் தாக்கி, விழுங்கியும், இரத்தம் குடித்து அலறச் செய்யவும், செய்கிறான். மன்னர் கோமான் அம்பு மழை பொழிந்தான் என்றாலும், கும்பகருணன் சிறிதும் பின்னடையவில்லை. அப்போது இலக்குவன், இராமன் அருகே சென்று, அரக்கனுக்குப் பைத்தியம் பிடித்ததுபோல் நடப்பனவற்றைக் கூறுகிறான். இராமனுக்கும் கும்பகர்ணனுக்கும் கடும்போர் நடக்கிறது. மன்னர் கோன், சங்கரன் கணையால் கும்பகர்ணனின் தலையை அறுக்கிறான். கணைவில் நாணியில் ஒலிக்கிறது. தேவர்கள் மலர்மாரி பொழிகின்றனர். எஞ்சிய அரக்கசேனைகள் கும்பகருணன் இறந்ததை இராவணனிடம் தெரிவிக்கின்றனர்.

### 1.4.36 இராவணன் அவலமும் சூளுரையும்:

கும்பகருணன் இறந்ததையறிந்த இராவணன் மயங்கி வீழ்கிறான். மயக்கம் நீங்கியெழுந்த அவன் மிகவும் வேதனைப்படுகிறான். 'கும்பகருணன் இறந்ததால் வருந்தும் இலங்கையின் கண்ணீரை இராமனைப் போரில்வென்று நான் துடைப்பேன்' என்று அவன் சூளுரைக்கிறான். கேட்ட அவனது மகன் திரிசிரன் தந்தைக்குப் பலவாறு ஆறுதல் கூறுகிறான்.

### 1.4.37 இராவணன் மக்கள் போருக்குப் புறப்படுதல்:

"இராமனை எதிர்த்துக் கொல்லப்புறப்படுவேன்", என்று திரிசிரன் கூற, அதைக்கேட்டு அதிகாயன், தேவாந்தன், நராந்தகன் போன்றவர்கள் தாமாகவே போருக்குத் தயாராகின்றனர். இராவணன் அவர்களை அணைத்து ஆசீர்வதித்துப்போருக்கு அனுப்புகிறான். மட்டுமல்ல; மாதாபார்சுவன், மகோதரன், மத்தன், உன்மத்தன் என்பவர்களைத் துணையாக அனுப்பவும் செய்கிறான். எல்லோரும் வேண்டிய தயாரோடு அடர்களத்துக்குச் செல்லுகின்றனர்.

"இவர் எவர்?" என்று இராமன் கேட்க வீபீடணன் அவர்களைப் பற்றி விளக்கிக் கூறுகிறான். அதற்குள் அசுரர்கள் வானரரை எதிர்க்கின்றனர்.

1.4.38 வானரர் அரக்கர் கோன் போர்:

பல்வேறு ஆயுதங்களோடு வானரரும் அரக்கரும் போரிடுகின்றனர். பெருநாசம் இருபக்கமும் விளைகின்றது. வானரரின் வெற்றிகண்டு பனசன், அசுரர்களைக் கடுமையாகத் தாக்குகின்றான். அதைப்பார்த்து உன்மத்தன் எதிர்த்துப் போராடுகிறான். பனசனின் தாக்குதலில் அந்த அசுரன் வீழ்கிறான். மத்தனோடு துவிதன் போரிடுகிறான். மத்தன் துவிதனை மலையாக எறிந்து விழச்செய்கிறான்.

1.4.39 பனசன் உன்மத்தன் போர்:

பனசனும் உன்மத்தனும் போரிடுகின்றனர். இறுதியில் பனசன் உன்மத்தன் தலையைக்கொய்து தரையிலிடுகிறான். அதுகண்டு நராந்தகன் போருக்கு வருகிறான். வானரர் பயந்து வானரத்தலைவனின் தாள் பணிகின்றனர். சுக்ரீவன் நராந்தகனோடு போரிட, அங்கதனை அனுப்புகிறான். கடும்போர் நடக்கிறது. அங்கதன் நராந்தகனைக் கொல்கின்றான். அதுகண்டு தேவாந்தகனும் மகோதரனும் வந்தெதிர்க்கின்றார்கள்.

1.4.40 வானரர் திரிசிரன் போர்:

நராந்தகவதத்திற்குப் பின் மகோதரன், தேவாந்தகன், திரிசிரன் போன்றோர் போரிடுகின்றனர். அங்கதன் அவர்களுக்கு நேரே மரமெடுத்து எறிகிறான். அம்மரத்தை அம்புகளால் முறித்தெறிகிறான் திரிசிரன். பின் அங்கதன் கல்லாலும் மலையாலும் போரிடுகின்றான். அசுரர்கள் அவற்றைப்

பொடியாக்குகின்றனர். இப்போரில் அங்கதன், போர் யானையின் கன்களைக்குருடாக்கி கொம்பெடுத்துத்தேவாந்தகனைத் தாக்குகிறான். தளர்ந்து விழுந்த தேவாந்தகன் எழுந்து, உலக்கையால் அங்கதனைத் தாக்குகின்றான். திரிசிரன் மூன்று அம்புகளால் வானரனின் நெற்றியைப் பிளக்கிறான். மகோதரனும் தொடர்ந்து அம்பெய்கின்றான். அவற்றை யெல்லாம் மரங்களால் தடுக்கிறான். அனுமனும் நீலனும் அங்கதனுக்குத் துணையாக வருகின்றனர். மகோதரனும் திரிசனும் நீலனை நோக்கி, அம்பு மழை பொழிகின்றனர். திரிசிரனின் தேரோட்டி அனுமனை அடிக்க, தேவாந்தகனை, மாருதி முட்டியால் தாக்குகிறான். தேவாந்தகன் உயிரற்று வீழ்கிறான். பின் அனுமனும் திரிசிரனும் போரிடுகின்றனர். திரிசிரன் எறிந்த வேலைப்பற்றி, அனுமன் அலறுகிறான்.

1.4.41 அனுமன் திரிசிரன் போர்:

அனுமன் வேலொடித்தபின், திரிசிரன் வாளால் போரிடுகிறான். முட்டியால் அனுமன் தாக்க, நிலத்தில் வீழ்ந்த திரிசிரன் மூன்று தலைகளையும் வாளால் அறுத்து நிலத்திடுகிறான். பிறகு, போர் மகோதரனுக்கும் நீலனுக்குமிடையே நடக்கிறது. அதில் அசுரன் விழுகிறான். அப்போது மகாபார்சுவன் போருக்கு வருகிறான். அங்கு வந்த ரிசபவனுக்கும் அவனுக்கும் போர் நடக்கிறது. அப்போதும் அசுரன் அழிகிறான். அது முடிந்ததும் அதிகாயன் போருக்கு வருகிறான். "யாரிவன்"? என்று இராமன் வினவ, வீபீடணன் அவனைப்பற்றி விவரிக்கிறான்.

1.4.42 வானரர் அதிகாயன் போர்:

வீபீடணன் அசுரதலைவன் அதிகாயனைப் பற்றிக் கூறி முடிப்பதற்குள் அதிகாயன் போருக்கு வந்து விடுகிறான். அதிகாயனும் வானரரும் போரிடுகின்றனர்.

அசுரன் இராமனைப் போருக்கு அழைக்கிறான். அவர்கள் இருவரும் சொற் போருக்குப்பின், விற்போர் நடத்துகின்றனர்.

1.4.43 இலக்குவன் அதிகாயன் போர்:

அதிகாயனுக்கும் இலக்குவனுக்கும் இடையே போர் நடக்கிறது. எவர்க்கும் எவரையும் தோற்கடிக்க முடியவில்லை. அவ்வேளையில் சமீரணதேவன் வந்து அதிகாயனுக்குப் பிரம்மாத்திரம் தொடுக்கும்படிக் கூற, இலக்குவன் அவ்வாறே செய்து, கவசத்தை உடைக்கிறான்.

1.4.44 அதிகாயன் வதை:

இலக்குவனின் பிரம்மாத்திரத்தை முறிக்க அதிகாயன் பல்வேறு அம்புகளைத் தொடுத்தான். எனினும், பயனற்றுப் போயின. வானவர் இராமன் திருவடியில் விழுகின்றனர். அவன் பிரம்மாத்திரம் பட்டு இறக்கின்றான். அதிகாயனின் தலையை எடுத்து இராமனின் முன் வைக்கின்றனர். அதுகண்ட அரக்கர்கள் அஞ்சி ஓடுகின்றனர். இராவணன் அதிகாயன் இறந்த செய்தி கேட்டுப் பெருந்துன்பமடைகின்றான். வானரரின் வெட்டுண்ட உடல்கள் ஒன்றாகின்றன. போருக்குச் சென்று வீரமரணமடைந்த படைத்தலைவர்களை நினைந்து வருந்துகிறான் இராவணன்.

1.4.45 இந்திரசித்துப் போருக்குப் புறப்படுதல்:

துன்பத்தில் புலம்பும் இராவணனின் சொற்கள் தொடர்கின்றன. இராவணன் தனது இரண்டு சகோதரர்களும் பலவீரர்களும் சென்று போரில் இறந்தமை கூறி வருந்துகின்றான். இதுகேட்ட இந்திரசித்து 'போரிட்டு மனிதர்களையும் வானரரையும் அடக்குவேன்' என்று உரைக்கிறான்.

1.4.46 இந்திரசித்தின் சூளுரை:

இந்திரசித்து தொடர்ந்து இராவணனிடம் கூறுகிறான். 'எனக்குச் சமமானவர் எவருமில்லை, என்பதை நிலைநாட்டுவேன்' என வஞ்சினம் கூறுகிறான். 'இராமலக்குவரையும் வானரவீரரையும் கொன்று, இனிமேல் எதிரிகளால் தொல்லையில்லாமல் செய்வேன்' என்கிறான். இந்திரசித்தன் பிறகு போர்க்களத்திற்குப் புறப்படுகிறான். அங்கு வைத்து ஒரு வேள்வி நடத்துகிறான். பிரம்மாவின் அருள்பெற்று இந்திரசித்து மீண்டும் போரிடுகிறான். வானரப்படை அழிகிறது.

1.4.47 வானரர் இந்திரசித்தன் போர்:

இந்திரசித்து போரைத் தொடர்கிறான். வானரப்படையின் முன்னணி வீரர்கள் வீழ்கின்றனர். எவராலும் ஒன்றும் செய்ய முடியவில்லை. அங்கதன், அநுமன், கோமுகன், சதபலி, கும்பன், தம்பம், ஜோதீர்முகன், வித்திடிரன், சுமுகன், துன்முகன் - முதலிய வானரத்தலைவர் விழுகின்றனர். 'எங்கிருந்து அம்பு வருகின்றதென்றே தெரியவில்லையே" என்கிறான் இராமன். இறுதியில், இராம இலக்குமரையும் அம்பால் வீழ்த்துகிறான் இந்திரசித்து. பின்னர் இலங்கை மாநகருக்குள் புகுகிறான்.

1.4.48 வீடணன் அநுமன் சாம்பவான் உரை:

வானரப்படையில் பெரும்பான்மையோரும் இராமலக்குவரும் வீழ்ந்தமைகண்டு, மீதியுள்ளவர் போர்க்களம் விட்டு ஓட முனையவே, அவர்களைத் தடுத்து, விபீடணன் ஆறுதல் சொல்லுகிறான். பின் அநுமனைக் கண்டுபிடிக்க பெரும்பறையடிக்க, சாம்பவானைத் தேடிக்கண்டுபிடிக்கின்றனர். அநுமன் சாம்பவானின் கால்களில் விழுந்து வணங்குகிறான். 'நீயிருந்தால் வானரரையும் இராமலக்கவரையும் காப்பாற்ற முடியும்' எனச் சாம்பவான் கூறுகிறான்.

### 1.4.49 அநுமன் கைலாயம் செல்லல்:

இராம இலக்குவரையும் வானரரையும் உயிர்பெற்றெழச்செய்யும் மூலிகை கொண்டுவர அநுமன் செல்லவேண்டும் என் சாம்பவான் கூறுகிறான். கைலாயம் செல்ல வழி சொல்லுகிறான். அங்குள்ள மருந்துகளின் பெயர்களான விசல்பகரணி, சந்தானகரணி என்பவற்றைக்கூறுகிறான். அநுமன் சாம்பவான் உரைத்தது போன்ற பகுதிகளைக்கண்டுபிடிக்கிறான்.

### 1.4.50 அநுமன் மூலிகை மலையை எடுத்தல்:

அநுமன் மூலிகை மலையை அடைந்து மருந்துச்செடிகளைத்தேடுகிறான். உடனே, அவை மறைந்துவிடுகின்றன. கோபங்கொண்ட அநுமன் "இது இராமபிரானின் தேவைக்காக எடுக்கிறேன். உடனே தென்படாவிட்டால் மலையைப் பெயர்த்துக் கொண்டு போவேன்" என்கிறான். மூலிகைகள் மறைந்தே இருப்பதால் அவையிருக்கும் மலைப்பகுதியைப் பெயர்த்துக்கொண்டு, ஒரு குடைபோல பிடித்துக் கொண்டு, இலங்கைக்கு வருகிறான்•வந்ததும் இராமஇலக்குவரும் வானரப்படையும் உணர்வும் உயிரும் பெற்றெழுகின்றவர். இறந்துபோன அசுரர்களின் உடல்கள் கடலில் எறியப்பட்டதால் அவர்கள் உயிர்பெறவில்லை. அநுமன் மீண்டும் மலைப் பகுதியை, அதுபெயர்த்த இடத்திலேயே கொண்டுபோய் வைக்கிறான். வானரர் தீப்பந்தங்களுடன் சென்று இலங்கைக்குத் தீ வைக்கின்றனர். அசுரப்பெண்கள் அழுது புலம்புகின்றனர்.

### 1.4.51 இலங்கையை அழித்தல்:

அரக்கர்களின் புலம்பலுக்குப்பின், சுக்ரீவன் அநுமனை அழைத்து, இலங்கையில் எங்கும் பாய்ந்து புகச்சொல்கிறான். இராவணன் மக்களுடன் நமக்கின் போருக்குப் போகலாமென்கிறான். அதற்குள், இராமன் நகரத்தை அம்பெய்து நாசமாக்குகிறான்.

அதைக்கண்டு, கும்பநிகும்பர் புறப்படுகின்றனர். பிசங்கன், கம்பனன் முதலானோர் துணைக்கு வருகின்றனர். யூபாக்கனும், சோணிதாக்கனும் அவருடன் சேர்ந்து கொள்ளுகின்றனர்.

1.4.52 போர்ச் செயல் இரவில் நடக்கிறது:

வானரர் அசுரரை எதிர்க்கின்றனர். அவர்கள் அசுரர்களைத் தகர்த்து எறிகின்றனர். அவ்வாறு இருட்டில் கொடும்போர் நடக்கின்றது. அதுகண்ட கம்பனன், வானரகுலத்தைக் கதையால் அடித்து வீழ்த்துகிறான். இரு படைகளுக்கும் பெரும்நாசம் விளைகின்றது. அங்கதன் கம்பனை எதிர்த்துப் பொருதுகிறான். அசுரனின் கதைத் தாக்குதலால் வானரர் மண்மீது சாய்கின்றனர். உடனே உணர்வுபெற்ற அங்கதன் ஒரு மலையெடுத்து எறிகிறான். அதுபட்டு, அவ்வரக்கன் சுருண்டு வீழ்கிறான்.

1.4.53 வானரர் அரக்கர் போர்:

கம்பனன் இறந்தபிறகு, சோணிதாட்சன் அங்கதனோடு போரிடுகிறான். இருவருக்கும் பயங்கரமான போர் நடக்கிறது. தேரும் மற்றும் அழிகிறது. சோணிதாக்சனின் வாளெடுத்து எதிரிகளைக் கொல்லுகிறான் அங்கதன். பிரசங்கன் அதுகண்டு எதிர்க்கிறான். யூபாக்கனும் வருகிறான். இருவரோடும் போரிடுகின்றான் அங்கதன். மைந்தனும் துவிதனும் அங்கதனின் துணைக்கு வருகின்றனர். பிரசங்கன் அங்கதனின் தொடையை வெட்டுகிறான். அங்கதன் அவன் தலையைக் கொய்து பூமியில் இடுகிறான். தம்பியான யூபாக்கன் அங்கதனோடு போரிட வருகையில், துவிதன் எதிர்த்து, அவனுக்கு அதிர்ச்சியளிக்கிறது. அப்போது கதையால் சோணிதாட்சன் தாக்க, அதைப்பிடுங்கி விடுகிறான் துவிதன்.

### 1.4.54 வானரர் அரக்கர் போர் தொடர்தல்:

துவிதனும் சோணிதாட்சனும் கடுமையாகப் போரிடுகின்றனர். இறுதியில் சோணிதாட்சனின் முகம் பலதுண்டாகிப் போர்க்களத்தில் வீழ்கிறது. மயிந்தன் யூபர்க்களைக் கொல்கிறான். அதுகண்டு கும்பன், எதிரிகளைத் தள்ளி மாற்றிக் கொண்டு, துவிதனுடன் போரிட வருகிறான். அம்புபட்ட துவிதன் வீழ்ந்தது கண்ட மயிந்தன் உதவிக்குவர, அவனும் கும்பனின் அம்புப்பட்டு, தளர்ந்து வீழ்கிறான். அதனைகண்ட அங்கதன், பாய்ந்து வருகிறான்.

### 1.4.55 அங்கதன் கும்பன் போர்:

அங்கதனும் கும்பனுக்குமிடையே போர் தொடர்கிறது. இருவரும் விட்டுக்கொடுக்காத போர் நடக்கிறது. கும்பன் பலவகை அம்புதொடுத்து அங்கதனைத் தளரச்செய்கிறான். இவ்விவரம் அறிந்த இராமன், மூன்று வானர வீரரை அனுப்புகிறான். அவர்கள் சென்று எதிர்த்தும், கும்பனை வெல்ல முடியவில்லை. அதனையறிந்து, சுக்ரீவன் சென்று கம்பனோடு போரிடுகிறான். அவர்களது போர் அதிபயங்கரமாக நடக்கிறது.

### 1.4.56 சுக்ரீவன் கும்பன் போர்:

சுக்ரீவனும் கும்பனும் போரிடுகிறார்கள். பல தந்திரங்களும் பயன்படுத்துகின்றனர். சுக்ரீவன் அசுரனைக் கடலில் எடுத்து எறிகிறான். அவன் நீந்திக் கரையேறி, வானரவீரனின் நெஞ்சைத் தாக்குகிறான். சுக்ரீவன் முட்டியால் கும்பனின் தலையைத் தாக்க, பலதுண்டுகளாகத் தரையில் வீழ்கிறான், கும்பன். நிகும்பன் அதனைக்கண்டு, ஆயுதங்களேந்தி வருகிறான். அதற்குள் அனுமன் வந்தெதிர்க்கிறான். அவர்கள் போரிடுகின்றனர். கும்பன் அனுமனை வாரியெடுத்துக் கொண்டுப்போகப் பார்க்கிறான். அனுமன், பிடியிலிருந்து தப்பித்து, அசுரன் நேரே பாய்கிறான்.

### 1.4.57 அனுமன் நிகும்பன் போர்:

அனுமன் நிகும்பனின் தலையை எடுக்கிறான். விவரமறிந்த இராவணன், மகராட்சனிடம் போருக்குச் செல்லக் கட்டளையிடுகிறான். துர்நிமித்தங்களைப் பொருள்படுத்தாமல் கராத்மஜன் போருக்குப்புறப்படுகிறான். வானரர் இராமனைச் சரண் அடைகின்றனர். மகராட்சசன் இராமனைப் போருக்கு அழைக்கிறான்.

### 1.4.58 இராமன் களத்தில் பொருதல்:

மகராக்சனன் சொற்களுக்கு இராமன் பதில் கூறுகிறான். அதுகேட்டு, இராமனை அசுரன் அம்பெய்கிறான். இராமன் அசுர அம்புகளை மழுகணையால் ஒடித்துத்தரையிலிடுகிறான். போர் சூடுபிடிக்கிறது. மகராக்சனன் சூலம் எடுக்கிறான். அதையும் முறித்துத்தரையில் இட்டபிறகு, இராமன் வெம்பகழி ஒன்றை எய்கிறான். அதுபட்டு அசுரன் இறந்து வீழ்கிறான்.

### 1.4.59 இந்திரசித்து போர்க்களம் புகுதல்:

மகராக்கன் இறந்த செய்தி அறிந்து இந்திரசித்து போருக்கு வருகிறான். இராவணனுக்கு விவரம் அறிவிக்கப்படுகிறது. அவனும் போருக்குப் புறப்படுகிறான். இலங்கை அசுரன் இந்திரசித்தை ஆசீர்வதித்து அனுப்புகிறான். மைதிலியை தேரில் எடுத்துவந்து எதிர்களைத் தாக்குகிறான், மேகநாதன். மாருதி அவனை எதிர்க்கிறான். இராவணி சீதையை வெட்டுகிறான். அதற்கு இந்திரசித்து பதில் கூறுகிறான். அனுமன் கோபத்துடன் மலையை எடுத்து எறிகிறான், இந்திர சித்து தேரை அம்மலைக்குக் கொடுத்துவிட்டு தாக்குதலிலிருந்து பிழைக்கிறான்.





1.4.60 மாயாசீதைத் வதை:

அனுமன் எறிந்த குன்றால் அசுரரும் தேரும் தகர்ந்து போகின்றனர். மீதியுள்ளவரை வானரர் கொல்கின்றனர். அப்போது இந்திரசித்து வருவது கண்டு வானரவீரர்கள் பயந்து அகன்று விடுகின்றனர். அவ்வமயம் மாருதிக்குச் சீதை இறந்ததை இராமனுக்குத் தெரிவிக்க வேண்டுமே என்ற எண்ணம் உண்டாகிறது. உடனே எண்ணம் மாறுகிறது. இந்திரசித்து நிகும்பலையில் சென்று வேள்வி செய்கிறான். அனுமனின் முகப்பொலிவு கண்டு விவரம் தெரிந்துவரச் சாம்பவானை அனுப்புகிறான் இராமன். சாம்பவான் வந்து சீதை வதத்தை இராமனுக்குத் தெரிவிக்க, இராமன் மயங்கி வீழ்கிறான். இலக்குவன் ஓடிவந்து தாங்குகிறான். வானரரும், இலக்குவனும் சிகிட்சை செய்கின்றனர்.

1.4.61 இலக்குவன் உரை:

இலக்குவன் இராமனுக்கு ஆறுதல் சொல்லுகிறான். "சிறுவயது முதல் தருமத்தைக் காத்ததற்குக்கிடைத்த பலன் இதுதானா? இனி தர்மத்தை ஆதரிக்க வேண்டியதில்லை" என்று பரிந்துரைக்கின்றான், சௌமித்திரி. "எதுவாயினும், நேர வேண்டியதெல்லாம் நேர்ந்துவிட்டது, இனி அசுரர்களை முழுவதும் அழிப்பதற்கான அனுமதி தேவை"யென்று இலக்குவன் கூறுகிறான். அதற்குள் வீடணன் வந்து இராமனின் துன்பம் நீங்க ஒரு வழி கூறுகிறான்.

1.4.62 விபீடணன் உரை:

துன்பத்தின் காரணம் என்னவென்று விபீடணன் ஆராய, சீதை வதத்தைப் பற்றி இலக்குவன் கூறுகிறான். அதுகேட்டு விபீடணன் அனுமனின் அறியாமையைக் கேலி செய்கிறான். 'நிகும்பலையில் நடக்கும் வேள்வி நன்முறையில் முடிவுபெற்றால்,

பிறகு இந்திரசித்துவை வெல்லமுடியாது' என்றும், 'எனவே அவனைக் கொல்ல அனுமனைவிட வேண்டும்; சீதையை யாராலும் கொல்லமுடியாது' என்றும் விபீடணன் உறுதி கூறுகிறான். இராமன் இலக்குவனுக்கு அனுமதி கொடுக்கிறான். வானரரும் விபீடணனும் இலக்குவனுக்குத் துணையாக நிற்கவும் ஆணையிடுகிறான். நற்சகுனங்கள் கண்டு, அண்ணனை வணங்கி இலக்குவன் புறப்படுகிறான்.

1.4.63 நிகும்பலை போர்:

பெரும்படையோடு இலக்குவன் செல்ல, பலவகை ஆயுதங்களை ஏந்திய அசுரப்படையைக் காண்கின்றனர். மேகநாதனைக் கொல்லவேண்டும் என விபீடணன் இலக்குவனோடு கூறுகின்றான். அதற்குள் வானரரும் அசுரரும் இந்திரசித்தைச் சரணடைகின்றனர். வெளியே வந்த இந்திரசித்து, அனுமனுக்கு நேரே அம்பு தொடுக்கிறான். அதனைக்கண்ட விபீடணன், இந்திரசித்தைக் கொல்லுமாறு தூண்டுகிறான். இந்திரசித்துக்கும் விபீடணனுக்கும் சொற்போர் நடக்கிறது.

1.4.64 விபீடணன் இந்திரசித்து சொற்போர்:

விபீடணன் சொற்போரின்போது அவனும் இராவணனும் பிரிவதற்கான காரணங்களை விவரிக்கின்றான். அதுகேட்ட இந்திரசித்து, அவன் இராமனையும் பிறரையும் வென்றதை அவர்கள் மறந்துவிட்டார்களாவென வினவுகிறான். அதற்கும் மறுமொழி கூறுகிறான், விபீடணன். அதற்குள் போருக்கு இலக்குவனைத் தோளில் எடுத்து நிற்கிறான் அனுமன். இலக்குவனைக் கண்ட இந்திரசித்து, போருக்கு அழைக்கிறான்.

1.4.65 இந்திரசித்து இலக்குவன் போர்:

இந்திரசித்திற்கும் இலக்குவனுக்குமிடையே சொற்போர் நடக்கிறது. அதனால் பயனில்லையென்று கண்ட இராவணன் மைந்தன், இலக்குவன் மீதும்

விபீடணன் மீதும் அம்பெய்கிறான். இலக்குவன் திருப்பியும் அம்பெய்கிறான். இருவரது அம்புகளால் சூரியன் மறைந்துவிடுகிறது.

1.4.66 இந்திரசித்து இலக்குவன் போர் தொடர்கிறது:

இலக்குவனுக்கும் இந்திரசித்திற்குமிடையே போர் தீவிரமாக நடக்கிறது. இருவரும் அவரவர் ஆயுதங்கள் முழுமையும் பயன்படுத்துகின்றனர். பகல்களும் இரவுகளும் போய் மறைவதை, அவர்கள் அறியவே இல்லை. இலக்குவனின் அம்புபட்டு இந்திரசித்து தளர்ந்து களைப்பதை விபீடணன் காண்கிறான். உடனே கணையால் அவனைக் கொல்லும்படி அறிவுறுத்துகிறான். இலக்குவன் அம்பெய்ய, இந்திரசித்துத் தேரில் மயங்கி வீழ்கிறான்.

1.4.67 இந்திரசித்து இலக்குவன் போர் தொடர்கிறது:

இந்திரசித்து மயக்கம் தெளிந்து இலக்குவனையும் அநுமனையும், விபீடணனையும் அம்பால் தாக்குகிறான். பிறகு இந்திரசித்தும் இலக்குவனும் சொற்போரில் ஈடுபடுகின்றனர். அதன்பிறகு அவர்கள் பலவகை அம்புகளை எய்கின்றனர். அதற்கிடையில், விபீடணன் வானர வீரர்களிடம் அசுரர் வீரர்களைப் போராடி அழிக்கச் சொல்லுகிறான். ஒரு இரவும் இரண்டு பகலும் கழிகிறது. வானரர் எதிரிகளைத் தாக்குகின்றனர். வானவரும், மாமுனிவர்களும் விமானங்களில் வந்து, இலக்குவனுக்கு வெற்றி வாழ்த்துக் கூறுகின்றனர். விபீடணன் வானரருக்கு வெற்றிபெற உபாயம் கூறுகிறான்.

1.4.68 விபீடணன் உரை:

விபீடணன் இதுவரை போரில் கொல்லப்பட்ட அசுரர்களின் பட்டியலைக் கூறுகிறான். இராவணன் மட்டுமே உள்ளான் என்று கூறுகிறான். இவனை நீங்கள் வெற்றிபெற வேண்டும் என்று கூற, அசுர வீரன் எதிரிகளைக் கொல்லுகிறான்.

அவ்வமயம் இலக்குவன் இந்திரசித்தின் தேரோட்டியைக் கொல்லுகிறான். இந்திரசித்து தேரோட்டிக் கொண்டே போரிடுகிறான். இதைக்கண்ட எல்லோரும் புகழ்கின்றனர்.

1.4.69 இந்திரசித்தின் போர் தொடர்கிறது:

தேரும் குதிரைகளும் பொடிபட யாருமறியாமல் இலங்கைக்குச் சென்று வேறு தேரேறி வந்தான், இந்திரசித்து. அதுகண்டு அனைவரும் ஆச்சரியமடைகின்றனர். பின் இருவரும் கடினமாகப் போரிடுகின்றனர். விபீடணனும் போரிடுகிறான். இந்திரசித்து விபீடணனுக்கு நேராக வேலை எறிகிறான். இருவர் உடலும் குருதியில் தோய்கின்றன.

1.4.70 இந்திரசித்து இலக்குவன் போர்:

இந்திரசித்திற்கும் இலக்குவனுக்கும் இடையே போர் தொடர்கிறது. இந்திரசித்து மூன்றம்புகளால் விபீடணன் முகத்தைப்பிளக்கின்றான். இலக்குவனின் நெற்றியையும் பிளக்கின்றான். பின் திவ்யாத்திரங்கள் போர் நடைபெறுகிறது. இலக்குவன் அசுரர்களை அழிக்கும் ஐந்திராத்திரத்தைப் பயன்படுத்துகிறான்.

1.4.71 இந்திரசித்து வதை:

ஐந்திராத்திரத்திற்கு மாற்று அஸ்திரம் அறைப்புகிறான் இந்திரசித்து, அதனைக்கண்டு இலக்குவன் இந்திரசித்துவைக் கொல்லும்படி ஐந்திராத்திரம் மந்திரத்தால் வேண்டுகிறான். அது மேகநாதனின் தலையை அறுத்துத்தரையிடுகிறது. தேவர்கள் மகிழ்கிறார்கள். அசுரர்கள் அஞ்சி ஓடுகின்றனர். அவர்களைப் பின் தொடர்ந்தனர் வானரர். அவர்களைத் திரும்பி அழைத்து, இராமனை அடையப்புறப்படுகிறான் இலக்குவன். முன்னரே அனுமன் இராமனிடம் சென்று, நடந்தவைகளை விவரித்து விடுகிறான். தம்பி, அண்ணனின் திருவடிகளை வணங்குகிறான். தம்பியின் உடல் வேதனையைத் தன் கைகளால் தடவிப் போக்குகிறான் இராமன்.

1.4.72 சுசேணன் களைப்புமாற்றுதல்:

இராமன் சுசேணனை அழைத்து இலக்குவனுடையவும் வானரர்களுடையவும் வேதனையை மாற்றச் சொல்லுகிறான். அவன் கட்டளையை நிறைவேற்றுகிறான். இராமனும் தோழர்களும் சுசேணனை வாழ்த்துகின்றனர், இராமன் இலக்குவனைப் புகழ்கின்றனர். "பாணங்களால் இராவணனை அழிக்க வேண்டும்" என இராமன் கூறுகிறான். இத்தருணம், அசுரர்கள் வரலாமென்று நினைக்கிறான் இராமன். அதற்குள் அசுரர்கள் இராவணனுக்கு விவரம் தெரிவிக்கின்றனர்.

1.4.73 இராவணன் இரங்கல்:

அசுரர்கள் இந்திரசித்தின் அழிவை இராவணனுக்கு அறிவிக்கின்றனர். இதுகேட்ட இலங்கையர்கோன் மயங்கி, நிலத்தில் வீழ்கிறான். இராவணன் வருந்திப்புலம்புகிறான். "தன் கீழ் உள்ள யாவரும் தன்னையும் மண்டோதரியையும் விட்டுச்சென்றது ஏன்?" எனக் கேட்கிறான். தனக்கு ஈமக்கடன் செய்ய வேண்டிய மகனுக்குத், தான் திரும்பச் செய்யும்படியாகிவிட்டதே என வருந்துகிறான் இராவணன்.

1.4.74 இராவணன் அசோகவனம் அடைதல்:

இவ்வாறு நெடுநேரம் அழுது அரற்றியபின், இராவணன் சீதையைக் கொன்றால் தன் துன்பம் நீங்குமென நினைத்து, அதற்குத் தயாராகிறான். நண்பர்கள் சீதையைக் கொல்லவிடாமல் தடுக்க முயலுகின்றார்கள். மண்டோதரியும் சீதையைக் கொல்லவேண்டாமென வேண்டுகிறாள். எவர் சொல்லையும் பொருட்படுத்தாமல், இராவணன் அசோகவனத்துக்குச் செல்லுகிறான். சீதை இராமனை நினைத்துத் தியானம் செய்கிறாள்.

1.4.75 சுபார்சன் அறிவுரை:

இராவணனைக் கொன்று தன்னைக் காப்பாற்ற வேண்டுமென்று சீதாதேவி இராமனிடம் வேண்டுகிறாள். அதற்குள் சுபார்சன் என்னும் பெயருடைய அமைச்சன் இராவணனைத் தடுத்து, பெண்கொலை - அதுவும் தன்பமுற்றிருக்கும் சீதையைக் கொல்லலாகாது என அறிவுறுத்துகிறான்.

1.4.76 சுபார்சன் அறிவுரை தொடர்கிறது:

சுபார்சன் மீண்டும் அறிவுரை கூறுகிறான். அவனது அறிவுரையை ஏற்று, இராவணன் அரண்மனைக்குத் திரும்பிச் செல்லுகிறான். அவர்கள் போர்க்களத்திற்குப் புறப்படுகின்றனர். வானரருக்கும் அசுரருக்கும் போர் நடக்கிறது. வானரர் தோற்று, இராமனைச் சரணடைகின்றனர். "நாங்கள் இருவரும் போரிடுவதைக் காணுங்கள்" என்றருளுகின்றான் இராமன்.

1.4.77 இராமன், அரக்கர் பலரை அழித்தல்:

படை நடுவே இராமன் சென்று நிற்கிறான். அவன் கந்தர்வாத்திரம் பயன்படுத்தி எதிரிகளை அஞ்சச்செய்கிறான். அநேகம் படைவீரர்கள் அழிகின்றனர். அப்போது சூரியன் மறைந்து விடுகிறான். அசுரர்கள் பார்த்தவிடமெல்லாம் இராமனைக் காண்கிறார்கள். படைத்தலைவர்கள் பலர் இறந்துவிடுகின்றனர். இவர்களைக் கொல்ல, சிவபெருமானைத்தவிர எவராலும் முடியாதென, இராமன் விபீடணன் முதலியோரிடத்தில் கூறுகிறான். அரக்கியர்கள் அரற்றி அழுகின்றனர்.

1.4.78 அரக்கியர் அவலம்:

அரக்கியர் அழுது அரற்றுகின்றனர். இராமனின் கடந்த காலச்செய்திகளை ஒவ்வொன்றாக விரித்துரைக்கின்றனர். ஒரு பெண்ணால் இராவணன் இறப்பான் எனச்சிகன் சொன்னதை அவர்கள் நினைவு கூர்கின்றனர். கரன் போன்றோர்களின் மரணத்தையும் அவர்கள் எண்ணிப்பார்க்கின்றார்கள்.

1.4.79 இராவணன் போருக்கு எழுதல்:

அரக்கியர்கள் இராமனின் பல்வேறு நிலையில், செயற் நிகழ்ச்சிகளை நினைவுகூர்ந்து, ஒப்பாரி வைக்கின்றனர். இராவணனுக்குக் கோபம் பொங்குகிறது. அசுரத்தலைவன் போருக்குப்புறப்படுகிறான். விருபாக்கன், மகோதரன், மகாபார்ச்சுவன் எல்லாரும் உடன் செல்லுகின்றனர். இராமனும் தோழரோடு 'பழிக்குப்பழி வாங்குவேன்' என வஞ்சினம் கூறுகிறான்.

1.4.80 சுக்ரீவன் விருபாக்கன் போர்:

இராவணன் படையுடன் போர்க்களத்துக்குப் புறப்படுகிறான். வடவாயில் போகும்போதும், பின்னரும், தீய சகுனங்கள் அதிகமாகத் தென்படுகின்றன. அவை ஒன்றையும் பொருட்படுத்தாமல் இராவணன் போகின்றான். வானரருக்கும் அரக்கருக்கும் கடும்போர் நடைபெறுகின்றது. போரில் முக்கியமான போர் சுக்ரீவனுக்கும் விருபாக்கனுக்கும் இடையேயுள்ளதாகும். சுக்ரீவன் அவனது யானையை அடித்து வீழ்த்துகிறான். பிறகு, இருவரும் வாளும் கேடயமும் ஏந்திப் போரிடுகின்றனர்.

1.4.81 விருபாக்கன் சுக்ரீவன்போர் தொடர்கிறது:

விருபாக்கனுக்கும் சுக்ரீவனுக்கும் இடையே நடைபெறும் போர் தொடர்கிறது. பலவிதமாகப் போரிடும் ஒருவரையொருவர் தோற்கடிக்க முடியவில்லை. திடீரென்று, வானரத்தலைவன் அசுரனின் தலைமீது பாய்ந்து ஏறி, காலால் தாக்குகின்றான். விருபாக்கன் உயிரற்று விழுகிறான். பிறகு, மகோதரன் வருகிறான். அவனைக்கண்டு, வானரர் அஞ்சி ஓடுகின்றனர். சுக்ரீவன் எதிர்க்கிறான். பயங்கரமான போர் நடைபெறுகிறது. ஒருவன் இரும்புலக்கை எடுக்க, மற்றவன் கதை எடுக்கிறான்; மற்றும் கரதண்டு இவற்றால் போரிடுகின்றனர்.

1.4.82 மகோதரன் சுக்ரீவன் போர்:

மகோதரனுக்கும் சுக்ரீவனுக்கும் இடையே நடைபெறும் போர் தொடர்கிறது. இருவரும் அவரவர் உடல்பலம் மூலம் வெற்றிபெற முயலுகின்றனர். அதனால் பயனில்லை. பின்னர் அவர்கள் வாளும் கேடயமும் எடுத்துப் போரிடுகின்றார்கள். இறுதியில், சுக்ரீவன் மகோதரனின் தலையைத் துண்டித்து விடுகிறான். இராவணன் கோபமுறுகிறான். மகோதரனின் மரணமறிந்து, மகாபார்ச்சுவன் போருக்கு எழுகிறான்.

1.4.83 மகாபார்ச்சுவன் சுக்ரீவன்போர்:

மகாபார்ச்சுவன் வானரரைக் கொல்கிறான். அதைக்கண்டு, அங்கதன் அங்குவந்து வாளால் வெட்டி வீழ்த்துகிறான். சாம்பவான் ஒரு கல்லெடுத்து எறிகிறான். அதுபட்டு, மகாபார்ச்சுவனின் தேர், குதிரைகள், தேரோட்டி இவை அழிகின்றனர். அசுரன் எழுந்து, எல்லோரையும் அம்பால் தாக்குகிறான். அதைக்கண்டு சுக்ரீவன் எதிர்க்கிறான். அரக்கன் அடிக்கிறான்; மழுவால் வெட்டவும் செய்கிறான். அத்தாக்குதலிலிருந்து விலகி, முட்டியால் தாக்கி மகாபார்ச்சுவனைக் கொல்கிறான். இராவணனுக்குக் கோபம் பெருகுகிறது. தேரோட்டியிடம் தேரைச்செலுத்த ஆணையிடுகிறான். "எதிரிகளையெல்லாம் அழிப்பேன்" எனக் கூறி ஆவேசத்துடன் போர்க்களத்திற்கு வருகிறான்.

1.4.84 இராவணன் போர் துவங்கல்:

இராவணன் களத்திற்கு வந்து, தாமதாத்திரம் பயன்படுத்த, அஞ்சி நடுங்கிய வானரர், இராமனை அடைக்கலம் அடைகின்றனர். இராமன் இராவணனை எதிர்க்கத்தயாராகிறான். இருவரும் நாணொலி முழங்கிப் போரிடுகின்றனர். அப்போது இலக்குவன் வந்து, இராவணனுடன் போரிடத் தன்னை அனுமதிக்கவேண்டுமென வேண்டுகிறான். இலக்குவனுடன் போரிடுகிறான்,

இராவணன். அப்போரை எல்லோரும் புகழ்கின்றனர். இருவரும் சேர்ந்து ஒருவரோடு போரிடுவது முறையல்ல என இராமன் இலக்குவனிடம் கூறுகிறான்.

### 1.4.85 இராமன் இராவணன் போர்:

இராமனுக்கும் இராவணனுக்குமிடையே போர் நடக்கிறது. இருவரும் பயங்கரமாகப் போரிடுகின்றனர். சூரியன் மறைகிறான். இராமன் ரௌத்திராத்திரம் எய்து இராவணனின் கவசத்தை உடைக்க முயல்கிறான்; ஆனால் முடியவில்லை. இராவணன் அசுராஸ்திரம் எய்கிறான். அதை பாவாத் திரத்தால் தடுக்கிறான் இராமன். பைசாசிகாத்திரம் பயன்படுத்துகிறான், இராவணன். இராமன் அதை கந்தர்வாத்திரத்தால் தடுக்கிறான். கோப மடைந்து, கொடிய அஸ்திரம் ஒன்றை எய்கிறான் அசுரன்.

### 1.4.86 இராவணன் போர் செய்தல்:

இராவணன் தொடுக்கும் அம்புகளை இராமன் முறித்தெறிகிறான். இராமனின் அம்புகள் பட்டுக் கோபங்கொண்ட அசுரன், இராமனின் மர்மங்களைப் பிளக்குமாறு கணைகள் எய்கிறான். இராமன் எதிர்த்தும் கணைகள் எய்கிறான். இலக்குவன் இடையே புகுந்து, இராவணனைத் தாக்குகிறான். கொடியையும், தேரோட்டியையும் வீழ்த்துகிறான். விபீடணன் கதையேந்திச்சென்று, இராவணனின் குதிரைகளைக் கொல்லுகிறான். அதைக்கண்டு, இராவணன் விபீடணனுக்கு நேரே வேலெறிகிறான். அதனை இலக்குவன் நொறுக்கிவிடுகிறான். கோபம் மூண்ட இலங்கையர்கோன், மாயம் நிறைந்த வேல் ஒன்றை இலக்குவனை நோக்கி எறிகிறான்.

### 1.4.87 இலக்குவன் இராவணன் போரும் இராமன் துயரும்:

இராவணன் இலக்குவனுடன் போரிடமுடியாமல், "விபீடணனைக் காப்பாற்று" என்று கூறி வேலெறிகிறான். அதைக்கண்ட தேவதேவியர் வருந்துகின்றனர். வேல்பட்டு இலக்குவன் கீழே விழுகின்றான். இராமன் கோபமுற்று இராவணனை

நோக்கி அம்புகள் விடுகிறான். வானரர் இலக்குவன் மேல்பட்ட வேலை இழுத்தெடுக்க முடியாமல் தவிக்க, இராமன் அதை எளிதாக இழுத்தெடுக்கிறான். இலக்குவனைப் பார்த்துக்கொள்ளும்படி வானரருக்கு இராமன் கட்டளையிடுகிறான். "இராவணனை எவராலும் காப்பாற்ற முடியாதபடிக் கொல்வேன்" என இராமன் சூளுரைக்கிறான். சிவபெருமானிடம் இலக்குவனை மடியில்வைத்துக் காத்தருள இராமன் வேண்டுகிறான்.

1.4.88 இராமன் இராவணன் போர்:

இராமன், இராவணனுக்கு நேரே கூரம்புகள் எய்கிறான். இராவணன் மாறிய ஆயுதங்களை விடுகிறான். அப்போது அருகே நின்ற சுடேணனிடம் இலக்குவனுக்கு நேர்ந்ததைக் கூறுகிறான், இராமன். அதுகேட்ட சுடேணன் இலக்குவனுக்கு ஆபத்தில்லையென அறிவிக்கிறான். முன்னர் சாம்பவான் கூறிய மூலிகைகளைக் கொண்டுவரும்படி சுடேணன் அனுமனிடம் கூறுகிறான். அனுமன் மிருத சஞ்சீவினி போன்ற மூலிகைகள் கொண்டு வருகிறான். சுடேணன் அம்மூலிகைகளால் இலக்குவனைப்பராமரிக்கிறான். இலக்குவன் எழுந்து அண்ணனின் பாதங்களைப் பணிகிறான். 'உன்நிலை கண்டு எனக்குப் போரிட முடியாமல் போயிற்று' என இராமன் இலக்குவனிடம் பரிந்துரை கூறுகிறான்.

1.4.89 இராமன் இராவணன் போர் தொடர்கிறது:

இலக்குவன் வேல்பட்டுக் கிடந்ததைக் கண்டு, தனக்கு உண்டான துன்பத்தைப் பற்றி இராமன் கூற, 'இராவணனைக் கொல்வேன்' என முனிவர்க்கு உறுதிமொழி கொடுத்ததை இராமனுக்கு நினைவூட்டுகிறான், இலக்குவன். அதைக்கேட்டுப் போருக்குப் போகிறான் இராமன். இராமன் தரைமீதும் இராவணன் தேர்மீதும் நின்று போர்புரிவதைக் கண்டு, முனிவர்கள் இந்திரனிடம் வேண்ட, இந்திரன் தனது

தேரைக் கொடுத்தனுப்புகிறான். மாதலி கொண்டு வந்த தேரேறி, இராவணனுடன் போரிடுகிறான் இராமன். இராம இராவணப் போரை விளங்க முடியாது என்கின்றனர் கூறுகிறார். இராவணன் ராகசாத்திரம் தொடுக்கிறான். இராமன், அதற்கு எதிராகப்பாசுபதாத்திரம் தொடுக்கிறான்.

1.4.90 இராமன் – இராவணன் போர் தொடர்கிறது:

பாசுபதாத்திரம் இராவணனின் ராகசாத்திரத்தை அழிக்கிறது. அதைக்கண்டு இராவணனுக்குக் கோபம் வருகிறது. வேறு கணைகளைத் தொடுக்கிறான். இராவணனின் தேர்க்கொடி, கம்பு முறிகிறது. தேவதேவியர் வருந்துகின்றனர். பல தீய சகுனங்கள் தென்படுகின்றன. அப்போது இராமனின் வெற்றி நிலை கண்டு தேவர்கள் மகிழ்கின்றனர். இராவணனின் தைரியம் அழிகிறது. அரக்கர் அழிவுக்கான அறிகுறிகள் தோன்றுகின்றன. தேவர்கள் இராமனுக்கும் அசுரர் இராவணனுக்கும், வெற்றி வாழ்த்துக்கள் கூறுகின்றனர்.

1.4.91 இராமன் இராவணன் போர் தொடர்கிறது:

இராவணன் சூலம் கையிலெடுக்க, உலகமே அச்சுகிறது. மிகப்புகழ்பெற்ற அச்சூலத்தை எறிய ஆயத்தமாகிறான். "அச்சமில்லையேல் இதை எதிர்க்க", என்று கூறிக்கொண்டே எறிகிறான். அதனை எதிர்க்க ஆற்றலுள்ள அம்பை இராமன் தொடுக்க, அது பயனற்றுப் போகிறது. வானரர் வருந்துகின்றனர். அசுரர் அகமகிழ்கின்றனர். அப்போது இராமன் தேரிலிருந்து வேலெடுத்து எறிய அது சூலத்தை முறித்திடுகிறது. அச்செயல்கண்டு, அசுரத்தலைவன் கோபமடைகிறான். இராமன், இராவணனது தேர்க்குதிரைகளை வீழ்த்தி, அவனது நெற்றியில் மூன்று அம்புகளை எய்கிறான். இராவணனுடலில் இருந்து இரத்தம் ஒழுகுகிறது. இராவணன் இராமனின் மார்பில் அம்புகள் பொழிகின்றான்.

1.4.92 <u>இராமன் சூளுரை</u>

திறமையோடு இருவரும் போரிடுகின்றனர். எவருக்கும் வெற்றியோ தோல்வியோ கிடைக்கவில்லை. இராவணன், இராமன் மீது அம்பு எய்ய முயலுகின்றான். அதைத்தடுக்கின்றான், இராமன். இராவணன் கோபம் கொள்ளுகிறான். இராமன், இராவணனை சீதையைத் திருடி இலங்கையில் சிறை வைத்ததற்காக இகழ்கிறான். அதனால் இராவணனை 'பருந்திற்கும் பேய்க்கும் இரையாக்கியே தீருவேன்' எனச்சூளுரைக்கிறான்.

1.4.93 <u>இராவணன் பின்னடைதல்:</u>

இராமன், இராவணனை மிகவும் கேவலமாக இகழ்கிறான். "நீ செய்த அதர்மத்தின் பயனை நீ அனுபவிப்பாய்" என்று இராமன் கூறுகிறான். பின்னர், அசுரனின் நேரே அம்புமழை பொழிகின்றான். பயங்கரமான போரில் இராமனின் அம்பை எதிர்க்க முடியாமல் இராவணன் திண்டாடுகிறான். அதைக்கண்டு தேரோட்டி தேரைத் மாற்றி ஓட்டுகிறான். இராவணன் தேரோட்டியை ஏசுகிறான். தேரோட்டி "நான்கு நாள்களாக இரவும் பகலும் போர் செய்துள்ளீர்கள். அதனால் மிகவும் களைத்துப் போய் உள்ளீர்கள். அதனால் தான் மாற்றி நிறுத்தினேன் தேரை" எனப் பதிலுரைக்கிறான்.

1.4.94 <u>இராமன் இராவணனை தலைகளைக் கொய்தல்:</u>

தேரோட்டி தான் செய்தமை விளக்கிக் கூறி, "கோபம் அடைய வேண்டாம்" என வேண்டிக்கொள்கிறான். அதனைக்கேட்டு மகிழ்ந்த இராவணன், தனது கங்கணத்தைக் கழற்றிப் பரிசாக அளிக்கிறான். மனநிறைவுற்ற தேரோட்டி தேரைச் செலுத்துகிறான். முன்னைவிடப் பயங்கரமாக இராம இராவணப்போர் திசை திரும்புகிறது. அம்பினால் இராவணனது ஐந்து தலையைக் அறுத்த

நிலத்திருகிறான், இராமன். அவ்வமயம் தேரோட்டி அம்பு தொடுக்கிறான். தலைகள் முளைத்து விடுகின்றன. மீண்டும் ஒவ்வொன்றாக இராவணனை தலையைக் கொய்கிறான் இராமன். முன்பு தவம்செய்து பெற்ற ஆற்றலால் அவை மீண்டும் முளைக்கின்றன.

1.4.95 இராவணன் சதமுகன் என்னும் பெயர் பெறுதல்:

இராவணன் "தன்தலையைக் கொய்த உன் செயலால் எனக்குச் 'சதமுகன்' என்ற பெயர் கிடைத்துள்ளது", என இராமனிடம் கூறுகிறான். அதற்குப் பதில் கூறிவிட்டு, அம்பெய்கிறான், இராமன். அப்போது தேவர்களின் வேண்டுகோளால் அகத்திய முனிவர் தோன்றி, ஆதித்திய இருதய மந்திரத்தில் சிறப்பை விளக்குகிறார். "இம்மந்திரத்தைப் பயின்று சூரியனை வணங்கியபின் போர் செய்தால், எதிரியை எளிதில் கொல்லலா"மென இராமனுக்கு அறிவுரை கூறுகிறார்.

1.4.96 அகத்தியர் அறிவுரை:

அகத்திய முனிவர் சூரியன் பெருமையை விவரிக்கிறார். அவரது அறிவுரைப்படி சூரியனை வணங்கச் சொல்லுகிறார்.

1.4.97 இராமன் அகத்தியர் அறிவுரை ஏற்றல்:

சூரியனுடைய பெருமையின் விளக்கம் தொடர்கிறது. பின்னர் அதன் பயனை விளக்கிக் கூறுகிறார். உடனே, அகத்திய முனிவர் மறைகிறார். இராமன் இராவணனை எதிர்க்கப்புறப்படுகிறான். இராவணனும் போருக்கு வருகிறான். வில்லொலி எழுகிறது. தேவர்கள் போரைக் காண ஆகாயத்தில் வந்து நிற்கின்றனர் மாதலி தேரை இராவணனின் இடப்புறமாகச் செலுத்துகிறான். இருவரும் போரிடுகின்றனர்.

1.4.98 இராம இராவணப்போர் உயர்நிலை அடைதல்:

இராம இராவணப்போர் உயர்நிலை அடைய, இராவணன் பல தீய சகுனங்களைக் காண்கிறான். இராமன் நற்சகுனங்களைக் காண்கிறான். இராவணன், கொடிமரத்தை இராமன் வெட்டிச் சாய்க்கிறான். இராவணன் இராமனது தேர்க் குதிரைகளைக் கொல்லமுயலுகிறான். இராவணன் மாயையால் பலவகை அம்புகளைத் தொடுக்கிறான். இராமனும் விடாமல் எதிர்க்கிறான். இருவரது போரும் சமமாக முடிகிறது.

1.4.99 இராம இராவணப் போர் தொடர்கிறது:

இராம இராவணப்போர் தொடர்கிறது. இருவரும் பல்வேறு போர்த் தந்திரங்களை மேற்கொள்ளுகின்றனர். தேரோட்டிகளையும், குதிரைகளையும் இருவரும் கொல்ல முயலுகின்றனர். போர் பயங்கரமாக நடக்கிறது. தேவர்களும் முனிவர்களும் இராமனுக்கு வெற்றி கிடைக்கப்பரம்பொருளை வேண்டுகின்றனர். இராமன் இராவணனது ஒரு தலையைக் கொய்து தரையில்விடுகிறான். உடனே அவ்விடத்தில் மற்றொரு தலைகாணப்படுகிறது. மீண்டும் பல தலைகளை இராமன் கொய்கிறான். ஆனால் அவை மீண்டும் முளைத்து வருகின்றன.

1.4.100 போரில் இராவணன் வீழ்தல்:

இராமன் கொய்த இராவணன் தலைமுளைத்து வருவது கண்டு, மாதலி எத்தனை முறை கொய்தாலும் இராவணனைக் கொல்ல முடியாது. ஆதலால், பைதாமகாஅம்பு எய்து அசுரனை அழிக்க வேண்டுமென்று அறிவுறுத்துகிறான். அதன் பெருமையைக் கூறுகிறான். அதன்படி இராமன் 'பைதாமகா' அம்பைப் பயன்படுத்து கிறான். அம்பு இராவணனின் உடலைப் பிளக்கிறது.

1.4.101 இராவணன் வீழ்ந்த செய்தி பரவல்:

இராவணனின் உடல் உயிரற்று மண்ணில் வீழுகிறது. எஞ்சிய அசுரப்படை அதுகண்டு அஞ்சி ஓடுகின்றது. இராவணன் இறந்ததை, வானரர் உலகம் முழுவதும் அறிவிக்கின்றனர். தேவர்கள் பூமழை பொழிகின்றனர். தேவலோகத்தில் எல்லோரும் மகிழ்ச்சியடைகின்றனர். தேவ அரம்பையர் ஆடுகின்றனர். இராவணன் இறந்ததை அறிந்த, வீடணன் வீழ்கிறான்; வருந்துகிறான்.

1.4.102 வீடணன் வருந்தித் தேறுதல்:

வீடணன் மேலும் வருந்துகிறான். அதனைக்கேட்டு பெருவீரனான இராவணன் இறந்ததைக் குறித்து வருந்துதல் சரியல்ல என வீடணனுக்கு இராமன் எடுத்துரைக்கிறான். அதற்குள் அந்தப்புரப் பெண்கள் ஒப்பாரி வைக்கின்றனர். இராவணனது இறுதிச் சடங்குகளுக்கு ஆவன செய்யும்படி இராமன் கூறுகிறான்.

1.4.103 அரக்கியர் அவலம்:

இராவணனை அந்தப்புரப்பெண்கள் ஒப்பாரி வைக்கின்றனர். அவர்கள் அவனது ஒவ்வொரு அங்கத்தையும் அணைத்தபடி அழுகின்றனர். அவரது ஒப்பாரி ஒலித்துக் கொண்டிருக்க, பட்ட மாதேவியான மண்டோதரி வந்து கணவனின் உடலில் விழுந்து ஒவ்வொன்றைக் கூறிக்கதறி அழுகின்றாள்.

1.4.104 மண்டோதரி அவலம்:

மண்டோதரி இராவணனின் உடலைக் கண்டு புலம்புகின்றாள். முன்பு நடந்த பல நிகழ்ச்சிகளையும் புலம்பலினூடே கூறுகிறாள். அவள் சீதையையும் இலங்கைப் பெண்களையும் ஒப்புமைப்படுத்தி, இராவணன் சீதையை விரும்பியது தவறு என்று உறுதிப்படுத்துகிறாள். எழுந்து வந்து தங்கள் துன்பத்தை நீக்கும்படி இராவணனிடம் வேண்டுகிறாள் மண்டோதரி.

1.4.105 மண்டோதரி அவலம் தொடர்கிறது:

மண்டோதரி அரற்றுகிறாள். சீதைபால் கொண்ட மோகம், வானகம் சென்ற காரணம், தன்நிலை; இவற்றைக்கூறிப்புலம்புகிறாள்.

1.4.106 மண்டோதரி அவலம் தொடர்கிறது:

மண்டோதரியுடன் பிறபெண்களும் சேர்ந்து அவலம் கொள்ளுகின்றனர். அது முடிந்தபின், உடலை முறைப்படி அடக்க இராமன் வீடணனிடம் கூறுகிறான். வீடணன் அறத்தில் நீங்கிய இராவணனின் உடலை அடக்க எனக்குத் தகுதி இல்லை என்கிறான். இராமன் வீடணனுக்கு அறிவுரை கூறுகிறான். ஈமக்கடனைச் செய்ய வீடணன் தயாராகுகின்றான்.

1.4.108 இராவணனின் ஈமச்சடங்கும் வீடணன் முடிசூட்டும்:

வீடணன் இராவணனின் ஈமச்சடங்குகளைச் செய்கிறான். பிறகு இராமனை வணங்குகிறான். இலக்குவனிடம் வீடணனுக்கு முடிசூட்டுமாறு இராமன் வேண்டுகிறான். ஆட்சியை ஏற்ற வீடணன், இராமனை வணங்குகிறான். உடனே, மாதலியை விண்ணுலகத்திற்கு அனுப்புகிறான் இராமன். இராமனது வெற்றிக்கு முக்கிய காரணமான சுக்ரீவனைப் புகழ்கிறான், இராமன். பிறகு, அனுமனைச் சீதையிடம் அனுப்புகிறான். இராவணனைக் கொன்ற செய்தியையும் வீடணனுக்கு முடி சூட்டியமையையும் அறிவிக்கச் சொல்லுகிறான்.

1.4.109 அனுமன் சீதையிடம் செய்தி கூறல்:

அனுமன் சீதையிடம், சீதையைக் கண்டு இராமன் கூறியவைகளை, அறிவிக்கின்றான். சீதையோ, மௌனமாக இருக்கிறாள். அதைக்கண்டு தன்னுடன் பேசாமலிப்பதற்குக் காரணம் வினவுகிறான். அதற்குச் சீதை அனுமனின் செயலுக்கு இணையாக ஒன்றையும்

கூறமுடியாது என்கிறாள். அதைக்கேட்டு மகிழ்ந்த மாருதி, தேவிக்குத் தொல்லை தந்த அரக்கியர்களைக் கொல்ல அனுமதி கேட்கிறான்.

### 1.4.110 சீதை அனுமனுக்குக் கூறிய அறிவுரையும் வேண்டுகோளும்:

அரக்கியரைத் தாக்கும் எண்ணம் கூடாது என்றும் அவர்கள் இராவணனின் ஆணைப்படி நடந்தவர்கள் என்றும் சீதை அனுமனிடம் கூறுகிறாள். இராமனிடம் என்ன கூறவேண்டுமென்று கேட்கிறான் அனுமன். அவரது திருவுடன் காணவிழைவதாகச் சீதை கூறுகிறாள். இச்செய்தியை இராமனுக்கு அறிவிக்கிறான் அனுமன். சீதையை நீராட்டி அலங்கரித்துத் தன் முன்னே கொண்டுவரும்படிச் செய்ய வீடணனிடம் கூறும்படிச் சொல்லுகிறான், இராமன். வீடணன் அவ்வாறு நடத்த ஆவன செய்கிறான். சீதையை அழைத்துக் கொண்டு வரும்போது காணவந்த வானரரை அசுரர் விரட்ட முயன்றபோது, அதனைத் தடுக்கும்படி வீடணன் சொல்லுகிறான்.

### 1.4.111 சீதை இராமனைக் காண வருதல்:

அசுரர்கள் வானரரை அடித்து ஒதுக்குவதைக் கண்ட இராமன், கோபமடைந்து அவர்களைத் தடுக்கிறான். இராமனின் சொற்கேட்டு, அரக்கர் வழியில் நின்றும் விலகுகின்றனர். சீதையின் தலையில் மூடியிருந்த துணியை விலக்கித் திருமுகம் காண்கின்றனர். தங்களது கண்கள் சீதையிடம் பதிந்து போனமையால் அவற்றை எடுக்க முடியாமல் தவிக்கின்றனர். தாங்கள் அனுபவித்த துன்பமும், செய்த தியாகமும், வீணாகவில்லை என்று தங்களுக்குள்ளே பேசிக் கொள்ளுகின்றனர்.

### 1.4.112 சீதை இராமனை அடைதல்:

வானரரோடும் தம்பியரோடும் மலையின் மீது நின்றிருக்கும் இராமன், வீடணனிடம், சீதை இந்தப் போர்க்களத்திற்கு வந்ததில் தவறொன்றும் இல்லை என்கிறான். அந்நேரம் தேவி பல்லக்கில் இருந்து இறங்கி வர, இராமன் சீதையைக் கண்டிக்கிறான். சீதையின் கண்கள் கண்ணீரால் நனைகின்றன, இராமன், மேலும், தனக்கு ஏற்பட்ட அவமானம் பற்றிக் கூறுகிறான்.

1.4.113 இராமன் சீதைக்குக் கூறிய உரை:

இராமன் சீதையின் கற்பைப்பற்றி ஐயுற்றுப் பேசுகிறான். வேறு எவரையாவது கணவனாக ஏற்றுக்கொள்ளும்படிக் கூறுகிறான். அதுகேட்டு வருந்திய தேவி, அநுமனிடம் அதைப்பற்றிக் கேட்டபடி வேண்டுகிறாள். அதன்பிறகு இலக்குவனோடு தீக்குண்டம் தயாராக்கச் சொல்லுகிறாள். இலக்குவன் அதைச் செய்கிறான். சீதை அதில் புகத்தயாராகிறாள்.

1.4.114 சீதைத் தீக்குளித்தல்:

சீதை, தீயை வலம் வருகிறாள். எல்லாத் தேவர்களையும் வணங்குகிறாள். 'இராமனன்றி வேறு எவரையும் நினையாதிருந்தால் தீ என்னைக் காக்கட்டும்' எனத் தியானிக்கிறாள். அதன்பின் அவள் தீயில் புகுகிறாள். மூவுலகும் வாய்விட்டு அழுகிறது. இராமனும் திடுக்கிடுகிறான். அதுகண்டு தேவர்களும் முனிவர்களும் இராமனை அடைகிறார்கள்.

1.4.115 இராமன் தன் முற்பிறவி அறிதல்:

எல்லாத்தேவர்களும் முனிவர்களும் வந்து சேருகின்றனர். தேவேந்திரன் இராமனின் கைப்பற்றி, சீதையின் கற்புப்பற்றிப் பேசுகிறான். 'தேவியைக் கைவிட்டதேன்' என வினவுகிறான். இராமன் தன்முன் பிறப்புக் கதையைக் கூறும்படி வேண்டுகிறான். அதன்படி, தேவேந்திரன் கூறவும் செய்கிறான்.

1.4.116 சீதை இராமனை அடைய விடுதல்:

பிரமன் இராமனை மீண்டும் மீண்டும் புகழ்கிறான். அதன்பின் சீதையின் கற்பு நெறியைப் பற்றி பேசுகிறான். அதனால் சீதையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென வேண்டுகிறான். அதற்கிடையே, அக்னியின் தூய்மை பற்றிப் பேசுகிறான். தேவன் சீதையைத் தூக்கிக்கொண்டு இராமரின் முன்னர் வருகிறான். அப்போது, மேனகை போன்ற தேவ மங்கையர் சீதையைப் புகழத் தொடங்குகின்றனர்.

1.4.117 சீதையைத் தேவமாதர்கள் புகழ்தல்

மேனகை போன்ற தேவமாதர்கள் சீதையைப் புகழ்கின்றனர். பாதாதிகேசம் வர்ணனை இடம்பெறுகிறது.

1.4.118 சீதையைத் தேவமாதர் வருணித்தல்:

மேனகை முதலிய தேவமாதர்கள் சீதையைப் புகழ்கின்றனர். ஒவ்வொரு உறுப்பாக வர்ணிக்கப்படுகிறது.

1.4.119 சீதை இராமனை அணைதல்:

தேவியின் விரல்கள், நகவரிசை, நடைபோன்றவைகளை மேனகை முதலிய தேவமங்கையர் புகழுகின்றனர். பிறகு, தீக்கடவுள் சீதையை எடுத்துவந்து இராமனிடம் ஏற்றுக்கொள்ளும்படி வேண்டுகிறான். முதலில் தேவியை ஏற்றுக் கொள்ளாமைக்குக் காரணம் கூறுகிறான் இராமன். அதனைக்கேட்ட சிவபெருமான், சீதையை ஏற்று அயோத்திக்கு அழைத்துச் செல்லும்படி இராமனை வேண்டுகிறான்.

1.4.120 தசரதன் வானின்றும் வருதல்:

சிவபெருமானும் இராமனும் பேசிக்கொண்டிருக்க, தசரதன் விமானத்தில் தோன்றுகிறான். அதனைக்கண்ட இராம இலக்குவர் அவரை வணங்குகின்றனர். தசரதன் இராமனிடம் மகனைப்பிரிந்த துன்பம் இப்போதுதான் நீங்கியது என அறிவிக்கிறார்.

1.4.121 தசரதன் தன்மகன் இராமனிடம் வேண்டுதல்:

தன்மகன் திருமாலின் அவதாரமென்றும், 'இராவணனைக் கொல்வதற்காகவே இஃது என்று புரிந்துகொண்டேன்' என்றும் தசரதன் கூறுகிறான். சீதை களங்கமற்ற வளாகையால் இராமன் அவளை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும், சீதை இராமனிடம்

கோபம்கொள்ளலாகாது என்றும்அறிவுரை கூறுகிறான். அவர் அவனுடைய ஏற்றுக் கொண்டதும், அவர் மீண்டும் தேவலோகத்துக்குத் திரும்புகிறார். அப்போது தேவர்கள் ஏதாவது வரம்கேட்கச் சொல்லி, இராமனை வேண்டுகிறார்கள். இராமன் தன் படையில் இறந்தோர் எழ வரம் கேட்கிறான்.

1.4.112 தேவர்கள் இராமனுக்கு வரமளித்தல்:

பிரமன் போன்ற தேவர்கள் இராமன் கேட்கும் வரங்களை அளிக்கின்றனர். அவர்கள் மறைந்த வேளை, வானரர் இராமனை வணங்குகின்றனர். இராமனை வணங்க வந்த வீடணனிடம், வானரரை வணங்கும்படிக் கூறுகிறான், இராமன். இரத்தினங்கள் போன்றவைகளால் வானரருக்கு அணிவிக்கின்றான். அவர்கள் உளவிலா மகிழ்ச்சியடைகின்றனர். இராம இலக்குவரை வழிபட வீடணன் தயாராகிறான்.

1.4.123 இராமன் இலக்குவன் முதலியோர் விமானம் ஏறுதல்:

இராமன் இலக்குவன் முதலியோர் விமானத்தில் ஏறுகின்றனர். உடனே இராமன் சுக்ரீவனையும் வீடணனையும் வரவேற்று, அவரவர் நாட்டிற்குப் போக வேண்டுமென்று கூறுகிறான். அவர்கள் இராமனின் முடிசூட்டு விழாவில் கலந்து கொள்ள வேண்டுமென்று தங்கள் ஆசையை வெளியிடுகின்றனர். இராமன் அதற்கு அனுமதியளிக்கின்றான். விமானம் அவரையும் ஏற்றிக்கொண்டு பறக்கிறது. இராமன் சீதைக்கு, முன் நடந்த போர்ச்செய்திகளை, வரிசையாக விளக்கிக் கூறுகிறான்.

1.4.124 கிட்கிந்த மகளிர் விமானம் ஏறுதல்:

இராமன் சீதைக்கு ஒவ்வொரு இடமாகக் காண்பித்து அவற்றின் சிறப்பை விளக்குகிறான். சேதுவைக் கடந்து அவர்கள் கிட்கிந்தைக்கு வருகின்றனர். அங்கு வைத்து, வானரப் பெண்களை விமானத்தில் ஏறும்படி இராமன் கூறுகிறான்.

விமானத்தில் அமர்ந்த அவர்களை தேவி முறைப்படி வரவேற்று உபசரிக்கிறாள். வானரிகள் மகிழ்கின்றனர். மீண்டும் விமானம் உயர்கிறது. இராமன் இரடியமுகம், பம்பை, யமுனை, சித்திரக்கூடம் முதலியவைகளை விளக்கிக் கூறுகிறான்.

1.4.125 இராமன் முதலியோர் பரத்துவாச ஆசிரமம் அடைதல்:

முன்பு இராமன் கடந்துசென்ற பல நிகழ்ச்சிகளையும் சீதைக்குத் தெரிவிக்கிறான். இராமன் இடங்களைப் பற்றியவிளக்கங்களையும் கூறுகின்றான். எல்லோரும் அயோத்தியை நோக்கிப் போகின்றனர். பின்னர்,பரத்துவாசமுனிவரை வணங்கி,பரதனைப் பற்றிய நிகழ்ச்சிகளைக் கேட்கின்றனர். பரதனைப் பற்றிக் கூறிய முனிவர், இராமனுக்கு விருந்தளிக்கிறார். அவர் பல முன்கால நிகழ்ச்சிகளை விவரிக்கிறார்.

1.4.126 கிட்கிந்தை சுந்தரகாண்ட செய்திகளைக் கூறல்:

சூர்ப்பநகை வந்ததிலிருந்து இராவணன் இறந்ததுவரையுள்ள எல்லா நிகழ்ச்சிகளையும் பரத்துவாசமுனிவர் அறிந்ததாகக் கூறுகிறார்.

1.4.127 இராமன் அனுமனிடம் வேண்டுதல்:

பரத்துவாச முனிவனிடமிருந்து வரம் பெறுகிறான் இராமன். சீதை போன்றோர் முனிவரை வணங்குகின்றனர். உடனே இராமன் அனுமனை அழைத்துப் பரதனின் நிலையை அறிந்துவர அனுப்புகிறான். போகின்ற வழியில் கங்கையைக் கடந்து குகனைக் கண்டு, தான் இராவணனை வென்று திரும்பி வந்த விவரத்தை அறிவிக்க, வானர அரசன் சுக்ரீவன் உதவியமை, சீதை துன்பத்தில் ஆழ்ந்தமை, வீடணன் சார்ந்தமை முதலிய எல்லாவற்றையும் குகனிடம் கூறவேண்டுகிறான் இராமன்.

1.4.128 அநுமன் பரதனைக் காணல்:

அநுமன் நந்திக் கிராமத்திற்குச் சென்று பரதனைக் காண்கிறான். பரதனைப் பிரிந்து, பின் இராமனின் பஞ்சவடிப்பிரவேசம் வரை நடந்த நிகழ்ச்சிகளை மாருதி சுருக்கிக் கூறுகிறான்.

1.4.129 முன்நடந்த பஞ்சவடி நிகழ்ச்சிகள்:

இராமன் முதலானோர் பஞ்சவடியில் தங்கும்பொழுது சடாயுவைக்கண்டு பேசுகின்றனர். இலக்குவன் கட்டிய புற்குடிலில் தங்குகின்றனர். அங்கு சில தீய சகுனங்கள் காணப்படுகின்றன. உடனே சூர்ப்பநகை, அழகியின் உருவில் இராமன் முன்னே வருகிறாள். அவரிவரும் உரையாடுகின்றனர்.

1.4.130 சூர்ப்பநகைப் பற்றிய செய்திகள்:

சூர்ப்பநகை, முதலில் இராமனையும் பின்னர் இலக்குவனையும், தன் கணவனாக இருக்கும்படி வேண்டுகிறாள். இராமன் அவளை இலக்குவனிடம் செல்ல வேண்டுகிறான். அவள் இலக்குவனிடம் சென்று கூறுகிறாள். அதற்கு அவன், 'உன் மீது எனக்குத் தயவில்லை; அண்ணனிடம் செல்வதே நல்லது' எனக் கூறுகிறான். அதைக்கேட்டு, அவள் மீண்டும் இராமனிடம் செல்லுகிறாள்.

1.4.131 சூர்ப்பநகை மானபங்கம்:

சூர்ப்பநகை இராமனிடமும், இலக்குவனிடமும் மாறி மாறி காதல் வேண்டுகோள் விடுக்கிறாள். பொறுமையிழந்து அவள் சீதையைத் தூக்கிச்செல்லப் பாய்ந்து வருவது கண்டு, இலக்குவன் அவளது மூக்கையும் மார்பையும் அறுத்து விடுகிறான். அதைக்கண்டு இராமன், 'இராவணனைக் கொல்லவேண்டும் அவனை இங்கு வரும்படிச் செய்க' என்கிறான்.

1.4.133 கரன் போருக்குப்புறப்படுதல்:

கரன், "இராம இலக்குவனரைக் கொன்று சூர்ப்பநகைக்கு இரத்தம் தருவேன்" எனக்கூறுகிறான். பதினான்கு அரக்கர்கள் இராமனை எதிர்க்கின்றனர். சீதைக்குக் காவலாக இலக்குவனை இருக்கச் செய்து, இராமன் அந்தப்பதினான்கு பேரையும் கொல்லுகிறான். சூர்ப்பநகை கரனின் முன்னால் வந்து விழுகிறாள். சீதையைப் பார்த்துக்கொள்ளும்படி இலக்குவனிடம் கூறிவிட்டு, ஆயுதங்கள் ஏந்தி எதிரிகளுடன் போரிடுகிறான் இராமன்.

1.4.134 கரன் போர் தொடுத்தல்:

இராமனும் அரக்கர்களும் பல ஆயுதங்களைப் பயன்படுத்திப் போரிடுகின்றனர். அவற்றையெல்லாம் இராமன் அறுத்து நிலத்திடுகிறான். தூடணன் போருக்கு வருகிறான். படையையும் அழித்து தூடணனைக் கொல்கிறான், இராமன். பிறகு இராமனுக்கும் திரிசிரனுக்கும் இடையே போர் நடக்கிறது. இராமன் அவனையும் கொல்கிறான். அதைக்கண்டு கரனும் படையும் போரிட நெருங்குகின்றனர். இராமனுக்கும் கரனுக்கும் கடுமையான போர் நடக்கிறது.

1.4.135 கரன் வதை:

கரனுக்கும் இராமனுக்கும் இடையே நடக்கும் போர் பயங்கரமாக மாறுகிறது. இருவரும் ஒருவரையொருவர் கொல்ல முயலுகின்றனர். ஆனால் இயலவில்லை. அப்போது இந்திரன் கொடுத்த ஆயுதங்கள் இராமனின் கைக்கு வந்து சேருகின்றன. உடனே தேரோட்டியையும் குதிரைகளையும் வெட்டிவீழ்த்துகிறான், இராமன். சற்று நேரத்தில் கரனின் தலையையும் வெட்டி நிலத்திடுகிறான். இச்செய்திகளை முனிவர்களுக்கு அறிவிக்க, இலக்குவனை அனுப்புகிறான் இராமன். அதற்குள் சீதை வந்து இராமனின் இரத்தம்படிந்த உடலிலுள்ள காயங்களைக் கண்ணீரால் கழுவி, கைகளால் தடவி, மாய்த்து விடுகிறாள்.

1.4.136 சூர்ப்பநகை இராவணனிடம் முறையிடுதல்:

இராமன் கரனைக் கொன்ற செய்தியை இலக்குவன் முனிவர்களிடம் கூற, அவர்கள் அசுரர்களின் மாயைகளில் இருந்து தப்ப, ஒரு கவசமும் மோதிரமும் பதக்கமும், பரிசாக அளிக்கின்றனர். இராமன் மோதிரத்தையும், சீதை சூடாமணியையும் அணிந்துகொண்டு கவசத்தை இலக்குவனுக்குக் கொடுக்கின்றனர். அதற்கிடையே சூர்ப்பநகை இராவணனின் முன்னே இரத்தம் தோய்ந்த நிலையோடு வீழ்கிறாள். "யார் உனக்குத் தொல்லை கொடுத்தது?" என இராவணன் வினவுகிறான். அவள், இராம இலக்குவர் பஞ்சவடிக்கு வந்ததை விவரிக்கிறாள். இராமன் கரனைக் கொன்றதும் இலக்குவன் தன் உறுப்புகளை அறுத்ததையும் கூறுகிறாள்.

1.4.137 இராவணன் மாரீசனுக்குக் கூறியவை:

"சீதையை அண்ணனுக்கு மனைவியாக்க நினைக்கிறேன்" எனச் சூர்ப்பநகை கூற, இராவணன் அதற்கு இசைகிறான். மட்டுமல்ல; பெருங்காமம் கொண்ட தாய்மாமன் மாரீசனிடம் சென்று, சீதையைக் கவர்ந்து வரவேண்டுமென உதவிகோருகிறான். மாரீசன் 'எனக்கு இதில் கருத்தில்லை' எனக்கூற, இராவணன் அவனை 'வாளால் கொல்வேன்' என்கிறான். உடனே, ஒரு பொன்மானின் வேடமணிந்து இராமாசிரமத்திற்குச் செல்லவும் செய்கிறான். அம்மானின் அதிசய அழகுகண்டு, அதைப்பிடித்துத் தரும்படி இராமனை வேண்டுகிறாள் சீதை.

1.4.138 சீதையை அபகரிக்க முனைதல்:

இராமன் பொன்மானின் பின்னால் செல்லுகிறான். மான், இராமனருகே நிற்பதுபோலக்காட்டி விலகிச், செல்லுகிறது. அதைக்கண்டு பாணம் தொடுக்கிறான் இராமன். உடனே, மாரீசன் இராமனின் குரலில் இலக்குவனையும், சீதையையும் அழைத்து அழுகிறான். அக்குரல் கேட்ட சீதை, இலக்குவனிடம் இராமனருகே செல்ல வேண்டுகிறாள். இராமனுக்கு ஆபத்தொன்றும் வராது என்றும் அது

அசுரர்களின் மாயை என்றும் இலக்குவன் கூற, சீதை அவனை வைகிறாள். தேவர்களைக் காவல் வைத்துவிட்டு இலக்குவன் போகிறான். அப்போது இராவணன் முனிவர் வேடம் புனைந்து வந்து இராம இலக்குவர் 'சீதையைத் தனியே விட்டு சென்றது முறையல்ல' என்று கூறுகிறான். முனிவனிடம் உரையாடுகிறாள் சீதை. தன்னைப்பற்றிக்கூறிய இராவணன், "சீதையை இராமன் பக்கம் கொண்டு போகட்டுமா?" என்று வினவுகிறான்.

## 1.4.139 இராவணன் சீதையை சிறைவைத்தல்:

சூர்ப்பநகை அங்குவந்து சேர்ந்து, சீதையைத் துன்புறுத்த முயலுகிறாள். அதைக்கண்டு, முனிவர் வேடம் கொண்ட இராவணன், அவளைத் தாக்குகிறான். இராமன் இருக்கும் இடம் செல்ல, தேரில் ஏற, சீதையிடம் வேண்டுகிறான். சீதை தேரில் ஏற, தேர் உயர்ந்து பறக்க, இராவணன் தன் முனிவர் வேடத்தைக் கலைத்து, சுயவடிவில் தேவியின் முன் தோன்றுகிறான். அதைக்கண்டு அஞ்சிய தேவி, இராமனை அழைத்துப்புலம்புகிறாள்.

## 1.4.140 சடாயு வதம்:

சீதை தேரிலிருந்து மீண்டும் மீண்டும் புலம்புகிறாள். சீதையின் அழுகுரல் கேட்டு, அங்கு வந்த சடாயு, இராவணனை எதிர்க்கிறான். இராவணன் அப்பறவை யரசனை வெட்டி வீழ்த்துகிறான். "இராமன் வந்துவிவரங்களை அறியும்வரை இறவாமலிரு" எனத்தேவி பறவையை வாழ்த்துகிறாள். இராவணன் மீண்டும் பயணம் தொடர்கிறான். ருசியமூகமலைக்கு மேலே தேர்வர, தேவி நகைகளை ஆடையில் பொதிந்து கீழே இடுகிறாள். இராவணன் சீதையை அசோக வனத்தில் இருத்தி, காவலுக்கு ஏவலரை வைக்கிறான்.

1.4.141 இராமன் செய்தி அறிதல்:

மாரீசனைக் கொன்று திரும்பிவரும்போது, இராமன் இலக்குவனைக் காண்கிறான். 'சீதையைத் தனியே விட்டுவந்தது ஏன்?' என்று வினவ, இலக்குவன் நடந்தவைகளைக் கூறுகிறான். இராமன் சீதையைத் தேடிக்காணாமல் வருந்துகிறான். இலக்குவன் அண்ணனைத் தேற்றுகிறான். அதற்குள், அவர்கள் விழுந்துகிடக்கும் சடாயுவைக் காண்கிறான். சீதையைக் கவர்ந்தது இராவணன் என்று கூறி சடாயு இறக்கிறான். பறவையரசனின் இறுதிச்சடங்குகளை அவர்கள் நடத்துகிறார்கள்.

1.4.142 சுக்ரீவன் இராமன் நட்பு:

இராமலக்குவர் சீதையைத் தேடி அலைகின்றனர். வழியில் அவர்கள் கவந்தனைக் காண்கின்றனர். அவனைக்கொன்று, அவனது அறிவுரைப்படி ருசியமுக மலைக்குப் போகின்றனர். அங்கு வைத்து சுக்ரீவனுக்கும் இராமனுக்கும் நட்பு ஏற்படுகிறது. சீதையைத் தேடிக் கண்டுபிடித்துத் தருகிறேன் எனச் சுக்ரீவனும், வாலியைக் கொன்று நாட்டை மீட்டுதருவதாக இராமனும், உறுதிமொழி கூறுகின்றனர். அவ்வாறே செய்கிறான்.

1.4.143 அனுமன் சீதையைத் தேடப்புறப்படல்:

சீதையின் பிரிவைத் தாங்கிக்கொண்டு, நான்கு மாதங்கள் ருசியமுகமலையில் தங்குகிறான் இராமன். நான்கு மாதங்கள் ஓடிய பின்னும், சுக்ரீவன் சீதையைத் தேட எவ்வித முயற்சியும் எடுக்காதிருப்பதைக்கண்டு, கோபமடைந்த இராமன், இலக்குவனைக்கிட்கிந்தைக்கு அனுப்புகிறான். இலக்குவனின் வில்லோலி கேட்டுப் பயந்த சுக்ரீவன், சீதையைத் தேட நாற்புறமும் வானரர்களை அனுப்புகிறான். அங்கதன் தலைமையில் தென்திசைக்குப் புறப்பட்ட வரைசங்கத்தில் உட்பட்ட அனுமனை அழைத்த இராமன், மோதிரம் கொடுத்து, அடையாள வாக்கியமும் சொல்லி, அனுப்புகிறான்.

### 1.4.144 சீதையை வானரர் தேடுதல்:

சீதையைத் தேடி வானரர், வனத்தில் அலைய, பேருடல் கொண்டு ஓர் அசுரனைக் காண்கின்றனர். இராவணன் எனக்கருதி, அங்கதன் அவனைக் கொல்கிறான். பின்னரும் தேடித் தேடி சீதையைக் காணாமல் 'பிரயோப வேசம்' என்னும் குகைக்குள் அகப்பட்ட 'சுயம்பிரபாவின்' கருணையால் உயிர்பிழைக்கின்றான். இராமாயணக்கதையை சாம்பவான் கூறக்கேட்டு வந்த சம்பாதி, சீதையின் நிலையை அவர்களுக்கு அறிவிக்கிறான். கடல்கடக்க முடியாமல் நிற்கும் வானரரைக்கண்ட ஜாம்பவான் அனுமனைப் புகழ்கிறான். அனுமன் இலங்கைக்குத் தாவுகிறான். வழியே விருந்தூட்டவந்த மைநாகத்தைச் சமாதானம் செய்து, சோதனை செய்யவந்த சுரசையைத் தோற்கடித்து, இலங்கையை அடைகிறான். அங்கு நுழைய முயல, இலங்கை தேவி தடுக்கிறாள். அவளை அங்கிருந்து பின்வாங்கச்செய்து, இலங்கைக்குள் சென்று, அனுமன் சீதையைத் தேடுகிறான்.

### 1.4.145 அனுமன் சீதையைக் காணல்:

அனுமன் சீதையை இலங்கையில் தேடுகிறான். வாயு தேவன் அறிவுரைப்படி அசோகவனத்துக்குச் சென்று, சீதையைக் கண்டுபிடிக்கிறான். மோதிரம் கொடுத்து அடையாள வாக்கியமும் கூறுகிறான். இலங்கையை அழிக்கிறான். தன்னை எதிர்த்த அட்சகுமாரனைக் கொல்லுகிறான். அதன்பின், இந்திரசித்து அனுமனைக் கட்டியிழுத்து, இராவணன் முன்னிலையில் நிறுத்துகிறான். அனுமனின் வாலில் தீயைக் கொளுத்தச் சொல்லுகிறான் இராவணன். உடனே, அனுமன் மேலே உயர்ந்து, இலங்கையை தீக்கிரையாக்கி, கடலில் குதித்துத்தீயை அணைத்து, சீதையிடமிருந்து பதக்கமும் வாங்கி, மறுகரையை அடைகிறான். அனுமன் சூடாமணியைப் பெற்ற இராமன், அதைத்தன் அங்கங்களில் வைத்துப்பலவாறு புலம்புகிறான். சுக்ரீவன் அதைக்கண்டு, இராவணனைக் கொல்ல இலங்கைக்குச் செல்லவேண்டுமென்று இராமனிடம் கூறுகிறான்.

1.4.146 இராமன் முதலியோர் இலங்கைக்குச் செல்லுதல்:

இராமன் இலங்கையில் கண்டவற்றை ஆராய, அனுமன் கூறுகிறான். நீலன் முதலியோருக்குப் படை புறப்படச் செய்ய ஆணையிடுகிறான். இராமனை, அனுமனும் இலக்குவனும் அங்கதனும் தங்கள் தோளிலேற்றுகின்றனர். சீதையின் பிரிவை நினைத்து இராமன் வேதனை அடைய, இலக்குவன் தேற்றுகிறான். அதற்குள் வீடணன் இராமனைச் சரணடைகிறான். அவனை இலங்கை அரசனாக முடிசூட்டுவிக்கிறான். இலக்குவன், இராமனின் ஆணைப்படி, இலங்கைக்குள் செல்லப் பாலம் அமைக்கின்றனர். இராமரும், மற்றோரும் பாலம் வழியாக இலங்கைக்குள் நுழைகின்றனர். அப்போது சுகசாரணர் வானரவேடம் புனைந்து வருகின்றனர். அவர்களைப்பிடித்துக்கட்டிய போது, "இராவணன் ஆணைப்படி படைகாண வந்தவர்கள் நாங்கள்" என்கின்றனர். அவர்களை விட்டு விடுகிறான் இராமன். அவர்கள் திரும்பிச் சென்று, சீதையை இராமனுக்குக் கொடுப்பதே நலமென்று அறிவுரை கூறுகின்றனர். இராவணன் அவர்களை விரட்டிவிட்டு, வித்யுசிகனிடம் மாயைகாட்ட ஆணையிடுகிறான். மாயையால் உருவான இராமனின் முகம்கண்டு, சீதை மயங்கி விழுகிறாள். அவளது துணைக்கு நின்றோர், உண்மையை விளக்கி, மயக்கம் நீக்குகின்றனர்.

1.4.147 சுக்ரீவன் செயலும் அங்கதன் தூதும்:

வீரப்படையைக்காண கோபுரத்தில் மீது வந்த இராவணனோடு எதிர்த்த சுக்ரீவன், அவனது பத்து மகுடங்களையும் இராமன் முன் கொண்டு வந்து வைத்தான். அது முறையில்லை எனக் கூற, 'இராவணனைக் கண்டபோது பொறுமையிழந்து அவ்வாறு செய்து விட்டேன்', என்கிறான், சுக்ரீவன். வானரர் போரிடத் தொடங்குகின்றனர். இராமனும் பிறரும் போர்க்களம் வந்து சேருகின்றனர். அப்போது, இராவணன் சுக்ரீவனிடம் செல்ல, ஒரு தூதுவனை அனுப்புகிறான். அதற்குத்தகுந்த அங்கதனைத், தூதுவனாக இராவணனிடம் அனுப்புகிறான். வாலியின் மகன் அங்கதன், இராமன் கூறியவற்றைத் தூதாக அறிவிக்கிறான். அதற்கு இராவணன் தக்க பதில் அளிக்கிறான். சீதையை ஒப்படைக்க வேண்டும் அல்லது போருக்கு தயாராக இருக்கத் தூதுவரை கூறுகிறான்.

1.4.148 அங்கதன் போர்ச் சுருக்கம்: I

அங்கதன் தன்னைப்பிடித்துக் கட்ட வந்த அரக்கர்களைக் கொல்கிறான். விவரங்களை இராமனிடம் வந்து கூறுகிறான். உடனே, வானரர் போர் தொடங்குகின்றனர். இருவருக்குமிடையே பெரும்போர்போர் மூளுகிறது. சூரியன் மறையவே, இந்திரசித்து இருளில் மறைந்து நின்று நாகாஸ்திரம் எய்தி, வானரர்களையும் இராம இலக்குவரையும் கட்டிப்போடுகிறான். அதைக் கண்ட கருடன் வருகிறான். நாகாஸ்திரங்கள் மறைகின்றன. கட்டவிழ்ந்து, அனைவரும் எழுகின்றனர்.

1.4.149 அங்கதன் போர்ச்சுருக்கம்: II

வானரர்கள் தீப்பந்தங்களெறிய, தூம்ராக்ஷன் போருக்கு வருகிறான். அனுமனே அவனை எதிர்க்கின்றான். ஒரு மலையால் அவனை எறிந்து கொல்கிறான். அனுமன். உடன், வச்சிரதம்டிரனை அனுப்புகிறான், இராவணன். அந்த அரக்கன் வானரரோடு மோதுகின்றான். அங்கதனுக்கும் வச்சிரதம்ட்டிரனுக்கும் போர் நடைபெறுகிறது. அங்கதன் வாளால் அவனை வெட்டி வீழ்த்துகிறான். பிறகு, அகம்பனைக் கொல்லுகிறான், அனுமன். பின்னர், இராவணன் ஆணைப்படி பிரகஸ்தன் வருகிறான்.

1.4.150 நீலன் போர்ச்சுருக்கம்:

வானரரும், பிரகஸ்தனும் போரிடுகின்றனர். துன்முகன், சமுன்னதனையும், சாம்பவான், மகாநாதனையும் வீழ்த்துகின்றனர். பின்னர் நீலனும், பிரகஸ்தனும் போர்புரிகின்றனர். இராவணன் போர்க்களத்திற்குவந்து, வானரரைத் தாக்குகிறான். வானரர் அலறிப்புடைத்துக்கொண்டு இராமனைத் தஞ்சமடைகின்றனர். அதற்குள் அனுமன் வருகிறான். அனுமன் இராவணனின் கன்னத்தில் ஓங்கி அறைகிறான். அதனால் மண்ணில் விழுகிறான் இராவணன். நீலன் உடனே இராவணனின் முடிமேலும் கொடிமேலும் வில்மேலும் நடனமாடுகிறான்.

### 1.4.151 இலக்குவன் இராவணப் போர்ச்சருக்கம்:

இலக்குவனும் இராவணனும் போரிடுகின்றனர். இராவணன் வேல் எறிகிறான். வேல் ஏற்று விழுந்த இலக்குவனை எடுத்துச்செல்ல, இராவணன் முயலுகின்றான். முடியவில்லை. உடனே அனுமன் மிக இலகுவாக இலக்குவனை எடுத்துச்சென்று இராமனின் முன் கிடத்துகிறான். பிறகு இராமனும் இராவணனும் போரிடுகின்றனர். இராவணன் இராமனிடம் தோற்றுப்போய், இலங்கைக்குச் சென்று, கும்பகர்ணனை உணர்த்த முயலுகிறான். உணர்ந்த கும்பகர்ணன், முதலில் அண்ணனின் செயலைப் பழித்தான் எனினும், அண்ணனின் ஆணைக்குப் பணிந்துபோருக்குப் போகிறான். அங்குச் சென்று, வானரரை வாரிவிழுங்குகிறான். அங்கதன் எதிர்க்கிறான். அனுமன் ஒரு மலை எடுத்து எறிகிறான். இராவணன் மாருதியை நோக்கிச் சூலம் எறிகிறான். அதுபட்டு விழுகிறான் மாருதி.

### 1.4.152 கும்பகருணன் வதைச்சருக்கம்:

வானரர் தலைவர்களுக்கும், கும்பகர்ணனுக்கும் போர் நடக்கிறது. சுக்ரீவன் அரக்கனை நெருங்குகிறான். ஒரு மலையால் அரக்கனை எறிகிறான். உடனே கும்பகர்ணன் பதிலுக்குத்தாக்க, சுக்ரீவன் கீழே விழுகிறான். அவனை எடுத்துச்செல்கிறான், கும்பகர்ணன். அரண்மனை மேலிருந்து, பெண்கள், சந்தனம் மாலை போன்றவைகள் தூவுகின்றனர். அவை சுக்ரீவனின் உடலில் விழ மயக்கமுணர்ந்த சுக்ரீவன், கும்பகர்ணனின் கன்னத்தில் தாக்கி, அவனது மகுடத்தையும் பறித்துக்கொண்டு வந்து விடுகிறான். மீண்டும் போருக்கு வருகிறான் கும்பகர்ணன். பிறகு அவன் இராமனுடன் போரிடுகிறான். அப்போரில் இந்திராத்திரம் கொண்டு செல்கிறான் இராமன். கும்பகர்ணன் இறந்த சேதிகேட்டு வருந்திய இராவணன், தன் மக்களைப் போருக்கு அனுப்புகிறான். அப்போரில் பனசன் மத்தனையும், துவிதன் உன்மத்தனையும், அங்கதன் நராந்தகனையும், அனுமன் தேவாந்தகனையும் கொல்லுகின்றனர். பிறகு, இலக்குவனுக்கும் அதிகாயனுக்கும் இடையே போர்

நடக்கிறது. வாயுதேவனின் உரைப்படி, பிரம்மாஸ்திரத்தைப் பயன்படுத்தி, அதிகாயனைக் கொல்கிறான், இலக்குவன். உடனே, இந்திரசித்து வந்து மோகனாஸ்திரம் பயன்படுத்தி, வானரர்களையும் அரசர்களையும் தரையில் வீழ்த்துகிறான்.

1.4.153 மருந்துமலைச்சருக்கம்:

அனுமன் இராம இலக்குவரையும் வானரரையும் காப்பாற்ற, மருந்து தேடிப்போகிறான். மலையில் சென்றும் மருந்து காணாமல், சிகரத்தையே பறித்துக்கொண்டு வருகிறான். மூலிகைகளின் மணம்பட்டவுடனே, அனைவரும் உயிர்பெற்று உணர்கிறார்கள். உடனே, மலைச்சிகரங்களை எறிந்து பழைய நிலைமையில் கொண்டு வருகிறான். உணர்வுபெற்ற வானரர், இலங்கைக்குத் தீ வைக்கின்றனர். கும்பன் முதலியோர் போருக்கு வருகின்றனர். வானரர் அசுரர்களைக் கொல்லுகின்றனர். உடனே மகராத்தன் வந்து, போர் புரிகிறான். இந்திரசித்து, மோகனாத்திரம் பயன்படுத்தி, எதிரிகளை மயக்கமடையச் செய்து, நிகும்பலைக்குச் சென்று வேள்வி செய்கிறான். செய்தி அறிந்த வீடணன் முதலானோர், நிகும்பலைக்குச் செல்கின்றனர்.

1.4.154 இந்திரசித்து வதைச்சருக்கம்:

இந்திரசித்திற்கும், இலக்குவனுக்கும் போர் நடக்கிறது. இடையிடையே இந்திரசித்து வீடணனையும் எய்கிறான். இலக்குவன் இந்திராத்திரம் பயன்படுத்தி இந்திரசித்தைக் கொல்கிறான். அது கேட்டு இராவணன், மூலபலப்படையை அனுப்புகிறான். வானரரும் மூலப்படையினரும் போரிடுகின்றனர். அனேக அசுரர்கள் இறக்கின்றனர். அரக்கியர்கள் அதறிந்து பெரிதும் வருந்துகின்றனர். வானரருக்கும் அரக்கர்களுக்கும் மீண்டும் போர் நடக்கிறது. வானரர் பின்னடைவதைக் கண்ட சுக்ரீவன், விருபாக்கனையும் மகோதரனையும் கொல்லுகிறான். பிறகு இராமனும் இராவணனும் போரிட்டுப் பல்வகை திவ்யாத்திரங்களைப் பயன்படுத்துகின்றனர்.

1.4.155 இராவணன் வதைச்சுருக்கம்:

இராம இராவணப்போர் தொடர்கிறது. இராவணன் இலக்குவனை நோக்கி வேலெறிகிறான். இந்திரன் ஆணைப்படி மாதலி கொண்டு வந்த தேரேறிப் போரிடுகிறான் இராமன், இராவணன் தலைகளைக் கொய்கிறான். அகத்தியன் வந்து சூரிய இருதய மந்திரம் ஓத, பைதாமகாஸ்த்திரம் பயன்படுத்தி இராவணனைக் கொல்கிறான். அரக்கர் வருந்துகின்றனர். இராமனும் மற்றோரும் புஷ்பக விமானத்தில் ஏறி, நந்திக்கிராமத்தில் வந்து சேருகின்றனர். பரதன் சத்ருக்கனிடம் நகரையைச் சமன்செய்யச் சொல்லுகிறான். எல்லோரும் மகிழ்கின்றனர்.

1.4.156 இராமன் நந்திக்கிராமம் அடைதல்:

தேவ மங்கையர்கள் பூமிக்கு வந்தனர். பரதன் இராமனை வணங்கினான். இராமன் பரதனைக் கட்டி அணைக்கிறான். பரதன் சீதையையும், சத்ருக்கன் அண்ணன்மார்களையும் தொழுகின்றான். இராமன் கௌசல்யை முதலிய தாய மார்களையும், வசிட்ட முனிவரையும் வணங்குகிறான். தாயமார்கள் இராமன் உச்சிமோந்து மகிழ்கின்றனர்.

1.4.157 நந்திக்கிராம நிகழ்ச்சிகள்:

சீதை, இராமனின் தாயமார்களை வணங்குகிறாள். பரதன் இராமனுடன் வந்தவர்களைப் புகழ்கிறான். அனைவரும் விமானத்திலிருந்து இறங்குகின்றனர். இராமனின் ஆணைப்படி விமானம் இந்திரனிடம் செல்கிறது. பரதன் நாட்டை ஆள வேண்டுமென்று இராமனிடம் வேண்ட, இராமன் ஒப்புக்கொள்ளுகிறான். கோசலையின் ஆசைப்படி எல்லா வானரப் பெண்களும் அலங்கரிக்கப்படுகிறார்கள். இராமன் நகரத்திற்குச் செல்லுகிறான். அவனுடன் வானரரும் தம்பியரும் செல்கிறார்கள்.

1.4.158 இராமர் முடிபுனைதல் ஏற்பாடுகள்:

இராமன் முடிசூட்டுவிழாவில் மகிழ்ந்த தேவர்கள், பூமழை பொழிகின்றனர். அப்போது இராமன் அயோத்தி சென்று குருமார்களையும் மாமுனிவர்களையும் வணங்குகிறான். "சுக்ரீவன் எங்கள் தம்பி" என்று கூறுகிறான் பரதன். இராமன் அறிவுரைப்படி எல்லா வானரர்களுக்கும் வீடான் தங்க வீடு கொடுக்கிறான். எல்லோரும் பூசனை செய்கின்றனர். . அபிடேகத்திற்குக் கடல்நீர் கொண்டுவர இரத்தினக்குடம் அளித்து, வானரரை அனுப்புகிறான் சுக்ரீவன். அழைக்கப்பட்ட முனிவர்களும் சிற்றரசர்களும் அரசர்களும் அயோத்திக்கு வந்து சேருகின்றனர்.

1.4.159 முடிபுனை விழாநிகழ்ச்சிச் சுருக்கம்:

முடிசூட்டுவிழாவுக்குச் சனகன், யுதாசிதகாசிராசன், முனிவர்கள் முதலியோர் வந்து சேருகின்றனர். அனுமன் போன்றோர் இரத்தினக்குடங்களுடன் நான்கு பெருங்கடல்களிலிருந்தும், மகாநதிகளிலிருந்தும், தீர்த்தம் கொண்டு வருகின்றனர். அனுமன் முதல் முதலாகக் கொண்டு வருகிறான். அதைக்கண்டு மகிழ்வுடன் அவனைப் புகழவும் செய்கின்றனர். சத்ருக்கனும் மற்ற பிறரும் சேர்ந்து நிகழ்ச்சிக்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்கின்றனர்.

1.4.160 இராமன் முடிபுனைதல்:

வசிட்டரும் மற்றோரும் அபிடேகக்கும்பம்நிறைத்து வைத்து, மண்டபத்திற்கு வந்து இராமனை வரவேற்கிறார்கள். மாமுனிவர்கள் அபிடேக நீரால் இராமனை நீராட்டுகின்றனர். தேவர்கள் மகிழ்ந்து பூமழை தூவுகின்றனர். தேவேந்திரன் முதலியோர் ஒவ்வொரு வகையிலான அணிகளை அணிவிக்கின்றனர். இலக்குவன் வெண்கொற்றக்கொடை பிடிக்கிறான். வானரர் தங்கள் மகிழ்ச்சியை ஒவ்வொரு

வகையில் வெளிப்படுத்துகின்றனர். பூமாதேவி தேனொழுகும் பழங்களை உதிர்க்கின்றாள். நீர்நிலைகள் இன்சுவை பெற்று விளங்குகின்றன.

1.4.161 இராமன் பரிசளித்தல்:

இராமன் தன்னை அண்டியவர்களுக்குப்பலவகை பரிசுப்பொருட்களை அளிக்கிறான். இராமன் சீதைக்கெனத்தந்த மாலையைக் கையில் வைத்தபடி அனுமனின் முகத்தைப் பார்க்கிறான். அதைக்கண்டு இராமன், சீதை அனுமனுக்கு மாலை கொடுப்பதற்கு யாரும் எதிரல்ல, என்று கூறுகிறான். அதைக்கேட்டு தேவி, மாருதிக்கு மாலை கொடுத்து, நீண்ட ஆயுள்பெற வாழ்த்தவும் செய்கிறாள். உடனே தேவ முனிவரான நாரதர் தோன்றி இராமனை வணங்குகிறார்.

1.4.162 நாரதர் வாழ்த்துப்பாடல்:

'இராமன் மூவடியால் முப்பாரும் அளந்த பரம்பொருள்', 'அரக்கர்களை அழித்து பெருவினைகள் தீர்த்தவன்', 'தன்னைத் துதிப்பவர் மனதுக்குடிகொள்பவன்', 'அனுமன், சுக்ரீவனை ஏவலராய் கொண்டவன்', 'இலக்குமிதேவியைப் பக்கத்தே கொண்டவன்'; 'தேவர்கள் புகழ்ந்து அடிதொழ வந்த மன்னவன்' போன்ற கருத்துக்கள் நாரதர் இசையில் இடம் பெறுகின்றன.

1.4.163 நாரதர் வாழ்த்துத் தொடர்கிறது:

'தேவ எதிர்களான அரக்கர்களோடு போரிட்டு வென்றான்', 'ஆதிநாயகன்', 'அமரர்களின் அதிபதி', 'அருளாளன்', 'மனதுள் இருப்பவன்', 'இருளகற்றுபவன்', 'சானகியைக் கொண்டவன்', 'திருமால் என்னும் மாயவன்', 'என்றும் மனதிலிருப்பவன்' போன்ற புகழிசையால் நாரதர் பாடுகிறார்.

1.4.164 நாரதர் விடைபெறுதல்:

இராமனைத் துதித்தபின், நாரதன் விடை பெறுகிறான். எல்லோரும் இராமனை விட்டு அகலுகின்றனர். பின்னர், இராம நாட்டின் பெருமையை விளக்குகின்றனர். இராமன் பாற்கடலுக்குச் செல்லப்புறப்படுகிறான். கருடன் வந்து எடுத்துக்கொண்டு மறைகிறது.

நூற்பயன்:

துன்பமெனும் பிறவிக்கடலை நீந்துவதில் விருப்ப, திருமாலின் மீது ஊழ்ந்த பற்றுக்கொண்டு, சீராமன் பக்தியுடன் இயற்றிய இக்கவிதையைப் படிப்போர், அருவிதிரு பத்மநாபனின் பாதக்கமலங்களைச் சரணடைவர் என்கிறார் கவிஞர்.

1.5 ஒப்பீடு – கம்பராமாயணமும் இராமசரிதமும்:

1) கம்பராமாயணம், நூல் மரபுப்படி, பாயிரத்துடன் தொடங்குகிறது. இதில் கடவுள் வணக்கம், அவையடக்கம், நூல்வரலாறு முதலியவை கூறப்படுகின்றன. 'உலகு எல்லாம் படைத்துக்காத்து அழிக்கும் தொழில்களை இடைவிடாது ஒரு விளையாட்டாகக் செய்பவருவும் தலைவராகிய' இறைவனிடம் கம்பன் அடைக்கலமாகிறான். தான் வழிபடும் கடவுளைர இனம்சுட்டாது 'தலைவன்' என்றே குறிப்பிடுவது உரைத்தக்கது (கம்.பா.பாயிரம்.பா.1).

யுத்த காண்டத்திலும் இறைவனை, மானிடர் மனம்போன போக்கில் ஒருவனாகவோ பலராகவோ, இவனாகவோ அவனாகவோ, உளனாகவோ இலன் என்றோ கணிப்பதுடன், 'இறைவன் வாழ்க்கையே இதுவென்னில் நம்வாழ்க்கை என்னவென்று சொல்வது'; என வினவுகிறான் கம்பன் (கம்.யு.பா.1).

இராமசரிதமும் பாயிரத்துடன் தொடங்குகிறது. இதில் கடவுள் வணக்கம், அவையடக்கம், நூல்வரலாறு முதலியன கூறப்படுகின்றன. வணக்கம், விநாயகர் வாழ்த்துடன் தொடங்குகிறது. கலைமகள், திருமால் சிவன், உமையவள், திருமகள் மற்றும் தேவர்களை வழிபட்டு நூலைத் தொடங்கி, அவையடக்கம் கூறுகிறான் ஆசிரியன். வால்மீகி, வியாசர், அகத்தியர், நம்மாழ்வார் முதலியோரையும் சீராமன் வழிபடுகிறான். இது, சீராமக்கவியின் பலதெய்வ வழிபாட்டை உணர்த்துகிறது.

(இரா.ச.ப.1,பா.1 முதல் 8 வரை)

2) கம்பன், வானரவீரர், இலங்கையின் அமைப்பு, காவல்மிகுதி, படைவளம் முதலியவற்றை அனுமன் கூற, மகிழ்ந்து சென்று, பன்னிரண்டு நாட்களில் தென்றிசைக்கடலைக் கண்ணுற்றமை முதலியவற்றை சுந்தரகாண்டத்தின் இறுதியில் கூறுவான்.

சீராமகவி, இரண்டு முதல் நான்கு படலங்களில் இச்செய்திகளைத் தருகின்றான். வானரப்படை தென்கடற்கரையில் தங்கிய கம்பன் காப்பியச் செய்தியை, நான்காம் படல இறுதியில் இரண்டே பாடல்களில் சுருங்கவுரைக்கிறான்.

(இரா.ச.ப.4 பா.10,11)

3) அனுமனால் இலங்கை எரியுண்டபின், பிரமனுடன் போந்த தெய்வத் தச்சன் மயனால், இராவணன் இலங்கையைப் புதுப்பித்தான் எனக் கம்பன் மந்திரப்படலத்தில் கூறுகிறான்.

(கம்.யு.ப.2. பா.1-4)

சீராமகவி அதனை விட்டுவிடுகிறான்.

4) மந்திராலோசனையில் இராவணன், சேனைக்காவலன் மகோதரன், வச்சிரதந்தன், துன்முகன், மகாபார்சுவன், பிசாசன், பானுகோபன், வேள்வியின் பகைவன், புகைக்கண்ணன் முதலியோர் பழுதுடைக்கும் நெறியாகத்

தத்தமக்குத் தோன்றியவற்றைக் கூறுகின்றனர். கும்பகருணனும், இந்திரசித்தும் இராவணனுக்கு உடன்பட்டும், வீடணன் மறுத்தும் தம் கருத்தைத் தெரிவிக்கின்றனர். இவை கம்பர் அமைக்கும் பாங்கு.

(கம்.யு:ப.2.பா.22-110).

சீராமகவி தரும் மந்திராலோசனையில் பிரகத்தன், துன்முகன், விச்சிரவல்லன், வீபீடணன், கும்பகருணன், மகாபார்ச்சுவன், மேலும் விபீடணன் முறையே தத்தம் கருத்தைத் தெரிவிக்கின்றனர். இரு கவிஞர் கூற்றுகளும் பொதுவாக ஒன்றே; முறை வைப்பில் மாற்றமேற்படுகிறது.

(இரா.ச.ப:5. பா.2-11)
(இரா.ச.ப:6. பா.1-11)

5) இராமனின் பெருவலிமையைக்கூறி, நெறிதிறம்பியமையால் அழிவுற்ற இரணியன் கதையையும் எடுத்துக்கூறி, 'இராமன் திருமாலாகத் தோன்றியுள்ளான்; நெறிதவறிய உனக்கு அழிவுவரும்', என வீடணன் கூறுவான். இது கம்பர் தரும் செய்தியாகும்.

(கம்.யு:ப.3)

சீராமகவி, திருமாலின் அவதாரங்களான வராகம், நரசிங்கம், வாமனன், பரசுராமன் முதலியன அரக்கர்களை அழிக்கத் தோன்றியன என்று கூறி, 'அரக்கர்குலம் அழியவே இராமன் அவதரித்துள்ளான்' என விபீடணன் கூற்றாகப் பாடுவான்.

(இரா.ச.ப:7, பா.6).

6) அனலன், அனிலன், அரன், சம்பாதி ஆகிய அமைச்சர் நால்வருடன் கலந்தே வீடணன் இராமனிடம் அடைக்கலம் புக முடிவு செய்தான் என்றும், அடைக்கலம் பற்றி சுக்கிரீவன், சாம்பவன், நீலன் முதலியோரின் கருத்தை இராமபிரான் கேட்டான் என்றும், அனுமன் 'அடைக்கலமாக வந்தோரை ஏற்பதே நலம்' எனக்கூறினான் என்றும் கம்பன் விரித்துக்கூறுவான்.

(கம்.யு.ப:4, பா.13-15)

சீராமகவி, வானரவீரர் கருத்தைக் கேட்டதாகப் பொதுவாகக் கூறி, இருபாடல்களில் விபீடணன் அடைக்கலத்தைச் சுருக்கி உரைப்பான். (இரா.ச.ப:9.பா.1-2). மேலும், இலங்கைபற்றி வீடணனிடம் கேட்ட செய்தியைச், சுக்கிரீவன் வழி இராமன் அறிந்தான் எனக் கூறுவான்.

(இரா.ச.ப:9 பா.2)

7) வருணனை விழிவேண்டி ஏழு நாட்கள் தருப்பைப்புல்லில் தவமிருந்தான் எனக் கம்பன் கூறுவான் (கம்.யு.ப:6. பா.6-7)

சீராமன் மூன்று நாட்கள் தவம் என்று கூறுவான்.

(இரா.ச.ப:9. பா.5)

8) 'சேதுஅணை மூன்று நாட்களில் கட்டி முடிக்கப்படுகிறது; அணை நூறு யோசனை நீளமும் பத்து யோசனை அகலமுமுடையது' - எனக் கம்பன் அமைப்பான். (கம்.யு.ப:7. பா.72)

சீராமன், ஐந்து நாட்களில் 14, 20, 21, 22, 23 - என 100 யோசனை நீளத்தில் கட்டப்பட்டதாகக் கூறுகிறான். அகலம் பற்றிக் குறிப்பிடவில்லை. (இரா.ச.ப:9, பா.9,10)

9) இராவணனால் அனுப்பப்பட்ட சுகசாரணர், இரவில் இராமனது பாடிவீட்டில் வந்ததாகக் கம்பன் கூற, சீராமன் வந்த பொழுதைச் சுட்டவில்லை. மேலும், சுகசாரணர் இராவணனிடம் இராமன் படைவலி கூறிச், சீதையை அளிப்பதே நல்லது எனக் கூறுகின்றான்

(கம்.யு.ப:8. பா.25)
(இரா.ச.ப:10.பா.1-2)
(இரா.ச.ப:11.பா.8 )

படைவலிமை கேட்ட இராவணன், சினங்கொண்டு, ஒற்றர்களை இகழ்ந்துரைத்தான் எனக் கூறுவான் கம்பன்
(கம்.யு.ப:8. பா.64)

10) சீராமகவி, சுகசாரணர்வழி பகைவர் வலிமைகேட்ட இராவணன் சீதையை அச்சுறுத்த, மாயத்தால் தயரதன் மகன் தலையையும் சிலையையும் காட்டி அச்சுறுத்தினான் எனவும், சரமை உண்மையை உணர்த்தினாள் என்றும் அமைப்பான். (இரா.ச.ப:12, பா.132)

கம்பன் இந்தச் செய்தியை இங்கே கூறவில்லை.

11) போர், முறையாகத் தொடங்கும் முன்னரே சுக்கிரீவன் இராவணனைக் கண்டதும் கோபமுற்று, அவன்மீது பாய்ந்து சென்று, மகுடங்களிலிருந்து மணிகளைப் பறித்துக்கொண்டு திரும்பினான் எனக் கம்பன் உரைப்பான்.

(கம்.யு.ப:11 பா.32,33).

சீராமகவி, சுக்கிரீவன் இராவணன் மேல் பாய்ந்து அவனைத்தாக்கி மணிமகுடத்தைப்பற்றி, இராமன் திருவடிகளில் வைத்ததாகக் கூறுவான்.

(இரா.ச.ப:12,பா.10,11).

அச்செயல் தவறு என்று கூறியதையும், சுக்கிரீவன் பொறுத்தருள வேண்டியதையும் இருகவிஞர்களும் கூறுவர். (கம்.யு.ப:11, பா.38)

(இரா.ச.ப:12,பா.12)

12) இராவணன், சுக்கிரீவனிடம் அரக்கன் ஒருவனைத் தூதாக, 'எட்டு நாட்களுள் மேற்கொள்ளும் போரில் தலை கொய்வதாகக்' கூறவே, அவன் பதிலுரைகேட்டு, இராவணன் வெகுண்டான் என்று சீராமகவி கூறுகிறான்

(இரா.ச.ப:13, பா.5,6)

கம்பன் இத்தகு ஒரு நிகழ்ச்சியைக் கூறவில்லை: வான்மீகத்திலுமில்லை.

13) கம்பன், சார்த்தூலன் என்னும் தூதன் இராவணனிடம் இலங்கையின் மேற்றிசை வாயிலில் அனுமனும், கீழ்த்திசைவாயிலில் அங்கதனும், வடதிசை வாயிலில் இராமனும் தம்பி இலக்குவனும் காத்துநிற்க, ஒவ்வொரு வாயிலிலும் பதினேழுவெள்ளம் வானரச்சேனைகள் சூழ்ந்து நிற்க, வானர மன்னன் சுக்கிரீவன்

இராமனைப் பிரியாது நிற்பதாகவும், வானர வீரர்களுக்கு ஊவாக நாற்றிசைகளிலும் சென்றுப் பொருட்களைத் திரட்ட இரண்டு வெள்ளம் சேனை ஈடுபட்டதாகவும், கூறுவதாகக் குறிப்பிடுவான்.

(கம்.யு.ப:12, பா.5-7).

சீராமகவி, படையின் தொகையை அளவிட்டுச் கூறாது, 'பெரும்படை' என்றே சுட்டுவான்

(இரா.ச.ப:14,பா.1-11)

14) மேலும், கம்பன், நிகும்பன் உரையாக இராவணனிடம் ஆயிரம் வெள்ளம் சேனை இருப்பதால், 'அஞ்சுவது அடாது' என மந்திர ஆலோசனையில் கூறுவதாக வெளிப்படுத்துவான் (கம்.யு.ப:12, பா.12). சீராமன்ல் இச்செய்தியில்லை.

15) கம்பன், முதல்நாள் போரில், இந்திரசித்து வந்து கலந்துகொண்டதாகக் கூறவில்லை. கும்பகருணனும் அதிகாயனும் போர்செய்து இறந்தபின், இந்திரசித்தின் போர்பற்றிக் கூறுவான்.

(கம்.யு.ப:18 . பா.3 )

சீராமகவி, முதல்நாள் போரிலேயே இராமன் இந்திரசித்தின் நாகபாசத்தால் கட்டுண்டதாகக் கூறுவான்.

(இரா.ச.ப.14. பா.6-11)

இராமன், இந்திரசித்தின் நாகபாசத்தால் கட்டுண்டதாகக் கம்பன் கூறாமையால், போர்க்களம் காணச் சீதையைப் புட்பகவிமானத்தில் இராவணன் அனுப்பிய செய்தியும், அதன்பின்னுள்ள திரிசடை சீதை செயல்களும் இடம்பெறவில்லை. சீராமக்கவி இச்செய்திகளைத் தருகிறான்.

(இரா.ச.ப:16, பா.1-11)

16) கம்பன், இராமன் வீடணனை அனுப்பிக் கும்பகருணன் இசைவானானால், அவனைத் தம்பக்கம் அழைத்துவரும்படிக் கூறியதையும், வீடணன் கும்பகருணனிடம் 'இராமனைச் சேர்தலேதக்கது' எனப் பல காரணங்களால் விளக்கிக் கூறியதும், கும்பகருணன், 'தான் இராவணனை இத்தகைய துன்பநிலையில் விடுத்து

வாரேன்' என்றும், அவன் பொருட்டுப் போர் செய்து செஞ்சோற்றுக்கடன் கழித்துச் சாதலே விருப்பம்' என்று கூறியதையும் நயமுற உணர்த்துவான்

(கம்.யு.ப:15. பா.139,153,155).

இராம சரிதத்தில் இத்தகைய படைப்பு ஒன்று இல்லை.

17) இராமன் அம்புமாரி சொரிந்து, அம்புகளாலாக்கிய மதிலால், கும்பகருணன் இலங்கையினுள் நுழையாத வண்ணம் தடுத்தான்; கும்பகருணன் சுக்கிரீவனைத் தன்னுடைய இறுக்கிய பிடியால் உணர்விழக்கச் செய்து, இலங்கைக்குக்கொண்டு செல்ல முயன்றான்; இராமனிடம் 'நீ என்னிடமிருந்து சுக்கிரீவனை மீட்டாயானால் சீதையையும் மீட்டவனையாவாய்' எனச் சூளுரைத்தான்-என்னும் நிகழ்ச்சிகளைக் கம்பன் சிறப்பாக அமைப்பான்

(கம்.யு.ப:15, பா.225-227,286)

சீராமகவி, இத்தகைய ஒரு சூளுரையைச் சிறப்பாகத் தரவில்லை. மாறாக, இராமசரிதக் கும்பகருணன், இராமனிடம் 'உன்னால் அழிவுற்ற கரனோ வாலியோ விராதனோ அல்ல' என்று கூறித்தன் வலிமையைக் கூறுவதாக அமைப்பான்.

(இரா.ச.ப:34, பா.7)

18) 'சுக்கிரீவனை எடுத்துச் செல்லும்போது இராமன் தன் அம்பைக் கும்பகருணன் நெற்றியிற் செலுத்த, அவனுக்கு மயக்கமுண்டாகவே, அவனுடைய குருதி நீர் பட்டமையால், சுக்கிரீவன் மயக்கம் தெளிந்து அவனது மூக்கையும் காதையும் கடித்து எடுத்துக்கொண்டு வானரப்படையுள்ள இடத்திற்கு மீண்டான்' - இவ்வாறு கம்பன் படைத்துக்காட்டுவான்.

(கம்.யு.ப:15.பா.288-289,290-291)

சீராமகவி, கும்பகருணன் சுக்கிரீவனைத் தாக்கிக்கொண்டு வெற்றியோடு வருவதுகண்டு அழகிய பெண்கள் கோட்டை மேலிருந்து சந்தனம், பன்னீர் போன்ற வற்றைத் தெளித்தும் பூக்களைத்தூவியும் வரவேற்றனர், இச்செயலால்

உணர்வுற்று மயக்கம் தெளிந்த சுக்கிரீவன், அசுரனின் மூக்கும் காதும் பறித்துக்கொண்டு ஆகாயத்தில் உயர்ந்தான் எனப் படைத்துக்காட்டுவான்

(இரா.ச.ப:34, பா.3,4,5)

19) கும்பகருணன், இறுவாயில், இராமனை நோக்கி, 'இராவணன் வீடணனைக் கொல்லவேண்டுமென்று கருவிக் கொண்டிருப்பதால் சமயம் வாய்ப்பின் அவன் கொல்லத்தயங்கான்; அவனால் வீடணனுக்கு ஒரு துன்பமும் நேராவண்ணம் காக்கவேண்டும்' என்று வேண்டினான். மேலும், இறுதியாகத், தன் மூக்கிழந்த முகத்தை யாருங்காணா வண்ணம் தன் தலையை அறுத்துக்கடலினுள்ளே வீழ்த்தல் வேண்டும் என வேண்டிக்கொண்டான். கம்பன், கும்பகருணன் இயல்பை இவ்வாறு படைக்கிறான்.

(கம்.யு.ப:15.பா.356,357,358).

சீராமகவி, இராமனிடம் கும்பகருணன் இத்தகைய ஒரு வேண்டுகோளை விடுத்ததாகக் கூறவில்லை.

20) கம்பன், தன் காவியத்தில்,இராவணனை பெருவேட்கையை நிறைவேற்றும் முகமாக,மாய சனகனைப்படைத்துக்கூற, சீராமகவி, வால்மீகியைத் தழுவி, இச்செய்தியைக் கூறவில்லை.

(கம்.யு.ப:16)

21) கும்பகருணன் வதைக்குப்பின்னர், இராவணன், மைந்தன் அதிகாயனை முதன்மையாக்கிப், போருக்குப் புறப்பட்டான் என்று கம்பன் கூறச் (கம்.யு.ப.17) சீராமகவி, 'இராவணன் மக்களான திரிசிரசு, அதிகாயன், தேவாந்தன், நராந்தகன் போன்றோர் முறையே போருக்குப் போயினர்' என்று கூறுவான். (இரா.ச.ப:40).

22) கம்பன், அதிகாயனால் தூதாக அனுப்பப்பட்ட மயிடன், இராமனை அடைந்தபொழுது,வானரவீரர் அவனைப்பற்றி வருத்த முயன்றனர் என்றும், அதுகண்ட

இராமபிரான் 'தாதனைப்பற்றலும் தன்புறத்தலும் தகாத செயல்' என விலக்கினான் என்றும், போர் நெறியை அமைத்துக் காட்டுவான் (கம்.யு.ப:17, பா.45-47).

சீராமகவி, இதனைக் கூறாது விடுத்தான்.

23) முற்காலத்தில் திருமாலுடன் பொருது இறந்த மது, கைடபர் என்னும் அவுணர் இருவருமே இப்பிறவியில் முறையே கும்பகருணனாகவும், அதிகாயனாகவும் பிறந்தனர் என்னும் செய்தியைக் கம்பன் கூறுவான் (கம்.யு.ப:17,பா.74-75).

சீராமகவி இவ்வரலாற்றுச் செய்தியைக் கூறவில்லை.

24) அதிகாயன் - இலக்குவன் போரின்போது, பிரம்மாவின் வரம், அத்திரம் பற்றி வாயுதேவன் கூறுவதாகக் கம்பன் அமைப்பன்; கவசம் பற்றிக் கூறாது விடுத்தான் (கம்.யு.ப:18, பா.204, 205).

அதிகாயனுக்குப் பிரம்மாவின் அருளால் கிடைத்த கவசத்தை உடைக்கப், பிரம்மாத்திரம் ஏவவேண்டுமென்று, இலக்குவனிடம் சமீரணதேவன் வருகைதந்து கூறுவதாகச் சீராமகவி அமைப்பான் (இரா.ச.ப:43, பா.8-9).

25) 'இந்திரசித்து போர்க்களத்துக்குப்புறப்பட இராவணனிடம் அனுமதி பெறுகிறான். அங்கு ஒரு வேள்வி இயற்றி பிரம்மாவின் அருள்பெற்று வானரப் படையுடன் பொருதுகிறான்' எனச் சீராமகவி கூற (இரா.ச.ப:46,பா.4), கம்பன் வேள்விபற்றி இங்கு எதுவும் கூறவில்லை.

26) கம்பன், இந்திரசித்தின் நாகக்கணையால் இலக்குவனும் மற்றனைோரும் கட்டுண்டனர் எனவும், இராமன் சந்தியாவந்தனத்திற்காக நீர்நிலைக்குச் சென்றிருந்ததாகவும் கூறுவான் (கம்.யு.ப:18, பா.189, 190).

சீராமகவி, நாகக்கணையால் இராமஇலக்குவர் இருவரும் கட்டுண்ட தாகக் கூறுகிறான் (இரா.ச.ப:47, பா.11).

27) இந்திரசித்தின் பிரம்மாத்திரத்தால் இராமஇலக்குவர் மூச்சற்று வீழ்ந்து கிடக்கும் நிலையில், சீதைகண்டு புலம்புவதாகக் கம்பன் (கம்.யு.ப:22,பா.10-11) கூற, சீராமகவி அதனைக்கூறாது, சீதையைப் போர்க்களத்தில் கொணர்ந்து, அனுமன் காணத்தன்புறுத்தியதாக அமைப்பான் (இரா.ச.ப:49, பா.5,6).

28) கம்பன், சாம்பவன், வாயிலாக, இமயமலைக்கு அப்பால் உள்ள ஏமகூடம், நிடதமலை, மேருமலை, நீலகிரி பின் மருத்துமலை இருப்பதாகவும் அவற்றின் இடையே உள்ள தூரத்தையும் கூறுவான் (கம்.யு.ப:23,பா.21-23).

சீராமகவி, கைலாய மலைக்கு அப்பால் இரு சிகரங்களுக்கிடையே மருந்துமலை இருப்பதாகவும், மூலிகைகளான சந்தானி, சமீகரணி, சஞ்சீவி விசல்யகரணி முதலிய அங்குள்ளன என்றும், சாம்பவான் கூறுவதாக விளக்குவான் (இரா.ச.ப:49. ப.4,5).

29) கம்பன் கூறும் களியாட்டுப் படல நிகழ்ச்சிகள் (கம்.யு.ப.24) சீராமனின் காவியத்தில் இடம்பெறவில்லை; வால்மீகத்திலுமில்லை.

30) மருத்துமலையைக் கொணர்ந்த அனுமன் முன், இந்திரசித்து மாயாசீதையின் கூந்தலை ஒரு கையில் பற்றிக்கொண்டு, மறுகையில் வாளை ஏந்திக்கொண்டு வந்து நின்று, சீதையைக் கொல்லப்போவதாகக் கூறுவதாகவும், அனுமன் அவனுக்குச்சில நீதிகளைக் கூறுவதாகவும் கம்பன் அமைத்துக்காட்டுவான் (கம்.யு.ப:25.பா.28-30

சீராமன், மாயாசீதையைப் போர்க்களத்தில் கொணர்ந்து, அனுமன் காணத் துன்புறுத்திவெட்டுவதாகக் கூறுவான் (இரா.ச.ப:59, பா.5-6).

31) இந்திரசித்து மாயாசீதையைக் கொன்றபின், புட்பகவிமானத்தில் அயோத்திக்குச் சென்று, அங்குள்ளோரை அழிப்பதாகச் சொல்லிப் புறப்பட்டுப், பின் நிகும்பலைக்குச் சென்றதாகக், கம்பன் கூறுவான் (கம்.யு.ப:25.பா:40,41)

சீதை வெட்டுண்டு வீழ்வது கண்டு, மாருதி இராமனிடம் கூறச்சென்றபோது, இந்திரசித்து நிகும்பலைக்குச் சென்றதாகச் சீராமன் கூறுவான் (இரா.ச.ப ப:60, பா.4-7).

32) வீடணன் வண்டின் உருவங்கொண்டு அசோகவனத்திற்குச் சென்று, சீதை உயிருடன் இருப்பதை அறிந்து வந்து, பின் இந்திரசித்தின் 'மாயாசீதை' மாயச் செயல் என்று சொல்லியதாகக் கம்பன் கூறுவான் (கம்.யு.ப:60,பா.88,89).

சீராமன் இத்தகைய ஒரு நிகழ்ச்சியைக் கூறவில்லை.

33) இனி இலங்கைப்போரில் பொரவரும் இந்திரசித்துடன் இராவணன் மட்டுமே எஞ்சியவன், என வீடணன் இராமனிடம் கூறுவதுடன், இதுவரை இறந்த அவுணர் பட்டியலையும் கூறுவான் சீராமகவி (இரா.ச.ப:68, பா.1-5).

கம்பனில் இச்செய்தி கூறப்படவில்லை.

34) இந்திரசித்துடன் போர்செய்து விழுப்புண்பட்ட இலக்குவன் உடலை இராமன் பலமுறை தழுவியதால் அப்புண்கள் மறைந்ததாகக் கம்பன் உயர்வாகக் கூறுவான் (கம்.யு.ப:47, பா.68,69).

இலக்குவன் உடம்பில் பட்ட விழுப்புண்களைக் கண்ட இராமன், மருத்துவம் வல்ல சுடேணனை விளித்து, அப்புண்களை ஆற்றுமாறு கூறியதாகவும், சுடேணன் அவ்வாறே ஒரு மருந்து கொணர்ந்து இலக்குவன் மூக்கில் முகரச்செய்தவுடன்

விரைவில் உன்னைச் சரணடைவர்" எனக்கூறிப்பின், 'நல்லவர் தீது செய்யார்; இராமரோடு போர் கூடாது; சீதையைத் தீங்குவரும் முன்பே கொடுத்துவிடுக', என ஒரே சமயத்தில் முன்பின் முரணாகப் பேசுகிறான். கம்பன், மந்திராலோசனையில் இதனைக் கூறுவான். 3) கம்பனில், இராவணன், கும்பகருணனை வெகுண்டு, மீண்டும் இருவரைக்கும்பிட்டுக் குரங்கையும் தொழுது வாழ நான் இல்லை என்று கூறச், சீராமனில் இராவணன், 'தங்கை சூர்ப்பனகையின் மூக்கும் மார்பும் அறுத்த பகையின் வளர்ச்சியே இப்போர்' எனக் கும்பகருணனுக்குக் கூறுவான். 4) இலக்குவன் வில்லாண்மையைக் கும்பகருணன் வியக்கும் திறன் கம்பனில் சிறப்பாக அமைய, சீராமனில் அத்திறன் இடம்பெறவில்லை. 5) கம்பனில் நீலன், அங்கதன், சுக்கிரீவன், ஆகியோர் முதலில் கும்பகருணனோடு போரைத் துவக்குவர். சீராமனில் நீலனுக்குப்பதிலாக மைந்தன், துவிதன் இடம்பெறுகின்றனர். 6) கும்பகருணன் வதையில், மூக்கில்லா முகத்தனாகிய அவன் தலையை அம்பினால் நீக்கிக் கருங்கடலினுள் போக்குமாறு இராமனிடம் வேண்டுவதாகவுள்ள கம்பன் படைப்புச் சீராமனில் இடம்பெறவில்லை. 7) கும்பகருணன் வதையறிந்த இராவணன் அமைச்சர்களைக் கடிவான் எனக்கம்பன் கூற, சீராமன், இராவணன் ஆணைப்படி உடனே, அதிகாயன் தேவாந்தகன் முதலியோரைப் போர்செய்ய அனுப்புவதாகக் கூறுவான்.

### 4.17.7 அதிகாயன்:

1) அதிகாயனது போர்த்திறனை கம்பரும் சீராமகவியும் ஒன்று போலப் படைப்பர். முற்பிறவி, தேவரை வென்றமை, பிரம்மனிடம் அழியாத கவசம் பெற்றமை, மாயப்போர் செய்யாமை, முதலியவற்றை ஒத்த கருத்துடன் படைப்பாராயினும், பூர்வ வரலாறு கம்பரால் பின்னர் கூறப்படுகிறது.
2) அதிகாயன் போரின்போது, மைந்தன், துவிதன், குமுதன், நீலன், சரபன், முதலியோர் அவனுடன் போர் செய்வதாகச் சீராமகவி கூறுவான். கம்பன், இலக்குவன், தாருகன், காலன், குலிசன், காலசங்கன், மாலி, மருத்தன் முதலியோரிடம் போர் செய்வதாகக் கூறுவான். 3) அனுமன் தேவாந்தகன்,

திரிசிரன், நிகும்பன் ஆகியோரை இப்போர் வேளையில் அழித்ததாகக் கம்பன் கூறுவான். சீராமன் இவர்கள் அழிவுக்கு வேறொரு போர்க்களம் அமைப்பான். 4) இலக்குவன் – அதிகாயன் கடும்போரில் இலக்குவன் திறமையை அதிகாயன் மெச்சுகிறான். அதிகாயன் 27 அம்புகளைவிட இலக்குவன் ஐந்து கணைகளால் அழிப்பான். இவ்வாறே 15–க்கு ஏழும், 15–க்கு இரண்டுமாக விடுத்து அசுரப் படையை அழிப்பான். இவை, சீராமன் படைப்பாகும். 5) அங்கதன் தோள்மேல் இலக்குவன் இருந்துபோர் செய்யும் செய்தியைக் கம்பன் கூறுவான். சீராமனில் இல்லை. 6) காற்றரசன், நான்முகன் படையால் அதிகாயன் இறப்பான் எனக்கூற, அவ்வம்பால் அதிகாயன் கவசத்தை உடைத்துக் கொல்வதாகக் கம்பன் கூற, வாயுபகவான் அதிகாயன் பிறப்பின் இரகசியத்தைக் கூறி, அவ்வாறு செய்யச் சொன்னான் எனச் சீராமன் கூறுவான். 7) இராமன் திருவடிகளை வணங்கி, இலக்குவன் வெற்றிதரும் பிரம்மாத்திரத்தைத் தொடுத்தான். அது அவன் கரங்களையும் கால்களையும் அறுத்த செய்திக் கம்பனில் இடம்பெறவில்லை. 8) நராந்தகன் – அங்கதன் போர், போர் மத்தன் – நீலன் போர், வயமத்தன் – இடபன் போர், சுக்கிரீவன் – கும்பன்போர், நிகும்பன் – அனுமன் போர் கம்பனில் இடம்பெற, சீராமனில் தனித்தனி களமாக அமைகிறது.

4.17.8 <u>இந்திரசித்து:</u>

முதல் போரில் போர்க்களத்தில் இந்திரசித்து தோன்ற, அங்கதன் எதிர்ப்பதாகச் சீராமன் கூறுவான். கம்பனில் இந்திரசித்து இடம்பெறவில்லை. 2) இரவுப்போரில் இந்திரசித்தின் தேரை அங்கதன் அழிக்கிறான். மறைந்து நின்று நாகாத்திரம் எய்ய அது இராம–இலக்குவரைப் பிணிக்கிறது. இது சீராமன் தரும் செய்தி. கம்பன், அதனைப் பின்னர் தனியே கூறுவான். 3) கம்பன், தன்நூலில் இராவணனது பெருவேட்கையை நிறைவேற்ற மாயா சனகனைப் படைத்துள்ளார். சீராமனில் இது இங்கு இடம்பெறவில்லை.

4) பெரும்படை சூழப் போர்க்களம் சென்ற இந்திரசித்து, அங்கு ஒரு யாகம் செய்வான். அதனால் தேர் அழியாதிருக்கும் வரமும் பிரம்மாஸ்திரமும் பெறுவதாகச் சீராமன் கூறக்கம்பன் அதனைக் கூறாது விடுத்தான்.

5) இந்திரசித்து - இலக்குவன் போரில், இலக்குவன் தேரோட்டியின் தலையைப் பிளந்ததாகக் கம்பன் படைக்க, வீடணன் அதனைச் செய்ததாகச் சீராமன் கூறுவான். 6) மகரக்கண்ணன் இறந்த செய்தியை இராவணன் அறிந்து, ஆசிபெற்று இந்திரசித்துப் போருக்கு வருகிறான்: அனுமன் அவனை எதிர்க்கிறான், எனச்சீராமன் கூற, இலக்குவன் எதிர்ப்பதாகக் கம்பர் கூறுவார். 7) பிரம்மாத்திர வீழ்ச்சியிலும் இலக்குவனும் வானர வீரர்களும் வீழ்ந்தனர் என்றும், இராமன்படைக்கலப் பூசனைக்குச் சென்றதாகவும் கம்பன் படைப்பான். சீராமன், இருவரும் வீழ்ந்த தாகக்கூறுவான். 8) வீரமிக்க இராமன் இறந்ததாகப் புலம்பும் சீதைக்குத் திரிசடைக் குறிகளால், இராமன் இறந்திலன் என உணர்த்துவதாகக் கம்பன் கூறுவான். சீராமன், இராமன் வரலாறு கூறி உண்மையைத் திரிசடைக் கூறுவதாகக் கூறுவான். 9) கம்பன், மருந்து மலையிலிருக்கும் இடம் ஏமகூடம், நிடதம், மேரு, நீலகிரி இவற்றிற்கப்பால் என்று கூறச், சீராமன் மருந்துமலை இடபகிரியும், கயிலை என்ற இரு சிகரங்களுக்கிடையே எனக்கூறுவான். 10) கம்பன், இலக்குவனால் கொய்து வீழ்த்தப்பட்ட இந்திரசித்தின் தலையை அங்கதன் கையில் எடுத்துக்கொண்டு முன்செல்ல, அனுமன் தோளின் மேல் ஏறிக்கொண்டு இலக்குவன் சென்றான் எனப் படைப்பான். சீராமன் இந்நிகழ்ச்சியைக் கூறாது விடுத்தான். 11) இந்திரசித்து இறந்ததை ஒற்றர்கள் நேரில் அறிந்து இராவணனுக்குச் சொன்னதாகக் கம்பர் கூற, சீராமன் அமைச்சர்களே அறிந்து வந்து கூறியதாகச் சொல்லுவான்.

12) இந்திரசித்தின் தாய் மண்டோதரி அழுது புலம்பியதைக் கம்பர் அவலச்சுவையுடன் படைத்துக்காட்ட, சீராமன், மூலபலவதைக்குப்பின் நிகழ்ந்ததாகக் கூறுவான்.

13) இராவணனுடைய பத்துத் தலைகளிலும் உள்ள பத்து வாய்களும் இந்திரசித்தின் வீரப்பெருமையைச் சொல்லிச் சொல்லிப் புலம்பியதாகக் கம்பர் சிறப்பாக அமைக்க, சீராமன், அரற்றியதாக மட்டும் கூறுவான்.

4.17.9 இதுவரைக் கூறியவற்றால், கம்பருடைய பாத்திரங்கள் முரணில்லாமல் கதை முழுவதும் ஒருமைப்பண்புடையோராகப் படைக்கப்படுகின்றன. போர்த்தலைமை ஏற்கும் பாத்திரங்கள், தத்தம் இயல்புக்கேற்பச் செயல்படுகின்றன. ஒவ்வொரு பாத்திரமும் அதன் முழுமைப் பண்புக்கு உறுதுணையாகச் செயல்படுகின்றது. சீராமன் படைக்கும் பாத்திரங்களும் உயிர்த்துடிப்பும் தனித்துவமும் உடையதாக விளங்கும் முறையில் அமைந்துள்ளன. சீராமன் பெரிதும் வான்மீகியைப் பின்பற்றக், கம்பன் தனித்து நின்று தன் புனைவால் பாத்திரங்களை மேம்படுத்துவான்.

<u>அட்டவணைப்படுத்தல்</u>

ஒப்பீட்டு அட்டவணை – 4
(போரில் பங்குபெற்றோர்)

| கம்பர் (சிறப்பு) | கம்பர், சீராமகவி பொது | சீராமகவி (சிறப்பு) |
|---|---|---|
| I. முதல்போர்: | | |
| 1) அரண் முற்றுகை | வானரர் × அரக்கர் | |
| 2) வடக்குவாயில் (முதல்நிலை)<br>சுக்கிரீவன் × வச்சிரமுட்டி | | 2) அங்கதன் × இந்திரசித்து |
| 3) கிழக்குவாயில்<br>தும்பாளு × இடும்பன்<br>பிரகத்தன் × நீலன் | – | 3) அனுமன் × சம்புமாலி<br>சுக்கிரீவன் × அப்பிரயத்தன்<br>துவிதன் × அசனிபிரபன் |
| 4) தெற்குவாயில்<br>சுபாரிசன் × அங்கதன்<br>துன்முகன் × அனுமன் | – | 4) நீலன் × நிகும்பன்<br>மைந்தன் × வச்சிரமுட்டி<br>கஜன் × ஸ்ரீ |
| 5) வடக்குவாயில் (இரண்டாம் நிலை)<br>இராவணன் × சுக்கிரீவன்<br>இராவணன் × அனுமன்<br>இராவணன் × இலக்குவன்<br>இராவணன் × அனுமன்<br>இராவணன் × சுக்கிரீவன்<br>இராவணன் × இலக்குவன்<br>இராமன் × இராவணன்<br>பி.கு. அரக்கர் படை அழிய இராவணன் தோற்ற நிலையில் இராமன், 'இன்றுபோய் நாளைவா' எனவருளல் | – | 5) தம்பாதி × பிரசங்கன்<br>வீடணன் × மித்ருக்கன்<br>இலக்குவன் × விருபாக்கன்<br>பனசன் × வித்யுச்சிகவன்<br>நளன் × பிரதாபன்<br>இந்திரசித்தன் × அங்கதன்<br>இந்திரசித்தன் × இராமன்<br>(மறைந்து நின்றல்) இலக்குவன்<br>பி.கு. இராம இலக்குவர் நாகபாசத்தால் கட்டுண்டல். |

| கம்பன் சிறப்பு | கம்பன், சீராமகவி பொது | சீராமகவி சிறப்பு |
|---|---|---|
| 6. மேற்குவாயில்: | – | 6) தூம்ராக்கன் × அனுமன் |
| (இரண்டாம் நிலை) | | விச்சிரதம்ட்டிரன் × அங்கதன் |
| துன்முகன் × அனுமன் | | |
| 7. இலங்கைவாயில் போர்: | | 7) நராந்தகன் × துவிதன் |
| கும்பன் × நீலன் | | துர்முகன் × சமுன்னதன் |
| கும்பன் × இலக்குவன் | | மகாநாதன் × சாம்பவான் |
| கும்பன் × சுக்கிரீவன் | | கும்பன் × மைந்தன் |
| கும்பன் × இராமன் | | பிரகத்தன் × நீலன் |
| தாருகன் × இலக்குவன் | | இராவணன் × சுக்கிரீவன் |
| காலன் × இலக்குவன் | | இராவணன் × இலக்குவன் |
| குலிசன் × இலக்குவன் | | இராவணன் × நீலன் |
| காலசங்கன் × இலக்குவன் | | இராவணன் × அனுமன் |
| மாலி × இலக்குவன் | | இராவணன் × இலக்குவன் |
| மருத்தன் × இலக்குவன் | | இராவணன் × இராமன் |
| தேவாந்தகன் × அனுமன் | | |
| நராந்தகன் × அங்கதன் | போரில் தோற்று ஆயுதமிழந்து | (பி.கு.: இராவணன் மணிமுடிஇழக்க |
| போர்மத்தன் × நீலன் | நின்ற இராவணனை, இராமன் | 'இன்று போய் நாளைவா' என |
| வயமத்தன் × இடபன் | நாளை வா என அருளல் | இராமன் அருளல்) |
| கும்பன் × சுக்கிரீவன் | | |
| நிகும்பன் × அங்கதன் | | |
| II. கும்பகருணன் வதை: | அரக்கர் சேனை × வானரர்சேனை | கும்பகருணன் × துவிரன் |
| கும்பகருணன் × சுக்கிரீவன் | கும்பகருணன் × நீலன் | |
| கும்பகருணன் × வானரர் | கும்பகருணன் × அங்கதன் | |
| கும்பகருணன் × இராமன் | கும்பகருணன் × இலக்குவன் | |
| | கும்பகருணன் × சுக்கிரீவன் | |
| | கும்பகருணன் × இராமன் | |

| கம்பன் (சிறப்பு) | கம்பன், சீராமகவி பொது | சீராமகவி சிறப்பு |
|---|---|---|
| III **அதிகாயன் முதலியோர் வதை:** | | |
| அரக்கர் சேனை × வானரர்சேனை | வானரர் × அரக்கர் | பகசன் × உன்மத்தன்<br>மத்தன் × துவிதன்<br>நராந்தகன் × சுக்கிரீவன்<br>தேவாந்தகன் × நீலன்<br>திரிசிரன் × வானரர்<br>வானரர் × அதிகாயன் |
| இலக்குவன் × அதிகாயன் | | |
| இலக்குவன் × தாருகன் | | |
| இலக்குவன் × { காலன்<br>குலிசன்<br>காலசங்கன்<br>மாலி<br>மருத்தம் } | | |
| இலக்குவன் × அதிகாயன் | இலக்குவன் × அதிகாயன் | |
| அநுமன் × அதிகாயன் | | |
| போர்மத்தன் × நீலன் | | |
| வயமத்தன் × இடபன் | | |
| சுக்கிரீவன் × கும்பன் | | |
| அநுமன் × நிகும்பன் | | |
| IV **இந்திரசித்து போர்:** | | |
| 1) நாகபாசம்: | | |
| வானரர் × அசுரர் | | பு.கு: நாகபாச நிகழ்ச்சி இராம சரிதத்தில் முதல் போரிலேயே இடம்பெறுகிறது. |
| { நீலன்<br>மயிந்தன்<br>துமிந்தன்<br>கயவன்<br>கேசரி } × இந்திரசித்து | -- | |
| இந்திரசித்து × சுக்கிரீவன் | | |
| " × அநுமன் | | |
| " × நீலன் | | |
| " × அங்கதன் | | |
| இலக்குவன் × இந்திரசித்து | | |
| இந்திரசித்து × அநுமன் | | |
| இந்திரசித்து × இலக்குவன் | | |

| கம்பன் சிறப்பு | கம்பன், சீராமகவி பொது | சீராமகவி சிறப்பு |
|---|---|---|
| 2) படைத்தலைவர் வகை. | | 2) கும்பனன் × அங்கதன் |
| வானரர் × அரக்கர் | | சோணிதாக்கன் × அங்கதன் |
| மாபெரும்பக்கன் × அங்கதன் | | பிரசங்கன் × அங்கதன் |
| மாலி × நீலன் | | யூபாக்கன் × அங்கதன் |
| பிசாசன் × பனகன் | -- | சோணிதாச்சன் × மைந்தன் |
| சூரிய சத்ரு × சுக்கிரீவன் | | சோணிதாக்கன் × துவிதன் |
| வேள்விப்பகைவன் × இலக்குவன் | | கும்பன் × அங்கதன் |
| வச்சிரதம்டிரன் × இடபன் | | கும்பன் × சுக்கிரீவன் |
| | | நிகும்பன் × அனுமன் |
| 3) மகரக்கண்ணன் வதை: | | 3) மகராக்கன் × இராமன் |
| அரக்கர் × வானரர் | | |
| மகரக்கண்ணன் × இராமன் | | |
| குருதிக்கண்ணன் × நளன் | அசுரர்படை × வானரர்படை | |
| சிங்கன் × பனசன் | | |
| 4) பிரம்மாத்திரம்: | | |
| இராமன் × அசுரர்சேனை | | இந்திரசித்து × துவிதன் |
| இலக்குவன் × " | | (மாயையா க நளன், பனசன் |
| இலக்குவன் × இந்திரசித்து | | அம்புஎய்தல் விவசன் |
| இந்திரசித்து × மகோதரன் | | நீலன் |
| | | அங்கதன் |
| | | ரிஷபன் |
| | | குமுதன் |

| கம்பன் சிறப்பு | கம்பன், சீராமகவி-பொது | சீராமகவி சிறப்பு |
| --- | --- | --- |
| இந்திரசித்து × அனுமன்<br>அகம்பன் × அனுமன்<br>மகோதரன் × இலக்குவன்<br>இந்திரசித்து × இலக்குவன் | வானரர் × அரக்கர்<br><br>இந்திரசித்து × இலக்குவன் | இந்திரசித்து × சரபன், கசமுகன், சாம்பவான், பனாதனன், சுக்கிரீவன், தாயிரன், கேசரி, அனுமன், அங்கதன், கோமுகன், சதபலி, குமுதன், தம்பன், வித்யுத்தமிட்டிரன், சமுகன், துர்முகன், துர்முகன், பாவகாட்சன்<br>பு.கு. அம்புமழையால் வீழ்ந்தோர்<br><br>பு.கு. மாயையாயல் விரமாத்திரத்தால் இருவர் வீழல் — இராமர், இலக்குவர் |
| 5) நிகும்பலை வேள்வி | இந்திரசித்து × அனுமன்<br>இந்திரசித்து × இலக்குவன் | நீலன், மாருதி, அங்கதன், சாம்பவான் × இந்திரசித்து |

| கம்பன் சிறப்பு | கம்பன், சீராமகவி – பொது | சீராமகவி சிறப்பு |
|---|---|---|
| 6) இந்திரசித்து வதை: | இந்திரசித்து × இலக்குவன்<br>இந்திரசித்து × அனுமன் | இந்திரசித்து × வீடணன்<br>" × நளன்<br>" × பனசன்<br>" × நீலன்<br>" × துவிதன் |
| 7) மூலபலவதை:<br>1) நால்வகைப்படை × வானரப்படை<br>இராமன் × மூலபலச்சேனை<br>இராமன் × வன்னி<br>2) வேல் ஏற்றமை:<br>இராவணன் × இலக்குவன்<br>" × வீடணன்<br>" × இலக்குவன் | | இராவணன் × வானரர்படை<br>விருபாக்கன் × சுக்கிரீவன்<br>மகாபார்சுவன் × சுக்கிரீவன்<br>மகோதரன் × சுக்கிரீவன் |
| இராவணன் வதை<br>மகோதரன் × இராமன் | இராமன் × இராவணன் | இலக்குவன் × இராவணன்<br><br>பி.கு: இலக்குவன் வேலேற்ற செய்தி பின்னர் தரப்படுகிறது |

## அடிக்குறிப்புக்கள்

1. 'தமிழர் பண்பாடு' - எஸ்.வையாபுரிப்பிள்ளை, தமிழ்ப்புத்தகாலயம், மயிலாப்பூர், சென்னை, ப.119. முதற்பதிப்பு, 1949.

2. "A good commander is one whose men will follow him willingly when even he want them to go, will gladly face death to bring victory nearer, Commander, must know (a) how to command (b) how to lead (c) how to administer and (d) how to train"

   -Brigadier Rajendra Singh op.cit., p.19

3. "In war ; Resolution
   In defeat ; Defiance
   In victory : Magnanimity
   In peace : Good will
   Peace is the Last prize.
   I seek to win" - Field Marshal
   Montgomery. Op.cit., p.544.

4. இராமன் வஞ்சினம்

உள்ளில் என் திசயிலும் புக்கு
    ஒளிக்கிலும் உவரி தன்னில்
வெள்ளமாம் படத்தில் மூடி
    வெளிப்படா திரிகிலும் போய்
உள்ள மா முனிவர்க்கு மூ
    உலகுக்கும் இடர் கொடுப்பான்
உள்ளரின் வாணாள் இப்போள்
    ஒடுக்கமது ஆகும் என்றான் (27:1)

5. இலக்குவன் வீரவுரை

செப்பினான் இளவேந்தன் இப்படி
    செப்பு வில்லனல் லோர் எல்லாம்
சொல்ப் பெறாதவர்கட்கு காணிது
    சோபியாது கேவலம்
'வில்ப் பிடித்து சரம் பொழிந்து இகல்
    மிக்கவர்கீகும் நினக்கு என்னோடு
இப்பறந்தது ஒழிந்தார் ஆயுதம
    ஏந்தி உள்ளடல் இல்லயோ' (26:4)

6. அனுமன் இராவணன் அடிதாங்கல்

பெரிப்பம் உள்ளது நீ என்றும்
    பின்பு போர் அரக்கன் சொல்ல
ஒரிக்கல் என்அடி ஏற்றும் நீ
    உயிர் பிரிந்தில்ல என்னால்
கருத்தலே சால ஞான் என்
    கையூர்க்கும் நன்று நன்று என்று
உரத்த மாருதி தன் நெஞ்சில்
    உடன் அடுத்து அவன் அடித்தான்    (25:10)

7. அனுமன் சபித்தல்:

'குயில்மொழி யாரெய் என்றும் ஒருத்தர்
    கொன்றது இல் ஒன்று கொண்டும்
கொடும மிருத்து எழும் நரகத்திலே
    இடர்நீள்வர் எல்லாம்
நியதம் அது ஒன்றினால் இயலும்
    நலம் பல பேசவேண்டா
நிசிசுரர்தன் குடிக்கறயே
    யிருட்டு நின்ஞள்ளிவிதே    (59:9-4-8)

8. வீடணன் இராவணனை அறிவுரைசெய்தல்

அயியிரண்டு சிரங்கள் தரம் சேர்ந்
    அம்பு அநேகம் விரங்கள் விளங்க
அயியிரண்டு விலாவிலும் நீளக்
    காணை ரஞ்சுமுடன் பதினஞ்சும்
செய்ய கூறயும் மாலயச் சாலும்
    சீர்த்த முத்துமடத் திரருளும் காரி
மெய்யுள்ள நிசாசரர் கோமான்
    வெற்றி கொள்வரின்று அவன் வீரா!    (24:9)

9. வீடணன் அறிவுரை:

அதில் அதிகம் சொல்லாம் இன்னும் ஒன்று
    அடுத்தவர் கேள்க்கும் நல்லோர்
அறிவில்ல யாவது ஒன்றிலும் நல்லர் ஆவிது
    சாலே மற்றோர்க்கு
அதிகம் விவேகியாயுள்ள வன்று வைரிகளோடு அடுப்பான்
    அருகு ஒருபோது உற்றவரோடு ஒரிக்கிலும்
ஒதம் இங்ஙனெ இராவணி சொன்னபோது மறித்து உரத்தான்
    எதிரிடுவோர் குலோந்தகனாம் விபீஷணன் என்றும் இங்கு
சதிமதி கெட்டோரிக்க மல்லொட்டும் உத்தமர்கள்க்கும் நத்தம்
    சரகுல சாதனாயினவன் இளக்கருதோ இதெல்லாம்
        (63:10)

10. இராவணன் அவலம்:

எனக்கு நீ சடங்கினாலே
   இயற்றும் ஒண் கருமம் எல்லாம்
நினக்கு ஞான் செய்யுமாறு
   நிறுத்தி வைத்து உயிரோடு என்னை
களத்து எழும் வென்றி நல்கிக்
   கருதலர்க்கு இளமையும் வாழ்ந்து
இளிப்பமாய் இந்தனும் விட்டு
   எங்குபோய் மறந்தோ வாலா (73:10)

11. கும்பகருணன் வீரவுரை:

'உள்ள தோத்திரம் உரத்து இரிப்பதருது
      ஒன்றுகேள் இன்னும் என்னால் மன்னா
புள்ளிமான் கன்னி நிமித்தமாய் இதொரு
      போர் துடங்கினது மூலமாய்
உள்ளது வானர குலத்தேயும் பொருது
      ஒடுக்கி ஞான் அரசர் சோரியாய்
வெள்ளவும் கரனுமாய் நுகர்ந்து
      விளையாடியாவுது இனிமற்று எல்லாம்' (30:10)

12. அதிகாயன் வீரவுரை

'என்னால் நினக்கு எனுது காலன் நகர்புவான்
      இப்போது அடுத்து அடல் கிடைக்கில் அது வேண்டா
நின்னொடு வென்று கருமம் சுருங்குங் நன்றாய்
      நின் வில்லும் வச்சவிலங்குங் கடந்து போ நீ
மன்னோல் குலத்தினு பிழய்க்குமதும் என்றாய
      வந்தாலும் வன்றது பின் வாங்குருது என் மேடம்
தன்னே நினக்கு நினவாகில் எதிர்இதோவா
      தந்தோழம் ஏந்தி அதிகாயன் இது சொன்னான்' (42:6)

13. இந்திரசித்தன் வீரவுரை

இன்று 'ஒரிக்கல் இராகவன் மார் மேல்
      எங்கும் அம்பிட கூட நடத்திக்
கொன்று ஒடுக்கி அடக்கும் முடித்தே
      கூடவே அரிவீரரெ எல்லாம்
வென்றி வண்ணம் நறுக்க அடலாரால்
      மேலுள்ள விரோதம் ஒழிந்தே
வன்றிருண்டு இன் என்றும் அரக்கன்
      மைந்தன் இந்திரசித்து மொழிந்தான் (46:2)

## 14. மகனை இழந்த இராவணன் நிலை

தனிமரம் மூலம் அற்று
    தரணியில் வீழ்ந்த போலெ
கனம் இழிந்து அவனி மீது
    கவிழ்ந்த வீழ்ந்த வணர்ந்து
மனுகுல வீரன் அப்பால்
    மறலிதன் புரம் புகுந்த
தனயன் தன் சரிதம் பேசச்
    சமந்தனைன் அரக்கர்கோமான் (73:3).

## இயல் ஐந்து

## போர் நெறிகளும் படைக்கலங்களும்

## இயல் ஐந்து

## போர்நெறிகளும் படைக்கலங்களும்

### 5.0 முகவுரை

பண்டைக்காலம் முதல் இக்காலம் வரை நாட்டில் அறம்காக்கவும், மறம் நீக்கவும் போர்கள் நடைபெறுகின்றன. 'பொரு' என்னும் சொல்லடியாகப் பிறந்தன பொருதல், போர் என்பன. பொரு, பொருதல் எனில் 'போர், சூதாடுதல், மாறுபடுதல், ஒப்பாதல், பொருந்துதல் எனும் பொருளது'[1] எனச் செந்தமிழ் அகராதி செப்புகிறது. பழந்தமிழ் இலக்கியங்கள், 'போர்' என்னும் சொல்லைப் பல்வேறு நிலையில் கூறுகின்றன. 'இகல், உறழ்வு, உடலுதல், உடன்றல், முரண், சினம், தெவ்வு, திறல், மறல், மறம்'[2] போன்ற சொற்கள் போரைக்குறிக்கும். பிங்கல நிகண்டு, போரை, 'யுத்தம், தும்பை, சமரம், செரு, இகல், எதிர், ஞாட்பு, பூசல், அடல், அமர், மலைதல்'[3] போன்ற பதினொறு சொற்களால் உணர்த்துகின்றது.

5.0.1 எல்லாப் போர்களுக்கும் அடிப்படைக்காரணங்கள் பற்றி அறிஞர் பல வகையாகப் பகுத்துக்காட்டுவர். தமிழறிஞர் தேவநேயப் பாவாணர், "அரசர் போர், ஆசை, பாதுகாப்பு, பகை, தண்டனை, மறம், அருள் என்னும் அறுவகைக் காரணத்தாற் பிறக்கும், மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை, புகழாசை, விண்ணாசை என்ற ஐவகை ஆசைகள், தற்காப்பு, நாட்டுக்காப்பு, மதக்காப்பு எனும் மூவகைப் பாதுகாப்பு, பழிதீர்ப்பு, பழம்பகைமை, பொறாமை என்னும் மூவகை இகழ்ச்சி, திறையிறாமை, படையெடுப்பு ஆகிய மூன்று தண்டனை, கடுமறம், தன்குடிபிறர்குடிமேல் கொண்ட அருள் ஆகிய அறுவகைக்காரணமாகப் போர்கள் தோன்றலாம்"[4] என்பார். இக்காலப்போரியல் வரலாற்று அறிஞர்கள் எல்லாப் போர்களுக்கும் அடிப்படைக் காரணங்கள் நான்கென

வகைப்படுத்துவர். அவை (1) அரசியல் காரணங்கள் (2) உணர்ச்சிக் காரணங்கள் (3) சமூகப் பொருளாதாரக் காரணங்கள் (4) கொள்கைக் கோட்பாட்டுக் காரணங்கள்[5] - என்பன.

சங்ககால அரசர்கள் மேற்கொண்ட போர்கள் பெரும்பாலும் மானம், பெருமை, மறப்புகழ் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டெழுந்த, கொள்கைக் கோட்பாட்டின் காரணமாக நடந்தன எனலாம். சேர, சோழ, பாண்டியர்கள் தனியாகவோ குழுக்களாகவோ போர்களை மேற்கொண்டனர். பண்டைத்தமிழ் வேந்தர்கள் போர்க் கொள்கைக் கோட்பாட்டை உடையவர்கள் என்பதை 'மறம் வீங்கு பல்புகழ்', 'மறப்புகழ்' 'அடுதிறல் உயர்புகழ்', 'அடுபுகழ்', 'வென்றிப்பல்புகழ்' எனக்குறிக்கும் தொடர்களால் அறியலாம். ஆரியர்-தமிழர் போர்களை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். இராமாயண பாரதப்போர்கள் சமுதாயப் பொருளாதாரக் காரணங்களால் தோன்றியன எனக்கூறலாம்.

5.2.0 போர்த்தொழிலில் பெரும்பங்கு வகிப்பன போர்ப்படைகளே. இப்படை 'அடுபடை' எனப்பட்டது. கடமை, ஒழுங்கு, கட்டுப்பாடு, உயர்நெறி, துணை முதலியவற்றால் நற்பணியாற்றிச்சிறப்பது இதுவே. போரியல் கொள்கைகளை வகுக்கும் அமைச்சரவைப் பாதுகாப்புக்குழு வொன்று அமைந்தது. பண்டை இலக்கியங்கள், ஐம்பெருங்குழு, எண்பேராயம் என இதனைப்பகுத்துக்கூறும்.

<u>படை:</u>

அரசர்க்குரிய அங்கங்களுள் தலைமையானது படையே. திருவள்ளுவர், படையை முதலாகக்கொண்டு பேசுவார்.

"படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு"[6] - குறள்

'அரசர்க்குப் பீடு செறு செல்வம் படை'[7]

—பதிற்றுப்பத்து

எனப் பதிற்றுப்பத்து குறிக்கிறது. இவற்றால் படையின் சிறப்பு விளங்கும். 'படை' என்பது பகைவர்களைப் படுப்பது; 'படு' என்னும் சொல்லடியாகப் பிறந்தது[8]. எனவே, 'போரில் விளங்கித்தோன்றி, அல்லன அழித்து நல்லன படை' எனக் கொள்ளலாம். படைகள் நல்லறம் நிறுத்தி அல்லறம் நீக்க வழிகோலின. இப்படையைப் பண்டையோர், 'மூலப்படை, கூலிப்படை, துணைப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, பகைப்படை, என அறு வகையாகப் பகுப்பர்'[9]. வழிவழி வந்து நிலையாக இருக்கும் படை 'மூலப்படை' எனப்பட்டது. எஞ்சிய படைகள் அமைப்பற்று நெருக்கடி காலத்தில் உதவிவருவன. இவற்றைக்'காவல் படை' எனத் தொகுத்துக்கூறலாம்.

5.0.3 போர்ச் செயல்களில் தலைமையேற்போர், அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் இந்நான்கு பண்புகளும் நிறைந்தவராக இருப்பர். படையின் திறமை, அப்படைத்தலைவரின் அறிவாற்றல், மதிநுட்பம், அரும்பண்புகள், நற்றகுதி, குழுஉணர்வு ஆகியவற்றைப் பொறுத்தே அமையும். சுருங்கச் சொன்னால், படைத்தலைவர்கள், எண்ணம், சொல், செயல்களில் சிறந்து விளங்க வேண்டும்.

5.0.4 "போர் வீரர்கள், போர்ச் செயல்களில் பங்குபெற்றுப் பணிபல ஆற்றுபவர்கள். அவர்கள் ஆற்றும் தொழிலின் பான்மையால், சான்றோர், மறவர், மழவர், மள்ளர், மைந்தர், வயவர், பொருநர், இயவர், கணியர், குறவர் போன்ற பகைவீரர்கள் பண்டைநாட் போரில் பங்குபெற்றனர். சான்றோர்கள் அறம் போற்றுபவர்கள்; மறவர், மழவர், மள்ளர் மைந்தர்,

வயவர், பொருநர், ஆகியோர் பொரு போர் வீரர்கள் ஆவர். இயவர், இசைக்கருவி இயக்கினர். களியர், குறவர் – எல்போர் போர் முன்னிலைச் செயல்களில் ஈடுபட்டிருப்பர்"[10] என எடுத்துரைப்பார் டாக்டர் தங்கக்கந்தசாமி.

5.0.6 தேர்கள் பகைவர்களின் பல்வேறு அரண்களை அழிக்கவும் முற்றுகையிடவும் பயன்பட்டன. திறந்தவெளிப் போர்களுக்குத் தேர்கள் பயன்பட்டன. அவை, குயவு, கொடிஞ்சி, திகிரி, இரதம், யந்திரம், சயந்தனம், வையம் என அவற்றின் பண்புகளால் பலபெயர்பெற்றன.

5.0.7 நீர்வழிச் செல்ல நாவாய், புணை, ஓடம், தோணி, அம்பி, இவற்றையும், விண்வெளிச்செல்ல விண் ஊர்திகளையும் மேற்கொண்டனர் என்பதைப் பண்டை இலக்கியங்களால் அறியலாம்.

5.0.8 நாட்டைப்பாதுகாத்தற்கு அரண்கள் பெரிதும் உதவின. பண்டைப் போரில் அரண்கள் சிறப்பிடம் பெற்றன. அவை நீர் அரண், நிலவரண், காட்டரண், மதிலரண் என நால்வகைப்படும். கடல், ஆறு, அகழி, கிடங்கு, இலஞ்சி ஆகியன நீரரண்கள், அகமதில், இடமதில், புறமதில் எனப்படுவன நிலவரண்கள்; மலை, குன்று போல்வன காட்டரண்கள்; நிலவரண் மதிலரணை ஒத்தது. மதிலரண், இஞ்சி, எயில், புரிசை, ஆரெயில், அறிறு, அருப்பம், கோட்டை, வரை – எனப்பலபெயரில் அறியப்படுகிறது. அரணின் சிறப்பைக் குறள்,

"அறிவு அற்றங்காக்கும் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்கல் ஆகா அரண்"[11]

– எனக்கூறும்.

5.0.9 பல்வேறு போர்ச் செயல்களுக்குப் பல்வகைப் போர்க்கலன்களையும் பயன்படுத்தினர். வில், கவண், எறிகோல், அம்பு, வேல், ஈட்டி, சூலம் - என்னும் இலக்குக்கருவிகளும், குறுந்தடி, உலக்கை, கதை, வாள், கோடரி, தண்டாயுதம் - என்னும் நேர்தாக்குக் கருவிகளும் போருக்கு உதவின. போர் வீரர்களின் பாதுகாப்புக்குதவும் மெய்ம்மறைக் கவசங்களும் கேடயங்களும் பயன்பட்டன.

5.0.10 போர் நெறிகளில், பழந்தமிழர் மரபு வழிப்போற்றும் புறப்பொருள் ஒழுக்கங்கள் ஓம்பப்பட்டன. போரில் போற்றப்படும் ஒழுக்கங்களான வெட்சி, கரந்தை, வஞ்சி, தும்பை, உழிஞை, வாகை, காஞ்சி ஆகிய திணைகளுடன் பாடாண்திணை நெறிகள் போரில் பெரிதும் இடம்பெற்றன. 'மந்திரம், தூது, செலவு, இகல்வென்றி' எனத் தண்டியலங்காரம் குறிப்பிடும் போர் நெறிகள் பின்பற்றப்பட்டன. சான்றோரைக் கலந்தாய்தல், கடவுளை வணங்கிப் போர் தொடங்கல், நிமித்தம் பார்த்தல், திணைப்பூச்சூடல், - ஆகிய நிகழ்ச்சிகளைப் பண்டைத் தமிழர்கள் மேற்கொண்டு ஒழுகினர். பகைநாடுகளை அழித்தல், பகைவீரர்களைப் புகழ்தல், இறந்தோரை வழிபடல், மங்கலநீராடல், முடிசூட்டல் முதலிய போர்ப்பின்னிலை நெறிகளைப் போற்றிப் புகழ்ந்தனர்.

5.0.11 பண்டைப்போரின் நட்பங்களான, தன்வலி, மாற்றார் வலி, இடம் காலம் துணை அறிதல், வினைக்குரியாரைத் தெரிதல், படை அமைப்பு, செயல்திறன்கள் - முதலியவற்றை போர்த்தலைவர்கள் நுணுகி ஆய்ந்து செயல்பட்டனர். இவற்றால், போர்கள், அடிப்படைக்காரணங்களால் வெந்திறல் வீரர்கள் தலைமையில், நால்வகைப் படைகளை மேற்கொண்டு, போர் நெறிகளைப் போற்றி, பண்டை மரபை ஓம்பி, அறநெறிகாக்க நடந்தன என்று கூறலாம்.

5.0.12 "இராமாயணக் காப்பியத்தில், முக்கிய நிகழ்ச்சி போரே ஆகும். இராம-இராவணப் போரே இராமாயணக்கதை என்று தமிழ்ச் சான்றோர்கள் கருதி வந்துள்ளனர்"[12] என ஆய்வாளர் மு.இராகவையங்கார் குறிப்பிடுவார்.

5.0.13 போர்க்களத்தில் போர் வீரர்கள் மேற்கொள்ளும் போர் நெறிகளும் படைக்கலங்களும் பற்றிய செய்திகளைக் குறிப்பிட்டு இரு நூற்களும் மாறுபடும் இடங்களை அட்டவணை மூலம் ஒப்புமைப்படுத்தப்படுகின்றன. முக்கிய போர்களில் மேற்கொண்ட போர்க்கருவிகள் பிற்சேர்க்கையில் பட்டியலிட்டு இணைக்கப்பட்டுள்ளது.

5.1 இராமாயணப் போர் நெறிகள்:

5.1.0 இராமாயணப் போர் நெறிகளில் மற்போரையும் படைக்கலப் போரையும் காணலாம். அவை, தனிப்போராகவோ குழுப் போராகவோ அமைகின்றன. தனிப்போரில் மற்போரும் கருவிப்போரும் இடம்பெறுகின்றன. குழுப்போரில் படையணிகளும் படைத்தலைவர்களும் பெருங்கலங்களுடன் போர் புரியும் செயல்கள் இடம்பெறுகின்றன.

5.1.1 போரில், படைவீரர்கள் ஒருவரோடு ஒருவர் கைகலந்து போரினைத் தொடங்குகின்றனர்; தொடர்ந்து சிறுபடைத்தலைவர்கள் போரிட, இறுதியில் தலைவரும் தலைவரும் போர் புரிகின்றனர். இராமனும் கும்பகருணனும் நிகழ்த்தும் போர் இம்முறையில் நடக்கிறது (VI :15). படைகளும் படைகளும் கைகலந்து போரினைத் தொடங்கி, படைகள் அழிந்ததும் தலைவர்கள் செய்யும் போர் நெறிகளையும் காணலாம். அனுமனுடன் இந்திரசித்து உடற்றும் போரும் (VI :27) வேலேற்றபடலத்தில் இலக்குவனும் இராவணனும் இயற்றும் போரும்

(VI : 37) இதற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். போர் அணிகளிடையே படைவீரர்கள் தங்களுக்குள் போரிட்டு அழியின், படைத்தலைவரே பகைவரை எதிர்ப்பர்; அவரும் அழியின், சிறுதலைவர்கள் போர் மேற்கொள்ளுவர். இலக்குவன் அதிகாயனோடு நடத்திய போரிலும் (VI : 17) இந்திரசித்தின் பிரம்மாத்திரப் போரிலும் (VI : 21) இந்நெறி மேற்கொள்ளப்படுகிறது. ஒத்த நிலையிலுள்ள சிறு படைத்தலைவர்கள் மட்டுமே பெருந்தலைவர்களின் துணையின்றிப் போரை நடத்தும் நெறியையும் காணலாம். படைத்தலைவர் வதைப்படல நிகழ்ச்சி (VI : 30) இம்முறையிலானதாகும். போர்த் துவக்கத்திலேயே, இரு அணித்தலைவர்கள் போரிடும் நெறியும் உண்டு. மகரக்கண்ணன் வதைப்படலத்திலும் (VI : 20) இந்திரசித்து வதைப்படலத்திலும் (VI : 27) இந்நெறியைக் காணலாம்.

5.1.2 பொதுவாக, இப்போர் முறைகளை ஆராய்ந்தால், இராமாயணப் போரில், போர்ப்படைகளில் எவ்விதத் துணையுமின்றி நடத்தும் தனிப்போரையும் போர்ப்படைகளின் துணையோடு எதிர்த்து நின்று தலைவர்கள் நடத்தும் கூட்டப் போரையும் மேற்கூறிய போர்நெறிகளுள் அடக்கலாம். எனவே, இராமாயணப் போரைத்தனியாண்மைப் போர், கூட்டாண்மைப் போர் எனப்பாகுபடுத்தலாம்.

5.1.3 போரில், மந்திரம், தூது, செலவு, இகல், வெற்றி – என்னும் போர்நெறிகள் பின்பற்றப்படுகின்றன. மந்திரமென்பது ஆலோசனை என்னும் பொருளைத் தருகிறது. எரியுண்ட இலங்கையைப் புதிப்பித்த பின் கூடும் இராவணன் மந்திரப்படலம் (VI : 2) இதற்குச் சான்று. அமைச்சர்கள், சகோதரர்கள், மக்கள் முதலியோர் இம்மந்திர நிகழ்ச்சியில் பங்கு பெறுகின்றனர். வீடணன் அடைக்கலப்பகுதியிலும் இராமன் மந்திராலோசனை (VI : 2) நடத்துகிறான். போர் நெறிகளில் தூது அடுத்தபடியாக நிகழ்வது. அங்கதன்

இராவணன் பால் செல்லும் தூது இதற்குச்சான்றாகும். (VI : 4) 'செலவு' என்பது, தூதின் பின் நிகழும்; பகைமேல் போர்தொடுக்கப்படைகள் செல்லும் நெறியும், வெற்றிபெற்ற வீரர்கள் தம் நாட்டை நோக்கிவரும் நெறியும் என்றும் கூறலாம். கடல் காண் படலமும் (VI : 1) மீட்சிப்படலமும் (VI : 37) இதற்குச் சில சான்றுகளைத் தருகின்றன. 'இகல்' என்பது பகை, போர் என்னும் பொருளைத்தரும். யுத்தகாண்டப் போர் நிகழ்ச்சிகள் அனைத்தும் இதற்குப் பொருந்தும். 'வென்றி' - போரின் முடிவும், பின் நிகழ்வுகளும் இதனைத் தெளிவாக்கும். 'களியாட்டம்' (VI : 24) மீட்சிப்படல நிகழ்ச்சிகள் (VI : 36) வெற்றிச் செயலை உணர்த்தும். இங்ஙனம் தண்டியாசிரியர் கூறும் ஐவகை நெறிகளும் இராமாயணப்போர் நெறிகளில் இடம்பெறுகின்றன.

5.1.4 போர் நிகழ்ச்சியில் வேள்வி செய்தல், நிமித்தம் பார்த்தல், வஞ்சினம் கூறல், வீரரைப் புகழ்தல் முதலியன இடம்பெறுகின்றன. போர் மேற்செல்வோர் மாலைசூடிச்செல்லுதல், பூச்சூடுதல் முதலிய நெறிகளும் உண்டு. எடுத்துக்காட்டாக (1) இந்திரசித்து போரில் மெலிவடைய, நிகும்பலை வேள்வி செய்கிறான் (VI : 26). (2) அரக்கர்கள் மேற்செல்லும் காலை தீநிமித்தங்கள் தோன்றுகின்றன (VI : 36). போரில் வீரவாதம் செய்து வஞ்சினம் கூறல் மரபு. அதிகாயன் அனுமனிடமும் (VI : 17) இந்திரசித்து அனுமனிடமும் (VI : 27) வீரவாதம் புரிகின்றனர். இலக்குவன் வில்லாற்றலை இராவணன் புகழ்கிறான்; (VI : 36) இந்திரசித்தும் (VI : 27) புகழ்கின்றான். இராமன், ஆத்தி மாலையும் தும்பையும் சூடிப்போருக்குப் புறப்படுகின்றான் (VI : 15). கோட்டையை வளைத்தகாலை, அனுமன் உழிஞைசூடி வருகிறான் (VI : 14). நிகும்பன், நொச்சி சூடி (VI : 19), எதிர்த்த வானரப்படையை எதிர்க்கிறான். கும்பகருணன் தும்பைப்பூ சூடியதை பிரம்மாத்திரபடலத்தில் (VI : 21) கவிஞன் நினைவுப்படுத்துகிறான். வாகைசூடும் நெறி பலவிடங்களில் இடம்பெறுகின்றது.

இலக்குவன், கும்பகருணன் வாகைசூடிய செய்திகள் (VI :15) உள்ளன. மாற்றாரைக் கொல்லும், நாமிலாட்டு பல இடங்களில் இடம்பெறுகின்றது. இலக்குவன் அரக்கர்படையைக்கொன்று நாமிலாட்டுகின்றான் (VI :27); மூலப்பலப்படையைக் கொன்று இராமன் நாமிலாட்டுகின்றான் (VI :30) இங்ஙனம், பண்டைப்புறப்பொருள் இலக்கண நெறிகள் சில, இராமாயணப் போர் நிகழ்ச்சிகளில், இலைமறைகாய் போல், காணப்படுகின்றன.

5.1.5 படைக்கலங்களைப் பல பெரியோர்கள் தவத்தின் பயனாக அளிக்கின்றனர். விசுவாமித்திரர், அகத்தியர் முதலியோர் படைக்கலங்களை இராமனுக்கு அளிக்கின்றனர். அம்புகளை ஏவும்போது, மந்திரித்து ஏவும் நெறி போற்றப்படுகிறது. விசுவாமித்திரர், அகத்தியர் கற்றுக்கொடுத்த மந்திரங்கள் (VI :36) இதற்குச் சான்றாகும். அம்புகள், பணிபிற்கேற்ப நாகாத்திரம், அக்கினியாத்திரம் என்னும் பெயரைப்பெறுகின்றன. ஓர் அத்திரம் மற்றோர் அத்திரத்தைத் தடுக்கிறது. ஒன்று மற்றொன்றை விழுங்குகின்றது. சிவன்படை திருமால்படை இடம்பெறுகின்றன. அவை வலிமைமிக்கன. இராமபாணம் கும்பகருணன், இராவணன் ஆகியோரை அழிக்கிறது. அவ்வாளி நீராடி தூய்மைபெற்று, அம்பறாத்தூணியில் புகுகிறது. (VI :15)

5.1.6 இராம இலக்குவர் வில், அம்பு, அரைக்கத்தி, குறுவாள், பிரமதண்டம் இவற்றைப்பயன்படுத்தினர். வசிட்டர் பிரமதண்டத்தையும், விசுவாமித்திரர் அம்பையும் அளிக்கின்றனர். அரக்கர்கள், தண்டாயுதம், கதை, மரம், தோமரம் (உலக்கை), கைவேல், வில், அம்பு, கத்தி, தடி, கல்வீசும் உறிகள், சூலம், இரும்புலக்கை, கோடரி, வாள், ஈட்டி, முதலிய வற்றைப் பயன்படுத்துகின்றனர். வானரப்படை கல்லையும், மரத்தையுமே

பயன்படுத்துகின்றது. அரக்கர்களிடமிருந்து கிடைத்த படைக்கலத்தை அனுமன் சில சமயம் கையாளுகிறான். பிரமாத்திரப்படலத்தில் அனுமன் 'கதை' ஏந்தி அகம்பனைத் (VI :21) தாக்குகிறான்.

5.1.7 இராமன், படைமேற்செல்லும்போது முன்னும் பின்னும் மறவர் காத்து நிற்கின்றனர். படை செல்லும்போது உணவு, நீர், முதலியன செல்லுகின்றன. வீடணன் இதனைச் செய்கிறான் (VI :21). படைகள் ஆடிப்பாடி ஆரவாரம் செய்து செல்கின்றன. ஒற்றர்கள் பகைப்புலத்தில் சென்று உளவறிகின்றனர். ஒற்றர்களைத் தன்புறுத்தல் மறச்செயலாகும் என்பது வலியுறுத்தப்படுகிறது. இராவணன் அனுப்பிய சுகசாரணர்கள் ஒற்றர்களே.

5.1.8 போரில் அடைக்கலமாக வந்தவரை ஏற்றுக்கொள்ளல், இராமாயணத்தின் சீரிய நெறியாகும். வீடணன் அடைக்கலம் இதற்குச் சான்று (VI :4). தூதவர்களைக் கொல்லலாகாது என்பது போர்நெறி. ஒத்த தலைவர்கள் தம்முள் உடற்றுவது போர்முறையாகும். போர்ப்படை செல்லச், சங்கும் பறையும் முழக்கப்பெறும் (VI :21). போர் தொடங்குமுன் சிலர் நாணைத்தெறித்துப் பேரொலி (VI :2) செய்வர்.

5.1.9 குதிரை பூட்டிய தேரில் வீரர் தலைவர் தோள்மேலிருந்தும் போர் செய்வர் என்பதனை அனுமன் தோளில் இராமனும், சுக்கிரீவன் மேல் இலக்குவனும் இருந்து போர் செய்தமை (VI :36) காட்டுகின்றன. வீரர் முதலில் தேரையும், பின் குதிரையையும், தொடர்ந்து சாரதியையும் அழிப்பர் (VI :36). கும்பகருணனையும் இராவணனையும் வதைக்கும் பாங்கு இதற்குச் சான்று. போரிடையே வீரமுழக்கம் நிகழ்த்துவதுண்டு. அனுமன், நீலன், கும்பகருணன், இந்திரசித்து முதலியோர் வீரமுழக்கம் (VI :15:27) செய்கின்றனர்.

5.1.10 போரில் கோட்டைமுற்றுகை நடக்கும். உள்ளிருந்து காக்கும்படை, போர் செய்வதற்கு வெளியேவரும். இலங்கையில் இராவணப்படை உள்ளேயிருந்து காக்க, இராமன்படை முற்றுகை இடுகிறது. ஒவ்வொரு போரிலும் போர்த் தலைவரே போரை முன் நடத்திச்செல்லுவர். இவ்வாறு கும்பகருணன், இந்திரசித்து, மகரக்கண்ணன், இராவணன் முதலியோர் தலைமை ஏற்றுப்போரைச் செய்கின்றனர். போரில் வீரர் தளரின், சாரதி தேரைப்பின்கொண்டு பாதுகாப்பான இடத்திற்குச் செலுத்துவதுண்டு (VI :36). இச்செயலை இராவணன் தளர்ந்தபோது சாரதி செய்யத் , தளர்வு நீங்கி இராவணன் போர் செய்தமை விளங்கும்.

5.1.11 போர் மேற்கொள்ளும் தலைவர்கள், தம் கொடிகளில் இலச்சனைகளைப் பொறித்திருந்தனர். இராவணன் வீணைக்கொடியை எழுதி அமைத்தான். அவன் விமானத்திலும் வீணைக்கொடி விளங்கிற்று. துகில், துவசம், பதாகை என்னும் பெயர்களில் அவை வருகின்றன. சிவபெருமான், விடை இலச்சனை பொறித்திருந்தான். திருமால் கருடக்கொடியையும், கும்பகருணன் சிங்கத்தை இலச்சனையாகவும், இந்திரசித்து இடியை இலச்சனையாகவும் கொண்டிருந்தனர்.

5.1.12 மீவியல் ( புனைவும் யுத்த காண்டத்தில் இடம் பெறுகின்றன. நாகபாசத்தால் கட்டுண்டு கிடந்த இலக்குவனை விடுவிக்க வீடணன் இறையருளை வேண்டுகிறான். (VI :18) இராமனோ தம்பி நிலை கண்டு சோர்ந்து விழுந்து கிடக்கிறான். இறையருளால், கலுழன் வர, நாகபாசம் விடுகின்றது (VI :18). பிரமாத்திர நிகழ்ச்சியிலும், இராவணன் வேல் எறிந்த போதும், இலக்குவன் இருமுறை மூர்ச்சிக்கிறான். அனுமன் மருந்துமலையைக் கொணர இலக்குவன் இருமுறை உயிர்த்தெழுகின்றான். (VI :23) நல்லோர்க்கு உதவி, அறத்தை நிலைநாட்ட உதவிடும் வகையில் மீவியல் புனைவும் இடம்பெறுகின்றன.

5.1.13 தேவர்கள் அவ்வப்போது உதவிடும் செயல்களும் போர் நிகழ்ச்சிகளில் இடம்பெறுகின்றன. இராமன் வேண்டுகோளுக்கிணங்கி வருணன், இராமனுடைய எரியம்பால் உடலெல்லாம் வெந்து கரிய ஓலமிட்டுக்கொண்டு, இராமனிடம் அடைக்கலம் புகுகின்றான் (VI : 7). அதிகாயனோடு இலக்குவன் போர் நடக்கும்பொழுது, காற்றுக்கடவுள் சதுமுகன் படையை ஏவி, அதிகாயனைக் கொல்லுமாறு இலக்குவனிடம் இரகசியமாகக் கூறுகின்றது (VI : 18). சிவபெருமான் ஏவலால், இந்திரன் இராமனுக்குத் தன் தேரையனுப்புகின்றான் (VI : 36); மூலப்படை போரின்போது 'என்ன ஆகுமோ?' என வருந்திய தேவர்களுக்கு 'இராமன் வெல்வான்' என்னும் உறுதியை அளிக்கின்றான் (VI : 30). நெருப்பில் குளித்தெழுந்த சீதாபிராட்டியின் கற்பின் திண்மையை பிரமனும் சிவபெருமானும் இராமனுக்கு உணர்த்துகின்றனர். விண்ணகத் தயரதனைச் சிவபெருமான் பணிக்க, இராமன் முன் தோன்றிச் சீதையை ஏற்கச் செய்கின்றான். (VI : 37) தேவர்கள் அருளால் போரில் மாண்டவானரங்கள் உயிர்பெற்று எழுகின்றன (VI : 37) பதினான்கு ஆண்டுகள் முடிந்தன என்று தேவர்கள் இராமனிடம் கூறிப் பரதனிடம் செல்லுமாறு கூறுகின்றனர் (VI : 37). காப்பிய நன்னிகழ்வுகளில் தேவர்கள் ஆடிப்பாடி இன்புறுகின்றனர்; பூமழை பொழிந்து வாழ்த்துகின்றனர் (VI : 37). தேவர்கள் மேற்கொள்ளும் செயல்கள் மீவியலின்பாற் படுமெனினும் மனிதர்களைப் போன்று நடந்து கொள்ளுமாறு செய்வது, போர்ச் செயல்களுக்குப் பொலிவூட்டுகின்றது.

இங்ஙனமாக, இராமாயணப் போர்கள், பண்டைத் தமிழ் மரபைப் பேணியும், காப்பிய நெறியை ஓம்பியும், இதிகாச மீத்திறவியலை ஆங்காங்கே சுட்டிக்காத்தும், கம்பராலும் சீராமகவியாலும் பெரிதும் விளக்கப்படுகின்றன.

5.1.14 கம்பராமாயணத்தில் இடம்பெறும் முக்கிய போர் நிகழ்ச்சிகள்:

இராம-இராவணப் பெரும்போருக்கு அறிமுகமென்ற நிலையில் ஓர் ஒத்திகைப் போராக-வருவதுரைக்கும் போராக-நிகழும் போர்களாவன:

| | | | |
|---|---|---|---|
| 1. | இராமன் | தாடகை | |
| 2. | இராமன் | மாரீசன் | |
| 3. | இராமன் | சுபாகு | |
| 4. | இராமன் | பரசுராமன் | |
| 5. | இராமன் | விராதன் | |
| 6. | இராமன் | கவந்தன் | |
| 7. | அநுமன் | கடற்பூதம் | |
| 8. | அநுமன் | இலங்கைக்காவலன் | |
| 9. | அநுமன் | சம்புமாலி | - முதலியன |

இவை, வரவிருக்கும் பெரும்போர்களுக்கு முன்னோடியாகத் திகழ்வன. இவற்றை ஒருவரோடு ஒருவர் மோதும் தனிப்போராகக் கொள்ளலாம்.

5.1.15 யுத்தகாண்டத்தில் நிகழும் தனிப்போர்களாவன:

| | | | |
|---|---|---|---|
| 1. | சுக்கிரீவன் | இராவணன் | |
| 2. | அங்கதன் | இந்திரசித்து | |
| 3. | நீலன் | நிகும்பன் | |
| 4. | இலக்குவன் | விருபாக்கன் | |
| 5. | சுசேணன் | வித்யுன்மாலி | - முதலியன |

5.1.16 இனி, அணிகளும் அணிகளும் போர் செய்யும் போது படைவீரர்கள் தலைவர்கள், இருவர் மூவரைத்தாக்கும் கூட்டப்போர்களாவன:

1) நீலன்
- ♂ பிரகத்தன்
- ♂ மகோதரன்
- ♂ இராவணன்

2) இராவணன்
- ♂ அநுமன்
- ♂ இலக்குவன்
- ♂ இராமன்

| | |
|---|---|
| 3) கும்பகருணன் | அனுமன்<br>இலக்குவன்<br>இராமன் |
| 4) அனுமன் | தேவாந்தகன் மற்றும்<br>படைவீரர்கள் |
| 5) சுக்கிரீவன் | கும்பகருணன்<br>கும்பன்<br>நிகும்பன் |
| 6) இலக்குவன் | அதிகாயன் மற்றும்<br>படைவீரர்கள் |
| 7) இராமன் | இந்திரசித்தன் மற்றும்<br>படைவீரர்கள் |
| 8) இராமன் | மகரக்கண்ணன் மற்றும்<br>படைவீரர்கள் |
| 9) அங்கதன் | மகோதரன்<br>இந்திரசித்து<br>நராந்தகன் |

5.1.17 பெரும் போராகக் கருதத்தகும் போர்களான இலங்கை முற்றுகை, இராம-இராவண முதற்போர், கும்பகருணன் வதை, அதிகாயன் வதை, இந்திரசித்தின் வதை (மூன்று நிலைகள்), மூலபலவதை, இராவணன் வதை முதலியன கூட்டப்போர்களாகும்.

### 5.1.18 படைக்கலங்கள்:

இராமாயணப்போரில் கம்பராமாயணம், இராமசரிதம் ஆகிய இரு நூற்களிலும் அரக்கர்கள் நால்வகைப் படைகளையும், ஏற்ற படைக்கலங்களையும் கையாள, வானரர் மரம், கல், மலை, உடலுறுப்புகள் முதலியவற்றைக் கையாளுகின்றனர்.

5.1.19 கம்ப ராமாயணத்தில் அரக்கர் படை மேற்கொள்ளும் படைக்கலங்கள்:

1. வில்
2. அம்பு, கோல்
3. வாள்
4. வேல்
5. மழு, கோடரி
6. கிடுகு
7. பாசம்
8. கதை
9. தண்டு
10. சூலம்
11. தோமரம்
12. அயில், வேல்
13. சக்கரம்
14. வாலம், பிண்டிப்பாலம், வலையம்
15. உலக்கை, முசலம்
16. நாஞ்சில் (எந்திரம்)
17. கணையம்
18. குலிசம், வச்சிரப்படை
19. கேடயம்
20. ஈட்டி
21. முசுண்டி, சம்மட்டி
22. கழு
23. கப்பணம்
24. கவண்கல்
25. கன்னகம்
26. பிறைச்சந்திரபாணம்
27. தோட்டி
28. வளையம்
29. முத்கரம்
30. முளை
31. கொழு
32. மூவிலைவேல்
33. அரம்

— முதலியன

5.1.19 அத்திரங்கள்:

பூவியல் படைக்கலக் கருவிகளாக அத்திரங்கள் காவியங்களில் இடம்பெறக் காணலாம். இராமாயணப் படைக்கலங்களில் அத்திரங்கள் (அஸ்திரங்கள்) சிறப்பிடம் பெறுவன. மீத்திற இயல்பினதாகிய இவற்றை இராம–இலக்குவரும், அரக்கர் தலைவரும் கையாளுகின்றனர். கம்பர் இவற்றைப் படை என்று கூற, உரையாசிரியர், வான்மீகியைத் தழுவி, அத்திரமென்றே கூறுவார்.

அத்திரங்கள் பற்றிய நிகழ்ச்சிகளைத் தருவதில் வான்மீகத்தில் கூறியபடியே கம்பரும் சீராமகவியும் பின்பற்றுகின்றனர். அத்திரமென்பது மந்திரவலிமை பெற்றது.

அத்திரம் விடுவதில் அவ்வவ் அத்திரத்தின் அதிதேவதையை நினைந்து பூசை செய்து, மந்திரம் ஓதி, வில்லில் தொடுப்பது வழக்கம். இராம இலக்குவர்க்கு விசுவாமித்திரர் அத்திரங்கள் வழங்குகின்றார். அவை அவர்களுக்கு ஏவல் புரிகின்றன. இராவணன் முதலிய அரக்கர்கள் அத்திரங்களைத் தவஞ்செய்து பெறுகின்றனர்.

ஓர் அத்திரத்தை மற்றோர் அத்திரம் தடுக்கிறது; ஒன்றை மற்றொன்று விழுங்குகின்றது; மலைந்து தீய்கின்றது. ஓர் அத்திரத்தை அதனைவிட ஆற்றலுள்ள மற்றொரு அத்திரம் விழுங்குகின்றது. அம்புகளால் வெல்ல இயலாத நிலையில், இறுதியில், இருதரப்பினரும் அத்திரங்களை ஏவுகின்றனர். பிரமாத்திரம் பேராற்றல் வாய்ந்ததாகச் சில இடங்களில் விளங்குகின்றது. சிவன்படையும் நாராயணன் படையும் (படை-அத்திரம்) அதினும் வலிமை மிக்கன எனவும் தெரியவருகின்றது. அத்திரங்களை முதலில் ஏவுவோர் அரக்கராகவும், அவற்றைத் தடுப்போர் இராம-இலக்குவருமாக அமைகின்றனர். இராமருக்குரிய இராமபாணம் அவருக்குப் பயன்படுகிறது. கும்பகருணனை இராமபாணத்தால் இராமன் அழிக்கிறான். இராம பாணம் பட்டவர் உயிரைப்பருகி, நீராடி தூய்மைபெற்று பின், அம்பறாத் தூணியில் புகுகின்றது. இராம அவதாரச்சிறப்புக்கு இது சிறந்த ஓர் எடுத்துக் காட்டாகும்.

5.1.20 அத்திர நிகழ்ச்சிகளில் சிலவற்றைக் காண்போம்:

1) பிரம்மாத்திரம் - இராமனை வலம் வந்து திரும்புகின்றது. இராவணன் சங்கம் ஊத, திருமாலின் சங்கம் தானே முழங்குகின்றது. திருமாலின் ஐம்படைகளும் இராமன் திருவடியை அடைகின்றன (VI:36:2:30). இராவணன் விடுத்த வேலை இராமன் உங்காரத் தொனி பொடியாக்குகிறது.

2) வாயுவாத்திரம் - அக்கினியாத்திரம், வருணாத்திரம், ஆதித்யாத்திரம், பிராமாத்திரம், விட்டுணாத்திரம், சிவாத்திரம் - என்பவற்றை இந்திரசித்து

முதலியவை, இலக்குவன் அதே அத்திரங்களால் தடுக்கின்றான் (VI:26:128-157)

3) நிகும்பலை யாகப்படலத்தில் இராவணன் விடுத்த மோகனாத்திரத்தை நாராயண அத்திரத்தாலும், தாமதாத்திரத்தை சிவாத்திரத்தாலும், ஆசுராத்திரத்தை அக்கினியாத்திரத்தாலும், மயனத்திரத்தைக் காந்தருப்படையாலும் மாயாத்திரத்தை ஞானாத்திரத்தாலும், நிருதிப் படையைக்கருடப்படையாலும் இராமன் மாறச்செய்து, இராவணன் அத்திரங்களைச் செயலிழக்கச் செய்தான் (VI:36:77-128).

5.1.21 1) வானரப்படை மேற்கொண்ட படைக்கலங்கள்

1. மரம்
2. கல்
3. மலை
4. கம்பு } பகைபுலத்தில் கிடைத்தவை
5. கதை } பகைபுலத்தில் கிடைத்தவை
6. பல் } உடலுறுப்புகள்
7. புஜம் } உடலுறுப்புகள்
8. நகங்கள் } உடலுறுப்புகள்
9. கை, கால் } உடலுறுப்புகள்

2) இராம-இலக்குவர்

1. வில்
2. அம்பு
3. பகழி
4. வாள்
5. கணை

4) இராம இலக்குவர் பெற்ற அத்திரங்கள்

1) வாயுவாத்திரம்
2) அக்கினியாத்திரம்
3) வருணாத்திரம்
4) ஆதித்யாத்திரம்
5) பிரம்மாத்திரம்
6) விஷ்ணுவாத்திரம்
7) காந்தவாத்திரம்
8) காருடாத்திரம்
9) சிவாத்திரம்
10) ஞானாத்திரம்
11) ஆக்னேயாத்திரம் - முதலியன

4) அரக்கர் பெற்ற அத்திரங்கள்:

1. நாகபாசம்
2. அக்னியாத்திரம்
3. வாயிப்யாத்திரம்
4. வருணாத்திரம்
5. யாமாத்திரம்
6. காந்தர்வாத்திரம்
7. மோகனாத்திரம்
8) தாமதாத்திரம்
9) ஆசுராத்திரம்
10) மயாத்திரம்
11) மாயாத்திரம்
12) நிருபதிபடை
13) பிரம்மாத்திரம் – முதலியன

5) போர்க்களப் பேரிகைகள்

1. கும்பிகை
2. திமிலை
3. செண்டை
4. குறடு
5. மர்ப்பேரிகொடி
6. பம்பை
7. தார்முரசம்
8. சங்கம்
9. பாண்டில்
10. போர்ப்பணவம்
11. தாரி,
12. கம்பலி
13. உறுமை
14. தக்கை
15. கரடிகை
16. துடி
17. வேய்
18. கண்டை
19. அம்பலி
20. கணுவை
21. ஊமை
22. சகடை
23. பறை
24. வயிரி
25. ஆகுளி
26. காளம்
27. பல்லியம்
28. வீணை
29. யாழ் – முதலியன

படைகளை நிலையானது, நிலையற்றது என்றும், தானை வகைகள் என்றும் படைக்கல வகைகள் என்றும் வகைப்படுத்தலாம்.









படைக்கலங்களை, எய்கலம், எறிகலம், குத்துக்கலம், வெட்டுக்கலம் தடுகலம் என வகைப்படுத்தலாம்.



5.2 இராமசரிதம் தரும் போர் நெறிகள்:

இராமசரிதம், கம்பராமாயணத்தைப் போலவே, போர்ப்பகுதிகளில் இராமாயண கால மக்கள் வாழ்வின் அற மறப்பாங்கினைச் சுட்டிச் செல்கின்றன. இராமாயண யுத்தகாண்டப் பகுதியில், இராமசரித அடிப்படையில், இராமன்-இராவணன் முதல்போர், கும்பகருணன் போர், இராவணன் மக்கள் அதிகாயன், நராந்தகன், திரிசிரசு, தேவாந்தகன் போர், இந்திரசித்து போர், இராவணன் இறுதிப்போர் முதலியன குறிப்பிடத்தக்கன. இலங்கை முற்றுகையில் இராவணன்-சுக்கிரீவன் மற்போர் வரவர வளர்ந்து இறுதியில் பெரும்போராக முடிகின்றது.

இத்தகைய போர்த் தொடர்ச்சியுள் சில தனிப்போராகவும், சில அணிப்போராகவும் நிகழ்கின்றன. சிலவேளை படைத்தலைவர்கள் தனிப்போரும் செய்கின்றனர்.

போர்தொடங்குமுன் மந்திராலோசனை செய்கின்றனர். இராவணன் தன் அமைச்சர்களுடன், வானரர்மேல் போர்தொடுக்க ஆலோசனை செய்கிறான் (ப:5,6); அவையில் அமைச்சர்களும், சகோதரர்களும் மக்களும் கலந்து கொள்கின்றனர். போரிடும்முறை பற்றி இருதரத்தாரும் ஆலோசனை நடத்துகின்றனர் (ப:10,11). போர் தொடங்கும் முன் தூதனுப்பிப் போர் மற்றும் அதன் பயனை அறிந்து, போர்தொடங்குகின்றனர். அங்கதன் இராவணன்பால் தூது செல்லுகிறான் (ப:13).

போரின் முதல் நிலையாக, அரணை வளைத்தல் நடைபெறுகிறது. வானரர் படை, இலங்கையை முற்றுகையிடுகிறது (ப:13). நகரம், கோட்டை மதிலாலும், அகழியாலும் சூழப்பட்டு வாயில்களை உடையதாக இருக்கிறது. பல பொறிகள் பொருத்தப்பட்டு, வானளாவிய கோபுரங்கள் உடையதாக இருக்கிறது (ப:2)



போரை நேரிடுதற்பொருட்டு ஒவ்வோர்

வாயிரம் ஒவ்வோர் தலைவர் பொறுப்பில் படையுடன் விடப்பெறுகிறது. உள்படை, ஊவுப்படை இவற்றிற்கு ஒவ்வோர் தலைவர் இருக்கின்றனர் (ப.10,11).

போருக்கு ஓர் தலைவரே ஆணையிடுகின்றனர். ஆணை பெற்றபின் அணிவீரர் போர் செய்கின்றனர். அனுமன்-தூமராக்கன் போர் (ப.18) நீலன்-பிரகத்தன் போர் (ப.23)இவற்றை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

தொடக்கத்திலிருந்து இறுதிவரை வானரப்படை தமக்கே உரிய மரம், மண், கல், பாறை இவற்றால் போர் செய்ய, அரக்கர்கள் கதை, மரம், தோமரம், வேல், வில், அம்பு, கத்தி, சூலம், தடி, இரும்புலக்கை, கோடரி, வாள், ஈட்டி முதலியவற்றைப் பயன்படுத்துகின்றனர். இயற்கை இறந்த செய்திகளாக அத்திரங்கள் கையாளப்படுகின்றன. ஒவ்வொரு அத்திரமும் விடவேண்டிய விதிமுறை பற்றியும் பேசப்படுகிறது. இலக்குவன், இராமன், அதிகாயன், இந்திரசித்து,இராவணன் ஆகியோர் அத்திரங்களைக் கையாளுகின்றனர்.

பகலும் இரவும் போர் நடக்கிறது. போர்ச் செல்ல சங்கமும் பறையும் முழங்குகிறது. வீரர்கள் நாணைத் தெறித்துப் பேரொலி செய்வர். இருதரத்தலைவர்களிடமும் இதனைக் காணலாம்.

போரில் நால்வகைப்படையுடன், கழுதை, ஒட்டகம், சிங்கம், போன்ற விலங்குகள் படைகளில் பங்குபெறுகின்றன. கும்பகருணன் வதையிலும், திரிசிரன் போரிலும் இதனைக்காணலாம் (ப.32,41) தேரில் இருந்து போர் செய்யும் நிலைக்கேற்ப, இராம இலக்குவர், அனுமன், அங்கதன் தோளிலிருந்து போர் செய்கின்றனர் (ப.64,72).

போர்த் தலைவர்கள் ஒப்பாரோடு போர் செய்யும் நெறி கூறப்படுகிறது. கும்பகருணன் இலக்குவனை எதிரிடவும், மகரக்கண்ணன் இலக்குவனை எதிரிடவும் மறுக்கின்றனர் (ப:32,58).

போரில் வெற்றி பெற்றோர் களியாட்டம் புரிகின்றனர். போரில் பலவகை வீரரையும் பாராட்டும் மரபும் உண்டு. இந்திரசித்து இலக்குவனைப் பாராட்டுகிறான் (ப:47).

அரக்கர்கள் மாயப்போர் செய்ய, வானரர் படைவீரர்கள், பேரறிவால் அதனை வெல்லுகின்றனர். மகராக்கனை இராமன் பேரறிவால் வெல்லுகிறான் (ப:58).

அரக்கர்கள் மாயப்போரின் ஒரு நெறியாகப் பகைவரைத் திசை திருப்ப, மாயாசீதை, மாயா சனகன் வதைபோன்றவற்றைக் காட்டி வெல்ல முயலுகின்றனர் (ப:11,73).

இயற்கை இறந்த செய்திகளாக கருடன் வருகை, மருத்துவமலையைக் கொணர்தல், தயரதன் வானில் தோன்றல், இராமனுக்குத் தேர் அளித்தல் புட்பக விமானம் வருதல் முதலியன கதையில் ஆங்காங்கே இடம் பெறுகின்றன.

இங்ஙனம், இராமசரிதம் வழி இராமாயணப் போர் நெறிகளைக் காணமுடிகிறது.

5.3 ஆய்வு முடிவுரை:

1) போர்த் தொடக்கத்தில், இலங்கையை முற்றுகையிட்டு அகழியைத் தூர்த்த பின், வடக்குவாயிலில் இந்திரசித்து அங்கதனைத் தாக்குகிறான். கம்பனில் சுக்கிரீவன் வச்சிரமுட்டியைத் தாக்குகிறான்.

2) கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்குவாயில் காவல், கம்பனைவிட சீராமகவியில் மாறுபடுகிறது. இயல் நான்கில் அட்டவணைப்படுத்தி இவை சுட்டப் பட்டுள்ளன.

3) போர் நெறியில், இலங்கைவாயிலில் முதலில் வானர அரக்க வீரர்களும், பின்னர் தலைவர்களும் போரில் பங்குபெறும் பான்மையை இரு ஆசிரியர்களும் போற்றுகின்றனர்.

4) முதல் நாள் போரிலேயே இந்திரசித்து மாயையால் பிரமாத்திரம் விடுகிறான். கம்பனில் இது பின்னர் இடம்பெறுகிறது.

5) சீராமகவி, மற்போருக்குக் கம்பனைப் போல வாய்ப்பளிக்கவில்லை.

6) தூது விடுவதில், இரு கவிஞர்களும் ஒரே நெறியைப் பின் பற்றுகின்றனர்.

7) "சகுனங்கள்" சீராமனில் அரக்க வீரர்களுக்கு போர்த்தலைமை ஏற்கும் பாத்திரங்களுக்கும் நிகழ்கின்றன. கம்பனில் தலைமைப் பாத்திரங்களுக்கு மட்டுமே நிகழ்கின்றன.

8) தமிழ்ப் போர் மரபுப்படியுள்ளப் புறத்திணைத் துறைகளோ, பூச்சூடல் போன்ற நிகழ்ச்சிகளோ சீராமனில் இல்லை.

9) அரக்கர், வானரர் – படைவீரர்கள் கையாளும் கருவிகள் பெரும்பாலும் ஒன்றாகவே அமைகின்றன.

10) படைத்துணைக்குச் செல்லும் வீரர்கள் படைத்தலைவர்களை வணங்கி ஆணைபெற்றே செல்லும் நெறி, போர் நிகழ்ச்சிகள் முழுவதிலும் இடம்பெறுகிறது.

11) பகலும் இரவும் போர் நிகழ்ந்ததாக இரு நூற்களும் கூறுகின்றன.

12) ஒப்பாரோடு போர் செய்யும் நெறி இருபடையிலும் போற்றப்படுகிறது.

13) போர் தொடங்கும் முன்னும், போரிடையேயும் வீரவுரை பகர்தல், வஞ்சினம் கூறல், முதலியன நெறிகளாகக் கொள்ளப்படுகின்றன.

14) கம்பனிலும், சீராமனிலும் தனிப்போர் நெறியும் கூட்டுப் போர்நெறியும் இடம்பெறுகின்றன.

15) அரக்கர்கள் மாயப்போர் செய்யும் முறை, இரு நூலிலும் இடம்பெறுகிறது.

16) நால்வகைப் படையுடன், கழுதை, ஒட்டகம், சிங்கம் முதலிய படைகளும் இடம்பெறுகின்றன. சீராமனில் ஒற்றுச்செய்தி ஆங்காங்கே வருகிறது.

17) அத்திரங்கள், கம்பன்-சீராமனில் ஒன்றுபோலவே அமையினும், கம்பன் தற்பவப்படுத்தியும், சீராமன் மூலநூலைத்தழுவியும் பெயர்களைத் தருகின்றனர்.

18) இயற்கையிறந்த போர் நிகழ்ச்சிகள் இரு நூற்களிலும் இடம்பெறுகின்றன.

19) ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு தலைவரே போரை நடத்திச் செல்லுகின்றனர்.

20) போர் முறைவைப்பில் சீராமகவி மூலநூலைப் பின்தொடர, கம்பன் வகைதொகை செய்து வளப்படுத்துவார்.

21) போரிட்டுச் சோர்வுற்ற காலத்தே, தளர்ந்தோரை ஊக்க மூட்டலும், வெற்றிபெற்றகாலைக் களியாட்டலும் நிகழ்கின்றன.

22) போர்க்கள நிகழ்ச்சிகளாக ஆர்ப்பரித்தல், அணிவகுப்பு கீதம் இசைத்தல், சங்கம் முழங்கல், முரசறைதல் முதலியன இருநூற்களிலும் இடம்பெறுகின்றன.

23) படைகளின் எண்ணிக்கை இயற்கையிறந்த செய்திகளாகவே இரு நூற்களிலும் அமைகின்றன.

24) வெற்றிக்காரணமாக வீரர்களைப் பாராட்டல், முகமன் கூறிப்பரிசுகள் தருதல் முதலியன கம்பனில் ஏற்றம் பெறுகின்றன.

25) போரைத்தடுக்க, இராமனும் வீடணனும் கூறும் அறிவுரைகள் கம்பனில் மிகுதியாக இடம்பெறுகின்றன.

26) கம்பனில் சக்கரவியூகம், கிரவுஞ்சவியூகம் இடம்பெறச், சீராமனில் இவை இல்லை.

பொதுவாகக் கம்பனும் சீராமகவியும் படைகள், படை இயல்பு, போர்க்கருவிகள், படையமைப்பு, நிமித்தம் அறிதல், படைப்புறப்பாடு, படை மோதல், களநிகழ்ச்சிகள், வீரரைப் போற்றுதல் - இந்நெறிகளைத் தத்தம் திறனுக்கேற்ப மூலநூலை ஒட்டிச்சில மாற்றங்களுடன், போர்ப்பகுதிகளில் தந்துள்ளனர் எனலாம்.

## படைக்கலங்கள்/அத்திரங்கள் அட்டவணைப்படுத்தல்

### ஒப்பீட்டு அட்டவணை 5

| கம்பன் சிறப்பு | கம்பன், சீராமன் பொது | சீராமன் சிறப்பு |
|---|---|---|
| படைக்கலங்கள்: | வில் | |
| | அம்பு | |
| | வாள் | |
| கிடுகு | வேல் | |
| | மழு | |
| | பாசம் | |
| | தண்டு | |
| | சூலம் | |
| அயில் | தோமரம் | |
| | சக்கரம் | |
| வாலம் | பிண்டிப்பாலம் | |
| | முசலம் | |
| | உலக்கை | |
| | நாஞ்சில் | |
| | குலிகம் | |
| | கேடயம் | |
| முண்டி | ஈட்டி | |
| | கழு | |
| கப்பணம் | கவண்கல் | |
| | பிறைப்பாணம் | |
| கன்னகம் | வளையம் | |
| தோட்டி | முளை | |
| முத்கரம் | மூவிலை வேல் | |
| கொழு | அரம் | |
| | குந்தம் | |

## அடிக்குறிப்புகள்

1. செந்தமிழ் அகராதி, தொகுப்பாசிரியர் ந.சி.கந்தையாபிள்ளை, ப.568.
2. சேந்தன் திவாகரம் - திவாகர முனிவர். ப.10.
3. பிங்கல நிகண்டு, பிங்கல முனிவர், ப.217.
4. பழந்தமிழ் ஆட்சி, ஞா.தேவநேயன், ப.101.
5. Military History pp.2-3 (Operation of War. Volume 4 author unknown).
6. திருக்குறள், திருவள்ளுவர், பொருள்.பா.1.
7. பதிற்றுப்பத்து 51:26
8. கலைக்களஞ்சியம், தொகுதி 6; ப:683.
9. தமிழர் படைத்திறம், ரா.பி.சேதுப்பிள்ளை, ப.62.
10. போரியல் அன்றும் இன்றும், டாக்டர் தங்கக் கந்தசாமி, ப.304.
11. திருக்குறள், திருவள்ளுவர், பொருள், பா.
12. ஆராய்ச்சித் தொகுதி, 'இராமாயணமும் தமிழ் வழக்கும்', மு.இராகவையங்கார், பக்.35-36.
13. காப்பிய நோக்கில் கம்பராமாயணம், டாக்டர் அ.பாண்டுரங்கன், ப.204.

## முடிவுரை

0.0 கம்பராமாயணம் யுத்தகாண்டம் – மலையாள இராமசரிதம் பற்றிய ஒப்பாய்வில் முகவுரை, இராமாயணக்கதைப்போக்கு, யாப்புவடிவங்கள், மக்கட் பெயரும் இடப்பெயரும், போர்த்தலைமைப் பாத்திரங்கள், போர்நெறிகளும் படைக்கலன்களும் ஆகியவை இடம்பெற்றன. முடிவுரையுடன் ஆய்வு நிறைவுறுகிறது. ஆய்வில் கண்ட முடிவுகளும், இத்துறை தொடர்பான எதிர்கால ஆய்வுக்குப் பரிந்துரைகளும் இங்குக் கூறப்படுகின்றன. ஒப்பாய்வின் வாயிலாக அறியப்படும் உண்மைகள் தொகுக்கப்பட்டு, மிகச் சுருக்கமாக இங்குத் தரப்படுகின்றன.

0.1 முகவுரையில், பொருளின் வரையறையுடன், ஒப்பாய்வின் முன்னோடிகளின் பெயர்களும், அவர்களின் ஆய்வில் உருவான நூற்களும், அவற்றில் அமைந்த பொருளும் தரப்பட்டன. இருமொழி இராமாயண ஒப்பீட்டு ஆய்வு பரிணமித்து வரும் திறன் சுட்டப்பட்டது. இவற்றால், ஒத்த க்கியத் தனித்திறன்களை அறியமுடிகிறது. ஒப்பாய்வுச் சிந்தனைக்கு இவ்வாய்வுகள் ஆர்வமூட்டுகின்றன.

0.2 கவிஞனும் காலமும் என்னும் சிற்றாய்வில் கம்பன் காலம் கி.பி.12-ஆம் நூற்றாண்டு என நிறுவப்பட்டது. இவ்வாய்வுக்கு அரணாக விருத்தப்பாவகையின் வளர்ச்சிநிலை, நூலில் அமைந்த சொல் நிலை, கவிஞன் சோழர்களைப் போற்றும் திறன்கள் முதலியன சுட்டப்பெறுகின்றன. தென்னகத்தில் பல்வேறு மொழிகளில் இராமாயணம் பரவிய காலகட்டமும் இதுவெனக்காணமுடிகிறது.

0.3 கம்பன் காலச்சூழல் சோழர்களின் போர் எழுச்சிக்காலமாகும். ஆதலின், கம்பன் போர்த்திறனை வளப்படுத்தும் முகமாகத் தன் நூலைப் படைத்தான். நாட்டின் இயற்கைவளம் கற்பனைத்தேருக்கு வழித்தடமாக அமைந்துள்ளது.

0.4 மலையாள இராமசரித ஆசிரியர் சீராமன், திருவிதாங்கூரை கி.பி.1285-1370 ஆட்சிசெய்த ஆதித்யவர்மா என்பராவர் என்னும் உண்மை மலையாளப் பேராசிரியர்கள் மேற்கொண்ட ஆய்வுகளால் வெளியாகிறது. டாக்டர் கே.எம்.ஜார்ஜ் அவர்களின் மொழியியச் சிந்தனைகளும், நூலின் அந்தாதிப்பாடல் அமைப்பும், சீராமன் கி.பி.12 ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவன் என்னும் கொள்கைக்கு அரண்செய்கின்றன.

0.5 சிதறுண்ட நாட்டை ஒன்றுபடுத்தி ஒரு வல்லரசாக்கக் கி.பி.12 ஆம் நூற்றாண்டில் வீரமார்த்தாண்ட வர்மா முனைந்தார். மன்னரான நூலாசிரியரும் சாதாரண மக்களிடையே போர் உணர்வைத்தூண்டுவதற்காக இராமாயணப்போர் நிகழ்ச்சிகளை மட்டும் பாடியருளினார். கருத்துக்களைச் சுருக்கி உரைக்கப் பெருமாள் திருமொழி நூலமைப்பையும், நினைவுகூர்ந்து மனப்பாடமாகப் படிப்பதற்காக அந்தாதிப்பாடல்களாலும் இராமசரிதம் படைக்கப்பட்டது.

0.6 இராமகதை அமைப்பும் போக்கும் என்னும் முதல் இயலில் இராமகதை நெடுங்காலமாகப் பரதகண்டம் முழுவதும் வழங்கிவரும் பான்மையும், தமிழகத்திலும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இக்கதை பரந்துள்ளமையும் விளக்கமுறுகின்றன. கம்பனுக்கு முன் தமிழில் சில இராமாயண நூற்கள் இருப்பினும், கம்பன் வால்மீகியைப் பின்பற்றி தமிழ்நாட்டிற்கு ஒவ்வ இராமவதாரத்தைப் படைத்தான். கம்பன் தன் இராமாயணத்தை மலையாளக்கரையிலும் பரப்பினான். கம்பனுக்குப் பின் தென்னிந்திய மொழிகளில் சிறந்த இராமாயணங்கள் தோன்றின.

0.7 வால்மீகி இராமாயணம், கம்பராமாயணம் போர்ப்பகுதிகள், இராம சரிதம் - ஆகியவற்றின் கதைச்சுருக்கம் ஒப்பாய்வுக்கு முன்னோடிகளாகத் தரப்பட்டுள்ளன. ஒப்புநோக்குதற்கு உதவிடும் வகையில் இவை சுருக்கியுரைக்கப்

பட்டன. மூன்று நூற்களும் ஒப்பிடப்பட்டு மாறுபடும் இடங்கள் தரப்படுகின்றன. ஒப்பாய்வில் வெளியான உண்மைகளின் சுருக்கம் வருமாறு.

1) வால்மீகி, சீராமகவி தரும் போர்ப் பகுதியில் முதல் கம்பனின் சுந்தரகாண்டப் பிற்பகுதியாக அமைகிறது

2) கம்பனின் பாயிர அமைப்பையொட்டி சீராமகவியும் பாயிரம் படைக்கிறான். ஆனால், கம்பன் கடவுளரைப் பொதுவாகச் சுட்ட, சீராமன் பலராகச்சுட்டுவான்.

3) கம்பன், சீராமன் – இருவரும் வால்மீகியின் யுத்தகாண்ட நிகழ்ச்சிகளைத் தொகுத்தும் விரித்தும், நீக்கியும் மாற்றியும், கதைப்போக்குக்கு ஊறுவராதபடிப் படைத்துள்ளனர்.

4) கம்பனும் சீராமனும் கதைச்சூழல்கள், காலம், இடம் இவற்றைச் சில இடங்களில் மாற்றுகின்றனர். கதைமாந்தர் செயல்களும் சில இடங்களில் மாறுபடுகின்றன.

5) இரு கவிஞர்களும் இராமபிரானை அவதாரமாகவே போற்றுகின்றனர்.

6) கம்பன் கருத்தின் சில சாயல் சீராமகவியிடம் காணப்படுகிறது.

7) சீராமகவி, அனுமன் பரதனுக்குக் கூறும் சித்திரகூட நிகழ்ச்சிகளைக் கூறும் பான்மை, ஒரு மீள் பார்வையாக அமைந்துள்ளது. இது சீராமனின் சிறப்பாகும்.

8) முடிசூட்டு விழாவில் நாரதன் வாழ்த்துரை, சீராமகவிக்கு ஏற்றத்தைத் தருகிறது.

9) கம்பன் போரை மிகவும் நீட்டமாகத் தரச், சீராமன் சுருக்கித் தருகிறான்.

10) வால்மீகியைப் பெரிதும் பின்பற்றுபவன் சீராமகவியே. கம்பன் தன் தனித்திறனை வெளிப்படுத்துகிறான்.

0.8 'யாப்பமைதி' என்னும் இரண்டாம் இயலில் கம்பராமாயணம் யுத்தகாண்டம், இராமசரிதம் இவற்றின் யாப்பமைதி ஆராயப்பட்டன. கம்பனும் சீராமனும் இராமகதையைப் பாடுவதற்கு விருத்தவகைகளையே கருவியாகக் கொண்டனர். அவற்றில் வெளிப்படும் உண்மைகளாவன:

1) கம்பராமாயணம் யுத்தகாண்டம் 4358 விருத்தப்பாக்களையும், இராமசரிதம் 1814 விருத்தப்பாக்களையும் கொண்டது.

2) கம்பன், வஞ்சிவிருத்தம், கலிவிருத்தம், கலித்துறை, அறுசீர் ஆசிரிய விருத்தம், எழுசீர் ஆசிரியவிருத்தம் ஆகியவற்றைக் கையாளுகிறான். கம்பனில் கலிவிருத்தம் மிகுதியாக இடம் பெறுகிறது. சீராமன் கலிவிருத்தம், அறுசீர் ஆசிரியவிருத்தம் எழுசீர், எண் சீர், பதின்சீர் விருத்தங்களைக் கையாளுகிறான். சீராமனில் அறுசீர் விருத்தம் மிகுதியாக இடம் பெறுகிறது.

3) கவிஞர்கள் தம் உணர்வு, பாத்திரப்பேச்சு, பொருள் - இவற்றிற்கேற்ப விருத்தங்களில் அமைப்பை ஆங்காங்கே மாற்றுகின்றனர். சீராமன் ஒவ்வொரு படலத்திற்கும் ஒரேவிருத்த அமைப்பைக் கையாளுகிறான்; கம்பன் ஆங்காங்கே மாற்றுகிறான்.

0.9 இயல் மூன்றில் கம்ப இராமாயணம் - இராமசரிதம் இவற்றில் அமைந்த, மக்கட்பெயர் இடப்பெயர் ஆய்வின் உண்மைகளாவன:

1) தொல்காப்பியம், நன்னூல், அகராதிகள், நிகண்டுகள், கலைக் களஞ்சியங்கள் முதலியன மக்கள் பெயர் இடப்பெயராய்வுக்கு முன்னோடிகளாக அமைகின்றன.

2) சொற்கள் தனித்தோ இணைந்தோ மக்கட்பெயராகவோ இடப் பெயராகவோ அமைகின்றன. அவற்றை மொழியடிப்படையில் தனிப்பெயரென்றும் கூட்டுப்பெயர் என்றும் கொள்ளலாம்.

3) வடமொழிச் செல்வாக்கால் கம்பனில் பெயர்கள் தமிழாக்கப் பட்டும், சீராமனில் வடமொழியும் தன்மொழியுமாகக் கலந்தும் அமைகின்றன.

4) கம்பன் பெயரமைதியில் தமிழ் இலக்கண வழக்கைப் பின்பற்ற, சீராமகவி சமூக – வட்டார வழக்கைப் போற்றுகிறான்.

5) இராமசரிதத்தில் பெயர்களின் எண்ணிக்கையில் முன்னொட்டாகவேனும் பின்னொட்டாகவேனும் அமைந்து மிகைப்படக் காணப்படுகிறது. கம்பராமாயணத்தில் குறைவாகவே அமைந்துள்ளது. அட்டவணை இவற்றை விளக்குகிறது.

0.10 போர்த்தலைமைப் பாத்திரங்களால் சில உண்மைகள் வெளியாகின்றன. பாத்திரங்களின் தலைமைப்பண்பு அவற்றின் மனம் மொழிமெய்களால் அமைகிறது. உயிர்நிலைப் பாத்திரங்களாக இராமன், இலக்குவன், வீடணன், அனுமன் ஆகிய அறநிலை போற்றுவோரும், இராவணன், கும்பகருணன், அதிகாயன், இந்திரசித்து ஆகிய மறநிலை ஒழுகுவோரும் இங்குத்தரப்பட்டு ஆராயப்பட்டன. கம்பனும் சீராமகவியும் பொதுவாக ஒன்றாகவும், சிறப்பாக தத்தம் தனித்திறன்களுக் கேற்பவும் பாத்திரங்களைப் படைக்கின்றனர்.

1) கம்பன் படைக்கும் இராமன், தன்னேரில்லாத தலைவன்; வீரர்களுக்குள் வீரன்; அவன்பரம்பொருளாயினும் மனிதனாக நடந்துகொள்ளுகிறான். பகைப்புலமிருந்து வந்து வீடணனை அடைக்கலமாக ஏற்கிறான். சேதுபந்தனத்தை மூன்றே நாட்களில் முடிக்கிறான். சுக்கிரீவன்பால், பேரன்புடையவன் என்பது 'உன்னிய கருமம் எல்லாம் உன்னோடு முடிந்தது' என்னும் தொடரால் விளக்கமாகிறது. தும்பைசூடி போர் மேற்செல்லும் இராமன், முதல்போரில் தோற்ற இராவணனை, 'இன்று போய் போர்க்கு நாளை வா' என்ற அருட்திறத்தால் பகைவரைப் பொறுக்கும் பெற்றியனாக விளங்குகிறான். இலக்குவன் போரில் மூர்ச்சித்த காலை இராமன், 'தமையனான நான், தம்பிமாள இனி நான் வாழேன், உன்னுடன் வந்தேன்' என அரற்றுகின்றான். மனிதப் பண்புடன் சகோதர பாசத்துக்கு அடிமையாகின்றான்.

பகைப்புலத்து ஒதுங்கும் சாரதிமேல் அம்பெய்யாது அருட்திறனாளராக விளங்குகின்றான். போரில் வீழ்ந்த இராவணனின் புறப்புண்கண்டு, 'தன் வெற்றியும் வீரமும் பழுதுபட்டன' என்று எண்ணி, வீரத்திற்கு எடைபோடுகிறான். போரில் பெற்ற வெற்றியை 'வீடணன் தந்த வெற்றி' என்றே மதிப்பிடுகிறான்.

2) சீராமன் படைக்கும் இராமன், போர்த் தொடக்கத்திலேயே இராவணனிடம், 'எட்டுத்திசைகளில் போய் மறையினும் கடலில் புகுந்து ஒளியினும், முனிவர்க்கும் புலவருக்கும் துன்பமில்லாமல் காக்க, உன் வாழ்வை இத்துடன் முடிக்காமல் விடேன்' எனத் தன் அவதார நோக்கத்தை வஞ்சினமாக வெளியிடுகிறான். போரில் பட்ட விழுப்புண்ணின் சிறப்பைப் "போர்க்களத்தில் மரணமடைவது அழகல்ல; உன் போர்க்காயங்கள் மரணம்வரை நிலைத்து நிற்கும்' எனப் பகைவனுக்கே உணர்த்துகின்றான். வீடணன், தன் தமையன் இராவணன் இறப்புக்கு வருந்தியகாலை, இராமன், 'ஒன்றுகேள் எவர்தான் வாழ்நாள் முழுதும் வாழ்ந்தார்?' என வாழ்க்கை நிலையாமையை உணர்த்துகின்றான். போர் முறைகளை இரு கவிஞர்களும் போர்த்தலைமை ஏற்கும் பாத்திரங்களின் போர்ச் செயல்களால் ஒத்தநிலையில் காட்டிப், , படைப்பாற்றலால் தத்தம் திறன்களைக் காட்டி நிற்பதை அறிய முடிகிறது.

3) இராமனுடன் பிறந்தோருள், கருதியதை முனைந்து முடிப்பதில் இலக்குவன் சிறந்தவன். உணர்ச்சி, அறிவு, தெளிவு, இவற்றால் சிறந்தவன். அண்ணன் சொல்லுக்கு அடிபணிந்து வீடணனுக்கு முடி சூட்டுகிறான். தன்னுடன் பொருதும் இராவணனை 'என் கைவாளிக்கு இலக்கு இவன்' – என வஞ்சினம் கூறுவான். இராவணன் இவன் போர்த்திறமையை, 'வில்லினால் இவன் வெல்லப்படான்' எனப் புகழ்ந்துரைப்பான். இராமனும் இவனது வலிமையை 'எண்ணாயிரங் கோடி இராவணரும், விண் நாடரும் வேறு உலகத்து எவரும் நண்ணாத் தன்மையன்' எனக்கூறுவான். இவ்வாறு இராமனுக்குப் பேரன்பினனாகவும், அறங்காக்கும் பெருவீரனாகவும், கடமையில் சிறந்தோனாகவும் கம்பன் படைத்துக்காட்டுவான்.

4) இராம இலக்குவன் பற்றி 'சுகசாரணன் வாயிலாக, குற்றமற்ற மனத்தினர், இராவணன் அழிவிற்கு வேண்டி வந்துள்ள அரசநாயகர்கள்' என சீராமகவி கூறுவான். இலக்குவன் இராவணனிடம் வில்லேந்தி அம்பெய்துப் போரிடுக; 'அது தான் உத்தமர்க்குமுறு' - என அறிவுறுத்துகிறான். கும்பகருணன் இலக்குவனை 'வீரத்தில் வீரன் நீ, உத்தமன் நீ' எனக்கூறுகிறான். நிகும்பலைப் போரில் இவன் திறன் கண்ட இராமன், 'நீ துணையாக என்னுடனிருக்க இவ்வுலகிலுள்ள எல்லா எதிரிகளையும் நான் வென்றுவிட்டவன் ஆவேன்' எனப் புகழ்ந்துரைக்கின்றான். இவற்றால், கம்பனும் சீராமனும் இலக்குவனைப் படைப்பதில் வெவ்வேறு நிலையில் சிறந்து விளங்குகின்றனர்.

5) இராமகதையில் ஓர் இன்றியமையாத படைப்பு அனுமன் என்னும் பாத்திரம். வலிமைக்கு வரம்பான வாயுவின் மகன் சொல்லின் செல்வன். சுக்கிரீவனின் தொண்டன். வீடணனை அடைக்கலமாக ஏற்பதில் இராமன், 'மாருதிவடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி' எனப்,போரில் முதல் கீர்த்தி முத்திரை பெற்றவன். இராவணனுடன் மற்போர் செய்யும் ஆற்றல் மிக்கவன். கும்பகருணனிடம், 'மலையெடுத்து எறிந்து 'இதனைத்தாங்கினால் அமர்புரியேன்' எனச் சபதம் கூறி அதன்படி நின்றவன். போரில் இடுக்கண் உற்றபோது மருந்துமலையால் அவற்றைப் போக்கியவன். தக்க சமயத்தில் பரதன்முன்தோன்றி உயிர்காத்தவன். முடிசூட்டு விழாவில் அரியணை தாங்கும் பெருமை பெற்ற தொண்டன் - இவ்வாறு கம்பன் அனுமனைப் படைத்துக்காட்டுகிறான்.

6) சீராமன் படைக்கும் அனுமன், சீதையை அடைந்த காலை 'இன்று முதல் துன்பம் அழிந்தது; பதினான்கு உலகும் பயம் நீங்கி வாழும்; இராவணன் உயிரற்று வீழ்ந்தான்' எனக்கூறுவான். வீடணனோ அனுமனை "ஆழ்கடல் தந்தான், போருக்கென வந்தவரின் எமனானான்; இந்திரனும் அஞ்சும் இலங்கையைப் பொடியாக்கினான்; இராவணன் அழிவுக்குத் துணையாக எவரும் வழிபடும் வல்லமையானான்" எனப்புகழ்கிறான். சீதை அனுமனுக்கு முத்துமாலையளித்து, "இராமசரிதம் நிலைத்து நிற்பதற்கு மேலும் மரணமில்லா வாழ்வு உண்டாகுக" என வாழ்த்துகிறாள். இருவர் படைப்பும் அனுமனுக்குப் பல நிலைகளில் ஏற்றத்தைத் தருகிறது.

7) இராவணன் உடன்பிறந்தோரில் அறநிலைபோற்றும் பாத்திரப் படைப்பு வீடணனை. இராமனிடம் அடைக்கலம் புகுந்த வீடணன், இலங்கைக்கு வேந்தனாகிறான். இலங்கைப்போரில் வெற்றிக்கு வழிகோலிய இவன், தன் அண்ணனை "அழிவு எய்துவான் அறிவு நீங்கினான்" எனக்கூறுகிறான். மேலும், "புன்தொழில் இராவணன், அழுகிற்றே; கொற்றவர்க்கு உற்றது" என்றும் கூறுவான். வீடணன் கும்பகருணனை தன்மையை 'மாளவது மெய் என்று துணிந்தே போர்க்களம் வந்துள்ளான்' என்பான். இலக்குவன் - அதிகாயன் போரின் நிலைகண்ட வீடணன், 'இந்திரசித்தும் இறப்பது உறுதியே' என எண்ணுகிறான். வீடணன், இலக்குவன், அனுமன், சாம்பவன் முதலியோருக்கு வழிகாட்டும் நல்லோனாக விளங்குகிறான். தன் அண்ணன் இறந்தபோது, "தெய்வ கற்பின் பேர்களைத் தழுவுவான் உயிர்கொடுத்துப்பழி கொண்ட பித்தா! பின்னைப் பார்மகளைத் தழுவினையோ?" என அவன் செயலுக்குக் கழிவிரக்கம் கொள்ளுகிறான். இராமன் முடிசூட்டுவிழாவில் பங்குபெற்று விடைபெறும் வீடணன் "சராசரம் சுமந்த சால்பின் பின்னையே ஒப்பார் நின்னை அலது இலர்" எனப்புகழாரம் சூடி நிற்கின்றான். இவ்வாறு கம்பன் வீடணனை அற வாழ்க்கையைத் துவக்கம் முதல் இறுதிவரை ஒரே பெற்றியாகப் படைத்துக்காட்டுகிறான்

8) சீராமகவி படைக்கும் வீடணன், இராவணனை மந்திர ஆலோசனையில், 'இராமன் வலியன், சீதையைக் கொடுப்பதே நன்மை' எனக்கூறுகிறான். பகைப்புலத்தை வீடணன் ஒவ்வொரு போரிலும் விரித்துக்கூறுவான். மாயாசீதை பற்றி ஆய்ந்த வீடணன், 'அரும்பெருஞ்செயல்களில் தர்மத்தைப் பின்பற்றி நடந்தால் துன்பமே வராது; இது ஞானிகள் கூற்று; சீதைபற்றிய சொல் பொய், தர்மமே நல்லது; அதுவெல்லும்' எனக்கூறுவான். இந்திரசித்து மறம்போற்றும் மாண்பினனாக வீடணனை 'எதிரிகளுக்கு உளவு சொல்ல உதவினாய்' எனப் பழித்துரைப்பான். வீடணன், 'அவனிடம்' சதியால் அறிவுகெட்டு அலைவது ஒரு நாளும் உத்தமருக்குப் பொருத்தமானது இல்லை', எனப் பதிலுரைப்பான். இரு கவிஞர்களும் வீடணன் படைப்பில் ஒரே நெறியையே பின் பற்றுகின்றனர்.

9) எதிர் நிலைப்பாத்திரங்களுள், இராவணன் முதலிடத்தைப் பெறுபவன். அவன் தவமும் பக்தியும் ஆண்மையும் ஆட்சித்திறனும் பேராற்றலும்

உடையவன். வலிமைமிகு கும்பகருணனைத் தம்பியாகப் பெற்றவன். இந்திரசித்து, அதிகாயன் மற்று மூவரையும் மக்களாகப் பெற்று மறவாழ்க்கை மேற்கொள்ளுபவன். மந்திராலோசனையில் வீடணன் அறவுரையைத் துச்சமாக மதித்துப் போர்தொடுத்தவன். முதல் நாள் போரில் இராமனிடம் தோற்று வெறுங்கையனாக மீண்டவன். "என்னையே நோக்கி யான் நெடும்படை தேடிக்கொண்டேன்" எனத் தன் மகனிடம் கூறியவன். இந்திரசித்தன் இறந்தபோது "எனக்கு நீ செய்யத் தக்க கடன்களெல்லாம் யேங்கி யேங்கி உனக்கு நான் செய்வதானேன்" என்று பேசுபவன். இந்த அழிவு சீதையால் விளைந்தது எனக்கருதுபவன். இராமன் 'பரம்பொருள்' என்று உணர்ந்த காலத்தும் மானம் ஒன்றையே கருதி, போர்தொடுத்துத் தன் சுற்றத்தோடு அழிந்தவன். இவ்வாறு பலபடக் கம்பன் அவல வீரனாக இராவணனைப் படைத்துக்காட்டுவான். பெருவீரமும் பேராற்றலும் உடையவனாயினும் தன்முனைப்பே மிக்கோங்க அழிந்து படும் இராவணனது பாத்திரப்படைப்பு இணையற்றதாக விளங்குகிறது.

10) அறம்பேசிய வீடணனை இகழ்ந்த இராவணன், "நீ எனக்குத் தம்பியாய் இருந்தாய்; இந்த உறவு மூலம் இனியும் பேசமுடியாது' என எச்சரிக்கிறான். வீடணன், இவனை இராமனுக்கு அறிமுகப்படுத்தும்பொழுது "உதயசூரியனுக்குச் சமமானவன், சிவனுக்கு அன்பன்; வாரணப்பறகள், வெண்ணிறஎகிறன், சிங்கச் சின்னத்தைத் தேரில் அணிந்தவன், பெருவீரன்", எனக்கூறுவான். இந்திரசித்து இறந்தபோதுற்ற அவலத்தில், 'முன்பு இலங்கை நகரில் துன்பம் சூழ்ந்ததாக நான் அறிந்ததே இல்லை?' — என இராவணன் கூறி வருந்துவான். இவன் இறப்பில் வருந்திய வீடணன், பிறப்பு இறப்பு பற்றிய தத்துவத்தை இராமன்வழி அறிகிறான். இவ்வாறு இராவணனின் தனித்திறன் சீராமனால் உணர்த்தப்பெறுகிறது.

11) இராவணன் உடன் பிறந்தோர்களுள் கும்பகருணன் ஒருவன். ஓங்கி உலகளந்த உத்தமனுக்கு இணையான உருவமுடையவன். இராமனுக்கு வில்போல, கும்பகருணனுக்குச் சூலமே போர்க்கருவியாகப்பயன்படுகிறது. இலங்கை வேந்தன் தவறிழைத்தபோது, தவறினைச் சுட்டிக்காட்டி நெறிப்படுத்த முயன்றவன், செஞ்சோற்றுக்கடன் கழிப்பதையே வாழ்வின் நோக்கமாகக்கொண்டு உயிர்த்தியாகம் செய்தவன்.

"ஆனதோ வெஞ்சமர்? அலகில் கற்புடை சானகி துயர் இனந்தவிர்ந்த தில்லையோ?" எனமொழிந்த கும்பகருணன், "வென்றி இவண் வருவேன் என்று உரைக்கிலேன் விதி நின்றது; பிடர்பிடித்து உந்தநின்றது" எனக்கூறிப், போர்மேல் செல்கிறான். தன்னை அழைத்த வீடணனை "நீர்க்கோல வாழ்வை நச்சிவாழேன்" எனப்போர்க்கோலம் பூண்டு போர்செய்கிறான். இராமன் இவனை, "ஐயன்விற்றொழிற்கு ஆயிரம் இராமன் அமைவிலர்" என வியந்துரைப்பான். இராவணனிடமிருந்து 'தன் தம்பி வீடணனைக் காக்குமாறுவேண்டி' போர்க்களத்தில் நெடும்போர் செய்து உயிர்துறக்கிறான். கம்பன், கும்பகருணனை இராமகதையில் தன்னேரில்லாத தலைவனாகப் படைத்துக்காட்டுவான்.

12) சீராமகவி படைக்கும் கும்பகருணன் படுக்கையிலிருந்து எழும் பொழுதே நமக்குத் தீங்குசெய்தவர் எவர்? அசுரரோ? தேவரோ? என வினவுவான். போர்க்களம் செல்லும் அவன், "இராம இலக்குவரும் வானரரும் உனக்கு உணவாவர்; சீதைக்கு உன்மீது அன்புவரும்; விரைவில் உன்னைச்சரணடைவான்" எனக் கூறுகிறான். பின்னர் நியாயமாக, "நல்லவர் தீது செய்யார் ; இராமனோடு போர்வேண்டாம்; தீங்குவரும் முன்பே சீதையை இராமனிடம் கொடுத்துவிடுக" என அறிவுரை கூறுவான். மாருதி , இலக்குவன், இராமன் முதலியோர்களுடன் போர் செய்து புரந்திராத்திரத்தால் அழிந்துபடுகிறான். கம்பனும் சீராமனும் கும்பகருணன் பாத்திரப் படைப்பில் ஒரே நெறியையே பின்பற்றுகின்றனர்.

13) மிகப்பெரிய உடம்பை உடைய அதிகாயன் இராவணன் மைந்தருள் ஒருவன். இந்திரனையும் வெல்லக்கூடிய ஆற்றல் பெற்றவன். மறப் போர் செய்பவன். தன் தந்தையிடம் "உன் தம்பியைக் கொன்றவனை தம்பியைக் கொன்று துயர் துடைப்பேன்" எனப்படை மேல் செல்வான். இலக்குவனுடன் தனிப்போர் செய்து உயிர் துறக்கிறான். அதிகாயனை போர்நெறி, மறனிழுக்கா மாண்பு, வஞ்சினம், போர்நெறி – இவற்றால் கம்பன் இவனை ஒரு வெந்திறல் வீரனாகப் படைத்துக் காட்டுகிறான்.

14) சீராமன் அதிகாயனை இராவணன் மக்கள் திரிசிரசு, நராந்தகன், தேவாந்தகன் போன்ற ஒருவனாகவே படைத்துள்ளார். இலக்குவனிடம் அதிகாயன் செய்யும் போர் மறப்போராகவே இராமசரிதத்திலும் இடம்பெறுகிறது. இரு கவிஞர்களும் மூலநூலையே பின்பற்றுகின்றனர்.

15) கம்பன் படைப்புகளில் இந்தரசித்து ஒப்புயர்வற்றவன். வீரமும் சகோதரபாசமும் மிக்கவன். "வீரத்தே நின்ற வீரன்; வீரருள் வீரன்" எனக் கம்பன் இவனைப்புகழ்வான். தம்பி அதிகாயன் இறந்தபோது தந்தையிடம், "கொன்றார் அவரோ? கொலை சூழ்க என நீ கொடுத்தாய்" எனக்குமுறுவான். "எம்பியைக் கொன்றவனைக் கொல்லாது வரேன்" என வஞ்சினம் கூறிப் போர்க்களம் செல்லுகிறான். நாகபாசம், பிரமாத்திரப் போர்களில் மாயைபல செய்கிறான். போர்க்களத்தில் இராவணனிடம் "அம்பினால் உடல் குறைந்த கும்பகருணன் அல்லன் நான்; இராவணன் மகன்" எனச் சூளுரைக்கிறான். நிகும்பலையில் இலக்குவனுக்கும் இந்திர சித்துக்கும் நடக்கும் போரின் சிறப்பைக் கம்பன் விரித்துரைப்பான். இலக்குவன் பிறைமுக அம்பால் இந்திரசித்து அழிகின்றான். இராவணன் மண்டோதரி இவர்களின் அவலம் இந்திரசித்தின்பால் இரக்க உணர்வைப் பெறச்செய்கிறது. மறம் சுமந்த உடல், அறம் தெரிந்தும் மாய்ந்து போகிறது. கம்பன் பேரிரக்கத்திற்குரியவனாக இவனைப்படைத்த பான்மையைக் காண முடிகிறது.

16) சீராமன் படைக்கும் இந்திரசித்து தன் சகோதரர்கள் நால்வர் இறந்துபடவே, "இராமலக்குவனை அம்பால் எய்து, வானர வீரர்களைக் கொன்றொழிப்பேன்" என வஞ்சினம் கூறிப்போர் செய்கிறான். மாயப்போர் உடற்றும் இவன் செயல்கண்டு இராமன், "இங்கினி நம்மால் ஒன்றும் செய்வதற்கில்லை" எனக்கூறித் தளர்கிறான், வீடணனை, "எதிரிகளுக்கு உளவுகூறும் நீ அழிவாய்" எனச் சபிக்கிறான். இலக்குவன் ஐந்தாத்திரத்தால் இந்திரசித்து அழிகிறான். அரக்க மாதரும் மண்டோதரியும் இவன் வீரவரலாற்றைக் கூறிப்புலம்புகின்றனர். இராவணன் அழுது அரற்றுவான். சீராமகவி கம்பனிலிருந்து சிறிது மாறுபட்டு இவ்வீரனைப் படைத்துக்காட்டுவான்.

0.11 கம்பன், சீராமகவி ஆகியோர் போர்நெறிச் செய்திகளாகப் பல தந்து அக்கால மக்கள் வாழ்வின் அற மற மனப்பாங்கினைச் சுட்டிக்காட்டி, வருங்கால மக்களுக்கு வழிகாட்டுகின்றனர். யுத்தகாண்டப் போர்நிகழ்ச்சிகள் அக்காலப் போர்நெறிகளையும் படைக்கலங்களையும் பற்றிய சில உண்மைகளைத் தருகின்றன. அவையாவன:

1) போர்கள் தனிப்போராகவோ கூட்டப் போராகவோ நிகழ்கின்றன. சுக்கிரீவன் இராவணன் மற்போரைத் தனிப் போராகக் கொள்ளலாம். போர் நிகழ்ச்சிகளுக்கிடையே நிகழும் அங்கதன் -இந்திரசித்து, நீலன் -நிகும்பன் போன்ற போரும் இதில் அடங்கும். இராவணன், அனுமன், இலக்குவன் இராமன் ஆகியோர் உடற்றும் போர்க், கூட்டுப்போராகக் கொள்ளப்பட்டது.

2) போருக்கு முன் மந்திராலோசனை, தூது முதலியன நடைபெறுகின்றன. இராவணன் மந்திராலோசனையும், அங்கதன் தூதும் இதற்குச்சான்றாகும்.

3) ஒப்பார் இருவர் எதிர்த்துப் போர் செய்யும் நெறி பேணப்பட்டது. இராமசரிதத்தில், விரூபாக்கன் இலக்குவனோடு போர் செய்வதற்கு மறுக்கிறான். போரில் தோற்ற இராவணனை, "இன்று போய் நாளை வா" என இராமன் கூறுகின்றான். இச்செய்தியை இருவரும் தருகின்றனர்.

4) போரில் வானரப்படை கல், மலை, மரம் இவற்றைப் படைக்கலன்களாகக் கொள்ள, அசுரப்படை, வில், அம்பு, சத்தி, வேல், மழு, சூலம் – போன்றவற்றைப் படைக்கலங்களாகக் கொள்ளுகிறது.

5) கம்பரும் சீராமகவியும் போர்க்களக் காட்சிகளை அமைப்பதில் சிலநெறிகளைக் கையாளுகின்றனர். படைவீரர்கள் ஒருவரோடு ஒருவர் கைகலந்து போரினைத் தொடங்குகின்றனர். அதனைத் தொடர்ந்து, சிறுபடைத்தலைவர்கள் முன்னணிக்கு வந்து போரிடுகின்றனர். இந்நெறியில் முதல்போர், கும்பகருணன்போர் அமைந்தமை எடுத்துக்காட்டுகளாகச் சுட்டப்பெற்றுள்ளன.

6) படைகளும் படைகளும் முதலில் கைகலந்து போரினைத் தொடங்கும். படைகள் அழிந்ததும் இரு தரப்பிலுமுள்ள தலைவர்கள் ஒருவரையொருவர் எதிர்த்துப் போர் செய்கின்றனர். இந்நெறியில் அனுமனுடன் இந்திரசித்து செய்யும் போரும், வேலேற்ற பகுதியில், இலக்குவனும் இராவணனும் உடற்றும் போரும் எடுத்துக்காட்டு களாகத் தரப்பட்டுள்ளன.

7) படைவீரர்கள் தங்களுள் போரிட்டு மடிவதைத்தொடர்ந்து, படைத்தலைவரே எதிரிகளைத் தாக்கவருகின்றனர். ஒரு பக்கத் தலைவர் கொல்லப்படின், அவருக்குத்துணையாக வந்த சிறுதலைவர்கள் போரைத் தொடர்ந்து நடத்துகின்றனர். இலக்குவன் அதிகாயனோடு நடத்திய போரிலும், இந்திரசித்து மேற்கொண்ட பிரமாத்திரப் போரிலும் இந்நெறி போற்றப்பட்டது.

8) ஒத்த நிலையில் உள்ள சிறுபடைத்தலைவர்கள் மட்டுமே, பெருந் தலைவர்களின் துணையின்றி, நடத்தும் நெறிகளும் அமைந்துள்ளன. படைத்தலைவர் வதைப்படலம் இந்நெறியால் ஆனது.

9) போர்த்துவக்கத்திலேயே தலைவனும் தலைவனும் போரிடத் துவங்கும் நெறியும் காணப்படுகிறது. மகரக்கண்ணன் வதை, இந்திரசித்து வதை இந்நெறியால் ஆனதாகும்.

10) புறப்பொருள் மரபான பூச்சூடல், நாழிலாட்டு முதலியன கம்பராமாயணப்போர் நிகழ்ச்சிகளில் இடம்பெறுகின்றன. கும்பகருணன் தும்பை சூடிச்சென்றான். இராவணன் நெடுந்தும்பை சூடினான். மூலபலப்படையைக் கொன்று இராமன் நாழிலாட்டு கிறான். இவை இவற்றிற்கு எடுத்துக்காட்டுகளாகும்.

11) வஞ்சினமுரைத்தல், வீரவாதம் புரிதல் முதலியன போர் நெறிகளும் போற்றப்படுகின்றன. இந்திரசித்து 'இலக்குவனைக் கொல்லாது மீளேன்' என வஞ்சினமுரைக்கிறான். அதிகாயன் அனுமனிடம் வீரவாதம் புரிகின்றான்.

12) பகைவரேயாயினும் போர்த்திறனைப் புகழ்ந்துரைக்கும் நெறியும் காணப்படுகிறது. இலக்குவன் வில்லாற்றலை இராவணன் புகழ்கிறான். இலக்குவனின் வில்லாற்றலை இந்திரசித்தும், அதுபோலவே இந்திரசித்தின் வில்லாற்றலை இலக்குவனும், வியந்து பாராட்டு கின்றனர்.

13) இராக்காலங்களிலும் போர் நடக்கிறது. நாகபாசம், பிரமாத்திரம், இந்திரசித்து வதை ஆகியன மூன்று இரவில் நடக்கின்றன.

14) மீவியல் புனைவாக அத்திரங்கள் இரு காவியங்களிலும் இடம் பெறுகின்றன. கம்பன், அத்திரங்களைப் படை என்றே கூறுகின்றான். சீராமகவி மூலநூலையொட்டி அத்திரங்கள் என்றே கூறுகின்றான்.

15) நிகும்பலையில் காற்றுப்படை, அயன்படை, வருணப்படை, சூரியன்படை, அயன்படை, மாயோன்படை என்பனவற்றை இந்திரசித்து முதலில் ஏவ, இலக்குவன் அவற்றை அதே படைகளால் தடுத்த செய்திகளைக் காணமுடிகிறது.

16) இராவணன் விடுத்த மோகப்படையை நாராயணன் படையாலும், தாமதப்படையைச் சிவன் படையாலும், ஆசுரப்படையை அக்கினிப் படையாலும், மயன்படையைக் காந்தருப்பப்படையாலும், மாயப் படையை ஞானப்படையாலும், நிருதிப்படையைக் காருடப்படையாலும், இராமன் மாற்றி, இராவணன் அத்திரங்களைச் செயலிழக்கச் செய்யும் நிகழ்ச்சி இராவணன் வதையால் அறியமுடிகிறது.

17) அத்திரங்களை விடும்பொழுது அவ்வவ் அத்திரத்திற்குரிய தெய்வங்களை வழிபட்டு மந்திரம் ஓதி வில்லில் தொடுப்பது மரபாகப் போற்றப்படுகிறது. பொதுவாக, அத்திரங்களில் பிரம்மாத்திரம் பேராற்றல் வாய்ந்ததாகக் கூறப்படுகிறது. சிவன் படையும் நாராயணன் படையும் அதனினும் வலிமை மிக்கனவாக உணர்த்தப்படும் இடங்களும் உண்டு.

18) படைத்தலைவர்களால், போரை நடத்தவியலாதபோது தெய்வத்தின் துணை கைகூடுகிறது. இலக்குவனை நாகபாசத்தால் பிணித்தபொழுது இராமன் மயங்கி விழவே, இறையருளால் கலுழன் வருகிறான். அனுமன் மருத்துமலை கொணர்ந்து பிரமன்படையை விடுக்கிறான். பரம்பொருள் உதவும்பான்மை இவற்றால் விளங்குகிறது.

19) போர்க்களத்தில் இசைக்கருவிகளும் இடம்பெறுகின்றன. போர்ப் படை செல்லச் சங்கமும் பறையும் முழங்கப்படுகின்றன. கும்ப கருணனை எழுப்பப் பல்வேறு இசைக்கருவிகள் பயன்படுத்தப்பட்டன. போர் தொடங்கும் முன் சிலர் நாணைத்தெறித்து பேரொலி செய்கின்றனர். இலக்குவனும் இந்திரசித்தும் நாணொலி செய்து போரைத் துவக்குகின்றனர்

ஏறத்தாழ ஒரேகாலக் கவிஞர்களான கம்பன், சீராமன் ஆகிய இருவரும் காப்பியக்கதையை ஓரளவு ஒட்டியும், கவிபுனைவதில் விருத்தப்பாக்களைக் கையாண்டும், மக்கட்பெயர், இடப்பெயரைச் சுருக்கியும் பெருக்கியும், பாத்திரப்படைப்பை வீரமும் பெருமிதமும் தோன்றக் காட்டுகின்றனர். மேலும், தத்தம் தனித்திறன்களை வெளிப்படுத்தியும், போர்நெறிகளையும் படைக்கலங்களையும் மூல நூலை ஒட்டியே படைத்தும், அளிக்கும் திறன் இராமகதைக்கு அந்தந்த மொழிகளில் வழக்காற்றுக்கு ஏற்பச் சிறப்பைத்தருகிறது. நாடு, மொழி, சூழலுக்கேற்ப இருவரும் தம்மை இனம்காட்டிக் கொள்ளுகிறார்கள். காப்பியங்களை ஒப்பிடுவோர்க்கு இவ்வுண்மை தெரியவரும்.

அடுத்துவரும் ஆய்வாளர்களுக்கு

கம்பராமாயணம் - இராமசரிதம் பற்றிய ஒப்பாய்வுச் சிந்தனையில் தோன்றிய ஆய்வுக்குரிய கருத்துக்கள் சிலவற்றைப் பரிந்துரைக்கலாம்..

'யாப்பமைதி' என்னும் பகுதியில் பொதுவாக இரு நூற்களின் பாவமைப்பை வகைதொகை செய்து அதற்கான சில காரணங்களும் காணவியன்றது. அதற்கும் மேலாக, இருநூற்களிலும் அமைந்த பாவண்ணங்களையும், மாறுபடும் திறன்களையும் பாத்திரப்படைப்பு, வருணனை போன்ற நீர்மையால் ஒப்புமைப் படுத்தி ஆய்வு செய்யலாம். மொழியாக்கத்திறனை வளர்க்க இம்மாதிரியான ஆய்வு பயனுறும்.

மக்கட்பெயர், இடப்பெயர் ஆய்வின் வளர்படியாக இரு நூற்களிலும் மொழி நிலையில் தற்சமம்-தற்பவம் ஆட்சியையும் ஆக்கத்தையும் வகைதொகை செய்து ஆய்வு செய்யலாம்.

போர்த்தலைமைப் பாத்திரங்களுக்கு அப்பால், பிற துணைப்பாத்திரங்களையும் இரு காப்பியங்களையும், ஒப்பிட்டு ஆய்வு செய்யலாம்.

மேலும், கீழ்வரும் தலைப்பை அடியொற்றி ஆய்வு செய்வதானால், இரு மொழி இலக்கிய நேர்மையும் கம்பனின் தனிச்சிறப்பையும் பல கோணங்களில் அறிய வாய்ப்பாகும்.

1) படிமப்படைப்பு (symbolism) கம்பனிலும் இராமசரிதத்திலும்
2) காப்பிய நோக்கில் கம்பனும் எழுத்தச்சனும்
3) கம்பராமாயணமும் இராமகதாப்பாட்டும் (மலையாளம்)
'பாட்டும் பொருளும்'

4. 'கம்பராமாயணமும் திக்கணஇராம சரிதமும்' (தெலுங்கு)

5. 'கம்பராமாயணமும் த்விபதி இராமாயணமும்' (தெலுங்கு)

6. 'கம்பராமாயணமும் தோராவே இராமாயணமும்' (கன்னடம்)

7. 'கம்பராமாயணமும் பாகிர இராமாயணமும்' (தெலுங்கு)

---

## துணை நூற்பட்டியல்

1) இலக்கணம்:

1. தொல்காப்பியம், எழுத்து (இளம்பூரணர் உரை) கழக வெளியீடு, சென்னை, 1973.
2. தொல்காப்பியம், சொல் (சேனாவரையர் உரை) கழக வெளியீடு, சென்னை, 1973.
3. தொல்காப்பியம், பொருள் (இளம்பூரணர் உரை) கழக வெளியீடு, சென்னை; 1973.
4. நன்னூல், , - பவானந்தம் பிள்ளை உரையுடன், மாக்மில்லன் அண்டு கம்பெனி, லிட்., சென்னை, 1922.
5. தண்டியலங்காரம், கழக வெளியீடு, திருநெல்வேலி, 1956.
6. யாப்பருங்கலக்காரிகை, கழகவெளியீடு, திருநெல்வேலி, 1952.

2) நிகண்டு நூற்கள்:

1) சேந்தன் திவாகரம், கழகவெளியீடு, திருநெல்வேலி, 1958.
2) பிங்கல நிகண்டு, கழக வெளியீடு, சென்னை, 1968.
3) அபிதான சிந்தாமணி, ஆ.சிங்காரவேலு முதலியார், ஏசியன் எடியுகேஉனல் சர்வீஸ், புதுடெல்லி, 1982.
4) தமிழ்மொழியகராதி, கதிர்வேற்பிள்ளை, பி.வி.நவசிவாய முதலியார் வெளியீடு, சென்னை, 1935.

3) இலக்கியம்:

1) அகநானூறு, ராஜம் எஸ்.(வெ.ர்) மர்ரே அண்டு கம்பெனி, சென்னை, 1958.
2) கலித்தொகை, ராஜம் எஸ்.(வெ.ர்) மர்ரே அண்டு கம்பெனி, சென்னை-1, 1957.
3) நற்றிணை, ராஜம் எஸ்.(வெ.ர்) மர்ரேஅண்டு கம்பெனி, சென்னை-1, 1957.
4) பத்துப்பாட்டு மூலமும் உரையும், (பெரும்பாணாற்றுப்படை) கழக வெளியீடு, சென்னை-1, 1966.
5) பதிற்றுப்பத்து, ராஜம் எஸ்.(வெ.ர்) மர்ரே அண்டு கம்பெனி, சென்னை-1, 1957.
6) புறநானூறு மூலமும் உரையும் - சாமிநாத ஐயர், டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை-41, 1931.

7) சிலப்பதிகாரம், வேங்கடசாமிநாட்டார் உரை,
கழக வெளியீடு, சென்னை-1, 1968.

8) திருக்குறள், பரிமேலழகர் உரையுடன், சக்தி காரியாலயம்,
சென்னை-6, 1957.

<u>சமய இலக்கியங்கள்:</u>

1) தேவாரம், (மூவர்) திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமட
ஆதீனவெளியீடு (மூன்று தொகுதிகள்) 1957

2) நாலாயிரத்திவ்யப்பிரபந்தம், (பெரியதிருமொழி,
பெருமாள்திருமொழி) திருமாலி – ஜேஷஉஷாத்திரி
ஐயங்கார்தொகுப்பு, வை.மு.கோ.வெளியீடு,
திருவல்லிக்கேணி, சென்னை-5, 1943

<u>இதிகாசங்கள்:</u>

<u>தமிழ்:</u>

1) 'ஸ்ரீகம்பராமாயணம்' (பாலகாண்டம், யுத்தகாண்டம் 2
தொகுதிகள்) வை.மு.கோபால கிருஷ்ணமாச்சாரியார்
உரையுடன், வை.மு.கோ.கம்பெனி-
சென்னை-5, 1970, 1971.

2) கம்பராமாயணம், (பாலகாண்டம், மர்ரே எஸ்.இராஜம்
பதிப்பு, , சென்னை, 1958

3) ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம் (தமிழ்) யுத்தகாண்டம்,
சி.ஆர்.ஸ்ரீநிவாசஐயங்கார் (உரைநடை),
லிட்டில் பிளவர் கம்பெனி, 1963.

4) வால்மீகி ராமாயணம் (உரைநடை) கந்தசாமி ஐயர் –
கணேசன் எம்.ஏ. கிரின்பாதம்ஸ், சென்னை-5, 1958

5) 1) இராமசரிதம் தொகுதி, 4 தொகுதிகள் (மலையாளம்)
இளங்குளம் குஞ்சன்பிள்ளை, குறிப்புரைகளுடன்,
நேஷனல் புக் ஸ்டோர், கோட்டயம் - 1962.

6) 2) இராமசரிதம், (மலையாளம்)
பேராசிரியர் பி.வி.கிருஷ்ணன் நாயர் விளக்கங்களுடன்,
கேரளசாகித்ய அக்காதமி, திருச்சூர், 1979.

பிறநூற்கள்:

1) இராசமாணிக்கனார் எம்.,டாக்டர், கம்பன் யார்?
சாந்தி நூலகம், சென்னை-1, 1958.

2) இராசமாணிக்கனார், எஸ்.டாக்டர், சோழர் வரலாறு,தொகுதி-3
எடியுகேஉதனல் புக்சொஸைட்டி, சென்னை, 1947.

3) இராமகிருஉஷ்ணன், எஸ்.டாக்டர், கம்பனும் மில்டனும் - ஒரு
புதிய பார்வை, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை-1,1983,

4) இராமலிங்கம் பிள்ளை,நாமக்கல், கம்பரும் வால்மீகியும், 1956.

5) இளையபெருமாள், மா.டாக்டர். கேரள பாணினீயம் - தமிழாக்கம்,
கேரளப் பல்கலைக்கழக வெளியீடு, 1967.

6) இஸ்மாயில், மு.மு. நீதிபதி, கவிச்சக்கரவர்த்தியும் கவியரசும், 1976.

7) கலைக்களஞ்சியம், தொகுதி-6; தமிழ் வெளியீட்டுக்கழகம்,
சென்னை, 1959.

8) கைலாசபதி க.டாக்டர், ஒப்பியல் இலக்கியம், சென்னை, 1969.

9) சங்கரராசு நாயுடு, எஸ்.கம்பரும் துளசியும், சென்னைப்
பல்கலைக்கழகம், 1973.

10) சாமி சரவணப்பிள்ளை, வால்மீகியும் கம்பரும், விவேகபானு
தொகுதி-2, 'விவேகபானு', சென்னை-17, 1903.

11) சாமிச்சிதம்பரனார், கம்பன் கண்ட தமிழகம், ஸ்டார் பிரசுரம்,
திருவல்லிக் கேணி, சென்னை-5.

12) சேதுப்பிள்ளை, ரா.பி.பேராசிரியர், தமிழர் படைத்திறம்,
பழனியப்பா பிரதர்ஸ், திருச்சி, 1966.

13) சுப்பிரமணிய பாரதியார், மகாகவி பாரதியார் கவிதைகள்,
சக்தி காரியாலயம், சென்னை-6, 1957.

14) தங்கக்கந்தசாமி, டாக்டர், மேஜர். போரியல் அன்றும்
இன்றும், சென்னைப்பல்கலைக்கழகம், சென்னை, 1987.

15) தமிழண்ணல், ஒப்பிலக்கிய அறிமுகம், மீனாட்சிப் புத்தக நிலையம்,
மதுரை, 1974.

16) திரு முருகன், இரா.புலவர் கம்பன்பாடிய வண்ணங்கள்,
வானதி பதிப்பகம், தி.நகர், சென்னை-17, 1987.

17) தேசிக விநாயகம்பிள்ளை, சி.கவிமணி, மலரும் மாலையும்,
பாரி நிலையம், சென்னை, 1954.

18) தேவநேயன் ஞா பழந்தமிழாட்சி கழக வெளியீடு, சென்னை, 1961.

19) நயினார் மா. பெரும்பெருமையும், சோபிதம் பதிப்பக வெளியீடு, நாகர்கோவில், 1982.

20) பொன்னப்பன், பா. பேராசிரியர், தமிழ்ப்பாடஞ்சொல்லும்முறை, பகுதி-1, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியீடு, சென்னை, 1983.

21) மாணிக்க நாயக்கர், பா.வே. கம்பன் புலுரும் வால்மீகி வாய்மையும், நியூ செஞ்சுவரி புக்கவுஸ், வெள்ளை, 1955.

22) வையாபுரிப்பிள்ளை, எஸ். பேராசிரியர், கம்பன் காவியம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-6, 1965.

23) வையாபுரிப்பிள்ளை, எஸ். காவியகாலம், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1985.

24) வையாபுரிப்பிள்ளை, தமிழ்ச்சுடர்மணிகள், பாரி நிலையம், சென்னை, இ.ப., 1952.

25) வையாபுரிப்பிள்ளை, தமிழர் பண்பாடு, தமிழ்ப்புத்தகாலயம், மயிலாப்பூர், சென்னை-5, 1949.

<u>மலையாள நூற்கள்:</u>

1. 'உண்ணிக்கிடாவு' மலையாள பாஷா படனங்கள், மலையாளம் பாஷா சரிதம், லேங்குவேஜ் இன்ஸ்டிடியூட், 1980

2. கிருஷ்ணன் நாயர், பி.வி., பேராசிரியர். இராமசரிதம் ஒரு விமர்சனபடனம், நேஷனல் புக்ஸ்டால், கோட்டயம், 1973.

3. கோவிந்தப்பிள்ளை, மலையாளபாஷா சரிதம், நேஷனல் புக் ஸ்டோர், கோட்டயம், 1980.

4. பரமேசுவர ஐயர் எஸ். உள்ளூர், கேரள சாகித்ய சரிதம், தொகுதி-1, கேரளப் பல்கலைக்கழக வெளியீடு, திருவனந்தபுரம், 1974.

5. லீலாதிலகம், இளங்குளம் குஞ்சன்பிள்ளை குறிப்புகளுடன், நேஷனல் புக் ஸ்டோர், கோட்டையம், 1962.

6. ராஜராஜவர்மா, எ.ஆர். விருத்தமஞ்சரி, நேஷனல் புக் ஸ்டோர், கோட்டையம், 1974.

ஆங்கில நூற்கள்:

1) Aiyer, V.V.S., Kambaramayana A study, Higgin Bothams, Madras-5, 1970.

2) Brigadier Rajendra Sing, Soldiers and Soldiering in India, Army Edl. Stores, Ambanad, Canu:, 1959.

3) Cowell, J.B., The Jataka, Mac-Million co., Madras, 1957.

4) Dakshanyani, K.V.Dr., The Metres in Kambaramayanam, Annamalai University publications, Annamalai Nagar, 1979.

5) Herman Gundert Dr.Rev.D.Ph. Malayalam English Dictionary Navasakthi publications, Trivandrum, 1982.

6) Kamil Bulcke, S.J.M.A.D.Phil./Ramakatha (study) National Book Stall, Kottayam, 1962.

7) Kunhan Raja, C. History of Sanskrit Literature, Madras Sanskrit Academy, Madras, 1958.

இயல் ஒன்று

## பின்னிணைப்பு எண் 1

இராமசரிதம் — சீராமன் (பாடல்கள் தமிழில்)

(மேற்கோளாகச் சுட்டப்பட்ட பாடல்களில் மிக முக்கியமானவை)

### விநாயக வணக்கம்

1) 'காலனைக்கனில் அரன் களிறுமாய கரியனாய்,
கார்நெடும் கன்உம தம்மில் விளையாடி
ஆனைம் வடிவு உள்ள ஆன வடிவாய் அவதரித்த
ஆதியே நல்லவிநாயகன் எனும் ஓர் அமலனே
ஞாலித ஒன்று துணியின்றதின் எம்மானதம் என்னும்
நாளதார் தன்னில் நிரந்தரம் இருந்து அருள், தெளிந்த
ஊனமற்ற அறிவு எனக்குவந்து உதிக்கும் வண்ணமே
ஊழி ஏறிலும் நிறைந்தமற ஞான பொருளே'

(படலம்-1 பாட்டு 1)

### பிரகத்தன் உரை

2) 'அறிவிப்பான் ஞான் ஆவன் அதின்று
அருளிச் செய்யின்றை ஆகில் என்னோடு
அழும்இப்போள் வாணாள் அவர்கள்க்கு
அடல்கிட்டுவோரு நேரம் அல்லால்
பறயப் போரும் நம்மெ எல்லாம்
பவனன் மகன் சசிச்சம என்று
அறியிச்சான் முல்ச் சொல்லியாலும் பிரி
யத்தன் அத்தல் போம் வழியே'

(படலம் 5. பாடல் 1)

### வீடணன் உரை

3) அல்லல் செய்து உலகு அலயிக்கும்
அசுரரெ அறுப்பான் முன்னம்
நல்லதோர் வராகம் ஆனான்
நரசிங்க வடிவம் ஆனான்
சொல்லெழும் குறளாயித் தூய
மழுவேந்தும் முனியும் ஆனான்
மெல்ல நம்குலம் முடிப்பான்
வேந்தனாயிப் பிறந்தான் இப்போள்

(படலம் 7.பாடல் 6)

## சேது அணைகட்டல்

4) 'வளர்கிற ஒருபகல் இருபதிரண்டு, அதின்
வழி மிகுதியும் மறுபகல் மூன்று
உளபின்னே அதிகம் இங்கு இருபதின்மேல்,
உறுதியொடு எழுந்திரு சிறமுமுவன்
தள பிரிஞ்சு இளகின கடல் சதயோ
சனவழி தெருதெள நடபெறுவான்
தரம்எழு எழுந்து அதின்வழி கடந்தார் உபரி
தன்மழ கர அரிகள் எல்லாம்'

(படலம்: 9 பாடல் 10)

## இராவணன் உரை

5) 'அடல்கோவின்றோர் இல்ல நம்மோடு
அதுநில்க்க. காட்டுளடோ சிரவும்
வடிவார் வில்லும் நீவிரஞ்சு' என்று
வழுமுங்கினோரு நேரம் அவன்
உடனே சென்று அம்மின் ஒளி நாவன்
ஒரிக்கம் ஜயமாயம் எல்லாம்
நடுவே வச்சான். மெச்சம் இதுவென்று
நடுங்கி நோக்கினாள் அவளும்"

(படலம்:12. பாடல் 2)

6) ## மேகநாதனின் மாயம்

ஒடுக்குமவன் வாணங்களும் மாயங்களும் மற்று
ஒடுத்து அவனடுத்து அவனொடித்து இனியதேரு
பொடிச் செய்து அலறிப் பொருத வாலி
இடிக்குரலன் மாயயொடு இருட்டிட மறந்தான்

(படலம்:15.பாடல் 7)

7) ## இராம இலக்குவர் மயங்கி வீழ்தல்

கொண்டு உடலில் ஏறின கடுங்கணைகளும் போர்
இன்டல் பெருதாயி இருவரும் புவியில் விண்ணார்
அண்டம் இளகும்படி அரக்கன் அலறக்கேட்டு
எண் திசயும் நோக்கி எழுந்தார் அரிகள் எல்லாம்

(படலம்:15.பாடல் 10)

சுக்கிரீவன் உணர்தல்

8) 'பொழிந்தவன் மெய்யில் எங்கும்
  பூண்டபோது அரிகள் கோமான்
அழிந்த மோகத் தினோடும்
  அரக்கர் கோன் செவி இரண்டும்
செழுந் தடங்கையால் வாங்கித்
  திறம்கொளீ தெந்தங் களாலெ
எழுந்த நாசியும் கூட
  எடுத்துக் கொண்டு எழுச்சமந்தான்'

(34:4)

அதிகாயன் கவசம்

9) மொழியலாம் அதிகாயன் தம்
  முடிவினை அடலிக்கீ காணும்
அழிவு இவச்கவசம் வன்பால்
  ஆக்கின வன்பு அழிந்து
அழிந்ல பெருதாய்மாறு உள்ள
  அத்திரங்களக்கும் என்னால்
அமகொடு தொடு விரிஞ்சன்
  அத்திரம் விரவில் என்னான்

(43:8)

மருத்துமலை பற்றி அனுமன் அறிதல்

10) ஏற்றம் ஒன்று அறிவிக்கின்றேன்
  எங்கிலும் அவிடம் காப்பான்
சீற்றம் ஊன்டுள இரண்டு
  சுகரங்கள் இரண்டு பாடும்
ஏற்றரம் பெயர்கள் வீரா
  வசலிய கரணி ஒன்றோ
மாற்றம் இல்லாத நன்ம
  வளர்ந்த தந்தானி ஒன்றோ

11) தந்தானியாம் மருந்தும்
  தமீரண கரணியும் கை
வெந்தாலும் இருந்த தஞ்சீ
  வனியாம் மருந்தும் பின்னே
வெந்தோரைப் போலும் தோற்றம்
  விசலிய கரணியும் நீ
எந்தாவது இயற்றுவான் என்று
  இது கவி வரன் உரத்தான்

(49:4,5)

## இராவணன் போருக்கு எழுதல்

12) முடியும் இக்கொடிய வானரரும் மானிடங்களும்
    முழுவன் என்களைகளால் எம்மது அரக்கன் மொழிய
படநடத்துவுது எப் பின்னை விருபநயன்ன்
    பலரொடு ஏகினன் மகோதரரும் மன்னன் உரயால்
இடம் உலாவின பிலாவமும் இம்மூவரும் உரத்து
    இகல் முதிர்த்தளவு தேர்மிசெ இலங்க மன்னவன்
வடிவில் ஏறினன் இம்மூவரொடும் அப்பொழுதுவன்
    படயுடே பெரும ஏதும்அளவின்றி வந்ததே'

(78:8)

## இலக்குவன் இராவணனை கொடி அழித்தல்

13) அளவில்லாயும், கோபம் முடுத்திறு
    அரக்கனோடு இலக்கணன்
அளவே செய்வாரின் நகர்வின்
    தல மாண்டிருண்ட தின்கொடிமேல்
ஒளிவார்ந் நம்பால் அழகொடு எய்து
    உலகில் இட்டு தாரதி தன்
களவும் வேறாகிக் களஞ்ஞான்
    கரகௌசலம் கொடுஅம்பு தன்னால்

அம்பால் வன்பால் எழுகொடு எய்து
    அமராரி ஏந்தும் வன்சிலயும்
முன்பால் இட்டான் வேறபெருத்து
    முழங்கினானே ஞான் ஒலியும்
என் போரென்னோ டாவதிவன்
    என் மன்னன் எய்த வாணங்கள் தன்
பின்பே சென்றான் வன்கத ஏந்தி
    விபீஷணன் முதிந்து அதிகம்

(86:4,6)

## இராவணன் வீழ்தல்

14) மற்றொன்றுமா மல்ல இலங்கக்கு அரசன்தன்
    வாணங்களை அறுப்பான் தொடு'பைதாமகம்' ஆம்பேர்
பெற்றத்திரம் என்னால் இனி எனுள்ளது
    வேதித்தோர் என்னே பலதும் மாதிலி சொல்ல
தெற்றென்று தொடுத்தான் அதளடுத்தான் கடல்வெள்ளம்
    திங்கயில் அடக்கிப் பருகும் மாமுனியெக் கொண்டு
உற்றங்கு கொடுக்கென்று கொடுப்பிச் சிருந்நொர் அம்பு
    உம்பர்க்கரன் முன்பில் கரிக்கால் இதின் என்னே!'

(100:4)

## இராமன், சீதையை வைதல்

15) வழிகேடு உள்ளோரில் இன்முன்பு உடையனல்லோ
மடவாரெயும் நிலகுலக்கத் தொழில் என்னால்
அறியாயிது ஒருவரம் உள்ளது நினக்கென்று
அவனொடு போகவிட மார்ச்சொல் அறியாதோர்
வழி நீ முன்னம் துடங்கி வெச்சது இனிநல்ல
பரன் ஆகயால் இனி வீபீஷணனே ஆய்க்கொள்
பிழயாக யில்லரி குலத்தரச னோட
மேவி மென்சொல்லே இருந்து கொள்கில் அது கொண்டும்.

கொண்டா டுநீகவி கள்கோன் தன்னே இலங்கயக்
கோன்தன் னேஜகில் அதம்ஜம் இவரே யல்லென்று
உண்டாகில் ஜண்டுகொள் இலக்கணனே இப்போழ்
ஒதீடு எல்லாம் பரதனோடு அணயிக் கல்ல யாகில்
வண்டார் தழய்க் குழல் தமித்திர தன்மைந்தன்
மார்தம்மில் வாலநின்மனம் செல்கில் அதுவும் கொள்
உண்டோ நினக்குக் கருமம் திரிஞ்ஞ போயமற்று
உள்ளோரே நேடுஇல் அதின்றுநட கொள்ளே.

(113:5,6)

16) இராமர் முடிசூட்டு விழாவில்
இலக்குவன் குடைகவித்தல்

அலங்கரித் தருளினார் குலச்சரம்
அலங்கள் மாலகள் மணம்போய்
மலிந்த தாமங் கவிவும்
மன்னர்கோன் மடந்தயோடும்
வெலங் கிளர் கரங்களாலே
வெண்கொற்றக் குடபிடித்தான்
விளங்கின புகழ் தழய்க்கும்
இலக்கண குமாரன் அன்பால்

(160:7)

17) நாரதர் வாழ்த்து

அவனி அளந்து மூவடியாய்
அகிலம் அளந்த பரஞ்சுடரே
கவிவார் இட்டச் சிறப்புறவே
கருதல ரெக்கொல செய்வதினாய்
உவரி கடந்திகள் கிட்டி நின்று
ஒளிவிரும் முழங்கநாலிணய் வந்து
அவிரதம் என்மனதாரில் அமர்ந்து
அருவின யொக்க அகற்றுகவே

18) அருவினாய் தீர்த்திம யோர் புகன்னோர்
அளவு பிறந்தொரு மானிடமாய்க்
கருதலர் ஆனநி சாசரரைக்
களையிகள் பொருந்து முடித்தகிலம்
திருமகள் ஆகின சீதயொடும்
தெளிவில் அயோத்தி புகுந்து நன்றாய்
உருஅட யென் மனதாரில் உறைந்து
உணர்வெழு மாறு புலம்புகவே

(162:1,2)

19) <u>நூற் பயன்</u>

ஏது நல்லவழி யல்லவென்று மோளங்களறிந்து
ஏவரும் தளருமாறு வரும்வன் பிறவியும்
ஓதயில்க் கிடந்து நீந்துமது ஒழித்துக் கொள்வதீர்
ஒன்றுமில்ல தொழிலேதும் மிகவென்று நினைவாய்
ஆதிதேவனில் அமிந்த மனக்காம்புடய சீராமன்
அன்பினொடு இயம்பின தமிழ்க்கவி வல்லோர்
போதின் மாதின் இடமாபருடன் வீழ்வதிருபின்
போகி போக சயனன் சரணதார் அணையவரே'

(164:11)

## பின்னிணைப்பு எண் 2

## தமிழ் - மலையாள மொழியமைப்பு

### சில கோட்பாடுகள்

தமிழ் மலையாள மொழியமைப்பில் எழுத்து, சொல், தொடர் முதலியவற்றில் ஒலியடிப்படையில் மிகுந்த ஒற்றுமை காணப்படும். சில இடங்களில் தமிழிலிருந்து மலையாளம் வேறுபடுகிறது.

**ஒலிகளில் வேற்றுமை:**

(1) 'ஐ'யில் முடியும் தமிழ்ச் சொற்கள் மலையாளத்தில் பெரும்பாலும் 'அ' ஒலிப்புப்பெற்று முடிகின்றன

எ.டு:

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| சீதை | சீத |
| இலங்கை | இலங்க |
| பச்சை | பச்ச |

(2) 'ஆ'வில் முடியும் தமிழ்ச் சொற்கள், மலையாளத்தில் 'அ'வில் முடிகின்றன

எ.டு:

| தமிழ் | மலையாளம் |
|---|---|
| மாலா | மால |

(3) அ, இ - என்ற சுட்டு வடிவங்களை 'ஆ', 'ஈ' என்று நெடிலாகக் கூறலாம்

எ.டு: அம்மரம் - ஆமரம்
இம்மரம் - ஈமரம்

(4) தமிழிலுள்ள க, ச, ட, த, ப முதலிய எழுத்துக்கள் ஒலிக்கேற்ப மலையாளத்தில் நான்கு விதம் உள்ளன. அவற்றை ஒலிப்பதில் தடுமாற்றம் ஏற்படும்.

எ.டு: பயம், விதவை (bha dha) ஒலிப்பில் இடர்

(5) தமிழில் 'ந' வில் தொடங்கும் சொற்கள் பெரும்பாலும் மலையாளத்தில் 'ஞ' வில் தொடங்கும்

எ.டு:

| தமிழ் | மலையாளம் |
| --- | --- |
| நான் | ஞான |

(6) 'ஞ்ச', என்ற ஒலியும் 'ங்க' என்ற ஒலியும் முறையே ஞ்ஞ, 'ங்ங' என்று ஒலிக்கப்படும்.

எ.டு:

| தமிழ் | மலையாளம் |
| --- | --- |
| கஞ்சி | கஞ்ஞி |
| மஞ்சள் | மஞ்ஞள் |
| முருங்கை | முருங்ங |

(7) தமிழிலுள்ள – 'ற்ற', 'ன்ற', 'த்த' போன்ற ஒலியிணைகளை முறையே 'த்த', 'ந்ந', 'ச்ச' என்று கூறலாம், எழுதலாம்

எ.டு:

| | |
| --- | --- |
| நெற்றி | நெத்தி |
| குற்றம் | குத்தம் |
| நன்றி | நந்நி |
| படித்த | படிச்ச |

(குமரிமாவட்ட வட்டாரத் தமிழ் வழக்கு மலையாளத்தில் கையாளப்படுகிறது)

(8) 'ன', 'ந' – வை ஒன்றுகொன்று மாற்றிப் பயன்படுத்தலாம்

எ.டு: விநாயகம் வினாயகம்

புணர்ச்சிகளில் வேறுபாடு:

1) தமிழில் 'வ' கர உடம்படு மெய்வருமிடங்களில் 'ய' கர உடம்படு மெய்யை மலையாளத்தில் பயன்படுத்தவேண்டும்.

எ.டு: அம்மா + இடம் அம்மாவிடம் → அம்மாயிடம்

பேனா + ஆல் பேனாவால் → பேனாயால்

2) தமிழில் 'ல' கரத்தில் முடியும் சொற்களுக்கு முன் வல்லின எழுத்தில் தொடங்கும் சொற்கள் வந்தால் லகரம் 'ற' கரமாக மாறுகிறது. 'ள' கரத்தில் முடிவது டிகரமாகவும் மாறும். இம்மாற்றங்கள் மலையாள மொழியில் ஏற்படுவதில்லை.

எ.டு: மயிற்பீலி ⟶ மயில்ப்பீலி
கற்சுவர் ⟶ கல்ச்சுவர்
முட்செடி ⟶ முள்ச்செடி
வாட்படை ⟶ வாள்ப்படை

(க, ச, த, ப – ஒற்றுக்கள் மலையாளத்தில் மிகும்)

3) சுட்டெழுத்துகளுக்குப்பின் மெய்யெழுத்து இரட்டிப்பதில்லை

அக்குழந்தை ⟶ ஆ குழந்தை
இத்தட்டு ⟶ ஈ தட்டு

(மலையாளச் சுட்டெழுத்தில் 'அ' – பதில் 'ஆ' சுட்டெழுத்தாகும்)

4) புளி + மரம் ⟶ புளியமரம், ஆல் + மரம் ⟶ ஆலமரம் என்று புணரும் தோன்றல் முறை மலையாளத்தில் இயல்புப்புணர்ச்சியின்பால் அமையும்.

எ.டு: புளிமரம், ஆல்மரம்,

<u>சொல்லிலக்கண வேறுபாடுகள்:</u>

1) தமிழில் எதிர்மறை வினையெச்சம் 'ஆமல்' விகுதிபெற்று வரும். ஆனால் மலையாளத்தில் 'ஆத்த' விகுதி பெற்றுவரும்

எ.டு: போகாமல் ⟶ போகாத்த

2) 'போ' கேள் என்ற வினைகள் வரும்போது பெயர்ச்சொல்லோடு முறை 'இல்' உருபும் 'ஓடு' உருபும் பயன்படுத்த வேண்டும்

எ.டு: நீ வீட்டுக்குப்போ ⟶ நீ வீட்டில் போ
முருகனிடம் கேள் ⟶ முருகனோடுகேள்

3) மலையாளத்தில் ஆறாம் வேற்றுமை உருபாக 'றே' 'டே'யாக வரும் 'அது' வருவதில்லை

எ.டு: வேலனுடைய ⟶ வேலன்றே (வேலன்டே)
இராமனது வேல் ⟶ இராமன்றே வேல்

4) தமிழில் பெயரடைகள் பெயர்ச்சொல்லோடு 'ஆ' சேர்ந்து உருவாகும்.

எ.டு: அழகான ⟶ அழகாய (பெண்)

5) தொழிற்பெயர் 'அல்' விகுதி சேர்க்கப்படுவதால் பெயர்ச்சொற்கள் உருவாக்கப்பட அதே சொற்கள் மலையாளத்தில் 'அம்' விகுதி சேர்ந்து உருவாகின்றன.

திருத்தம் ⟶ திருத்தல்
சாவு ⟶ சாவல்

6) தமிழில் மகரத்தில் முடியும் பெயர்ச்சொல், 'கள்' என்ற பன்மை உருபு ஏற்கும்போது மகரம், ஙகரமாக மாறும் (மரம் – கள் மரங்கள்) ஆனால் மலையாளத்தில் 'மரங்ஙள்' ஆகும். மேலும் 'கள்' விகுதி 'உகள்' என 'உ' கரம் சேர்ந்து வருவதுண்டு

எ.டு: ஆள் + கள் ⟶ ஆளுகள்
பெண் + கள் ⟶ பெண்ணுங்கள்

7) மலையாளத்தில் சொற்களை இணைக்கும் 'உம்' விகுதி சேரும்போது. மகர ஒற்றுமறைவது தமிழில் காணப்பெறுவதில்லை. மகர ஒற்று மறைய வகர உடம்படுமெய் தோன்றும்.

எ.டு: புத்தகம் + உம் > புத்தகவும்
குளம் + உம் > குளவும்

8) மலையாளத்தில் அ, இ, ஒ வில் முடியும் சொற்கள் வேற்றுமை உருபு ஏற்கும்போது யகரமும் மற்றும் உடை பெற்று வருகிறது.

எ.டு: பூனைக்கு — பூச்சயிக்கு
பூனையுடைய — பூச்சயுடை.
கொச்சிக்கு — கொச்சியிக்கு

9) ஆண்பாற் பெயருடன், தொல்காப்பியர் கூறும் 'மார்' விகுதி பன்மையில் சில இடங்களில் வரும்

எ.டு: நேதாக்கன் மார்
பையன்மார்

சொல்லாக்கத்தில் வேறுபாடுபெறும் சில

1) 1) வியாழன் — வியாழம்
2) கதவு — கதகு
3) நீச்சல் — நீந்தல்
4) செயல் — செயியல்
5) தென்னை — தெங்ஙு
6) உருந்து — உழுந்து
7) கீழே — கீழில்
8) ஏறு — கேறு

இவ்வாறு இன் ⟶ ம்; வு ⟶ கு; ச்ச ⟶ ந்த; ல் ⟶ யல்; என்ன ⟶ ங்ஙு; ஏ ⟶ ல்; ஏ ⟶ கே - போன்ற உருவில் மாறுபட்ட சொற்களை பயனாக்கலாம்.

2) தமிழில் வடமொழிச் சொற்களை தமிழாக்கம் பெற்றுக்கையாளுவர்; மலையாளத்தில் இருமுறையும் கையாளப்படுகின்றன.

எ.டு: வீடணன் — விபீடணன்
வீழணன்

3) தமிழில் 'ஐ', 'கு' வேற்றுமை உருபுக்குப்பின், வல்லெழுத்துச் சொற்கள் வர ஒற்றுமிகும். ஆனால் மலையாளத்தில் பெரும்பாலும் காணப் படுவதில்லை.

எ.டு: 1) கண்ணனைக் காண → கண்ணனெ காண
2) பூனைக்குப்பால்கொடு → பூச்சயிக்கு பாலுகொடு

4) மேலும் சில

1) தமிழில் எனக்கு, உனக்கு, நமக்கு, உங்களுக்கு, அவனுக்கு அவருக்கு என்று வருபவை மலையாளத்தில் முறையே 'எனிக்கு', 'நினக்கு', நமுக்கு, நிங்கள்க்கு, அவனு, அவள்க்கு, அவர்(க்)கு - என்று வருகின்றன

2)

| தமிழ் | | மலையாளம் |
|---|---|---|
| முன் | என்பது | முன்பில் |
| பின் | " | புறமே - என்றும் |
| 'ஆல்' | " | கொண்டு - இராமனால் இராமனெ கொண்டு |
| இல் | " | 'அத்து' |

வெயிலத்து போகாதே என மாறுபடக்காணலாம்.

3) தமிழில் 'ஆக' என்று வருவது மலையாளத்தில் 'இனு' உடன் 'வேண்டி' பெற்றுவரும்

புத்தகத்திற்காக → புத்தகத்தினு வேண்டி

4) 'அடை', 'சேர்' போன்ற வினைச் சொற்கள் வரும்போது பெயர்ச்சொல் 'ஐ' வேற்றுமை பெற்றுவர, மலையாளத்தில் 'இல்' வேற்றுமை பெற்றுவரும்

நாகர்கோயிலைச் சேர்ந்த போது → நாகர்கோயிலில் எத்தியப்போள்

5) 'நோக்கி', வழியாக, போன்ற சொற்கள் 'க்கு', ஊடே ஆக மாறிவரும்

எ.டு: 1) ஆற்றை நோக்கிப்போனான் → ஆற்றிலேக்குப்போனான்
2) துவாரத்தின் வழியாக → துவாரத்தினூடே

இயல் இரண்டு

## பின்னிணைப்பு எண் 3

கம்பராமாயணம் (யுத்த காண்டம்) யாப்பமைதி
விருத்தப்பாவகைகள் – வாய்பாடு – பாடல் எண்கள்
(வை.மு.கோ.உரை)

1. முச்சீர் வஞ்சிவிருத்தம்:

'மா + விளம் + விளம்'

பாடல்கள்: 1334 முதல் 1344 வரை     ஆக 11 பாடல்கள்

2. நாற்சீர்க் கலிவிருத்தம்:

1) விளம் + விளம் + மா + விளம்

பா: 13-58; 78-93; 187-208; 307-312; 314-407;
461-493; 569-594; 620-634; 1063-1088;
1297-1331; 1473-1536; 1674-1682; 1795-1805;
1979-2000; 2283-2300; 2431-2447; 2718-2763;
2934-2959; 3427-3444; 3725-3350; 3810-3827;
3895-3904; 3968-3972; 3976-4017; 4166-4201;
4242-4254; 4256-4278.

2) மா + விளம் + விளம் + விளம்

பா: 645-690; 730-756; 958-1062; 1277-1296;
2074-2114; 3145-3178; 3378-3396; 3487-3570;
3686-3712; 3828-3864; 3913-3958; 4124-4142;
4149-4165.

3) விளம் + விளம் + விளம்(காய்) + மா

பா: 59-77; 691-704; 846-864; 2256-2281;
2814-2837; 3641-3667; 3751-3761.

4) மா + மா + மா + மா

பா: 234-248; 1683-1764; 2320-2357;
2633-2644; 2905-2933; 3448-3472.

5. மா + விளம் + மா + விளம்
   பா: 2764-2772

6. காய் + காய் + காய் + காய் (மா)
   பா: 1273-1274; 1573-1581

7. விளம் + விளம் + விளம் + விளம்
   பா: 1806-1816

8. காய் + காய் + காய் + காய் (விளம் அல்லது மா)
   வெண்டளை பெற்று வருவன
   பா: 1659-1673; 1914-1935; 1945-1952; 3952.

9. மா + காய் + மா + காய்
   பா: 287-306; 3413-3426

10. மா + விளம் + விளம் + (மா + மா) + மா
   பா: 220-233; 805-830 ஆக பாடல்கள் 1843

3. ஐஞ்சீர்க்கலித்துறை (ஐஞ்சீர்க்கலிவிருத்தம்)

1) மா + விளம் + விளம் + விளம் + மா
   பா: 111-186; 313; 494-568; 1143-1183; 1186-1218; 1426-1472; 2301-2319; 2448-2505; 2556-2597; 3215-3301; 3493-3532; 3609-3640; 3762-3791; 4018-4079; 4101-4110; 4114-4115; 4122-4123.

2) மா + மா + விளம் + மா + காய் ( 4 மா - 1 காய்)
   பா: 2598-2614; 3445-3447; 3543-3563; 3792-3809.

3) நேர் 14, நிரை 15 (3 விளம் அல்லது காய் 2 மா (1 காய்) அல்லது மா) + மா + கனி (காய்) + மா + மா.
   பா: 831-835; 1953-1978; 1400 ஆக பாடல்கள் 748

4. அறுசீர் ஆசிரிய விருத்தம்:

1) விளம் + மா + மா + விளம் + மா + மா

பா: 249-286; 412-460; 595-619; 635-644; 705-729; 757-804; 865-957; 1089-1118; 1184-1185; 1219-1262; 1275-1276; 1332-1333; 1345-1425; 1582-1658; 1855-1913; 1935-1944; 2040-2073; 2115-2194; 2219-2252; 2253-2255; 2282; 2358-2430; 2513-2555; 2645-2678; 2996-2717; 2773-2813; 2838-2904; 2960-2991; 3054-3090; 3101-3141; 3143-3144; 3179-3214; 3302-3330; 3474-3484; 3486-3492; 3533-3547; 3588-3608; 3668-3685; 3873-3886; 3969-3698; 3973-3975; 4080-4099; 4111-4113; 4116-4121; 4202-4241; 4255; 4257-4277; 4279-4358.

2) காய் + காய் + காய் + காய் + மா + மா

பா: 408-411; 2679-2695; 3356-3360; 3564-3569; 3865-3872; 3887-3894; 3905-3911; 4143-4148.

3) விளம் + விளம் + விளம் + மா + மா

பா. 94-110; 3396-3412

4) மா + மா + காய் + மா + மா + காய்

பா: 1-12; 2615-2632; 3142

5) மா + விளம் + விளம் + விளம் + விளம் + விளம் + காய்

பா. 209-219; 1537-1572

6) விளம் + விளம் + காய் + விளம் + விளம் + காய்

பா:3091-3100

7) விளம் + விளம் + விளம் + விளம் + விளம் + விளம்

பா: 3473

ஆக பாடல்கள் 1676

5. <u>எழுசீர் ஆசிரிய விருத்தம்</u>

1. மா + மா + மா + மா + மா + மா + விளம்

பா: 1263-1266; 3331-3355

2. காய் + மா + காய் + மா + காய் + மா + மா

பா: 2195-2218

3. மா + காய் + மா + காய் + மா + காய் + விளம்

பா: 2013-2039

ஆக: 80 பாடல்கள்

இராமசரிதம் - யாப்பமைதி

1) ஆக 164 படலங்களில் 3,6,11,15,21,28 - (6) இவை அடிதோறும் நாற்சீர் பெற்றுவரும் கலிவிருத்தமாம். ஐஞ்சீர் கலிவிருத்தம் (கலித்துறை) 105-ம் மற்றவை எல்லாம் ஆறும், ஏழும், எட்டும், பத்தும் உள்ள ஆசிரியவிருத்தங்களாகும்

2) அறுசீர் ஆசிரியவிருத்தம் (ஆறு ஈரசைச்சீர் பெறுவன)
படலங்கள்: 2,7,10,14,18,20,22,25,26,27,29,34, 36, 38, 40, 43, 45, 49, 52, 56, 61, 65, 68 70, 73, 75, 78, 82, 95, 102, 107, 111, 114, 120, 123, 126, 129, 132, 136, 142, 145,148, 151, 155, 160

(ஈரசையும் மூவசையும் கலந்து வருவன)

படலங்கள்: 5, 8, 9, 12, 19, 24, 32, 46, 47, 60, 62, 64, 66, 71, 72, 74, 76, 86, 88, 104, 106, 122, 140, 149, 156,162.

3) எழுசீர் ஆசிரிய விருத்தம்
படலங்கள்: 17, 30, 33, 39, 54, 57, 91, 94, 96, 99, 101, 103, 108, 109, 118, 121, 124, 125, 130, 133, 139, 141, 143, 144, 150, 154, 158, 163 (குறிப்பு: சிலயிடங்களில் அடிகளில் அறுசீர் பெற்றும் வருகின்றன)

4) எண்சீர் ஆசிரியவிருத்தம்
படலங்கள் (எட்டு ஈரசைச்சீர் பெறுவன)
23, 44, 51, 55, 69, 84, 90, 92, 115, 135, 137, 138.
(ஈரசைச்சீரும் மூவசைச்சீரும் கலந்து வருவன)
படலங்கள்: 1, 13, 31, 35, 37, 41, 42, 48, 50, 53, 58, 67, 77, 79, 80, 81, 83, 87, 97, 98, 100, 113, 116, 119, 127, 128, 131, 134, 147, 152, 153, 159, 161, 164.

5) பத்து சீர்பெற்றுவரும் ஆசிரிய விருத்தம்

படலங்கள்: 98, 128 (8/10)

6) பன்னிரண்டு சீர்பெற்றுவரும் ஆசிரிய விருத்தம்

4, 16, 59, 63, 85, 89, 93, 110, 112, 117, 146, 157.

## கம்பராமாயணம் (யுத்த காண்டம்)
விருத்தவகை

| | | |
|---|---|---|
| 1. | முச்சீர் வஞ்சி விருத்தம் | 11 |
| 2. | நாற்சீர்க்கலிவிருத்தம் | 1843 |
| 3. | ஐஞ்சீர்க்கலிவிருத்தம் | 748 |
| 4. | அறுசீர் ஆசிரிய விருத்தம் | 1676 |
| 5. | எழுசீர் ஆசிரிய விருத்தம் | 80 |
| 6. | எண்சீர் ஆசிரிய விருத்தம் | - |
| 7. | பதின்சீர் ஆசிரிய விருத்தம் | - |
| | ஆக | 4358 |



<u>இராமசரித விருத்தவகை</u>

| | | |
|---|---|---|
| 1. | முச்சீர் வஞ்சி விருத்தம் | - |
| 2. | நாற்சீர் கலிவிருத்தம் | 66 |
| 3. | ஐஞ்சீர் கலிவிருத்தம் (கலித்துறை) | 11 |
| 4. | அறுசீர் ஆசிரிய விருத்தம் | 777 |
| 5. | எழுசீர் ஆசிரிய விருத்தம் | 310 |
| 6. | எண்சீர் ஆசிரிய விருத்தம் | 519 |
| 7. | பதின்சீர் ஆசிரிய விருத்தம் | 131 |
| | ஆக | 1814 |

வரைபடம் இராமசரித விருத்தவகை




0 - 10 : விருத்தவகை

0 - 1000 : பாடல் எண்ணிக்கை

## பின்னிணைப்பு எண் 4

## கம்பராமாயணம் - யுத்தகாண்டம்

### மக்கள் பெயர்கள்

குறிப்பு: முதல் எண் படலத்தையும்
இரண்டாம் எண்(கள்) செய்யுளெண்ணையும் சுட்டும்

(அ)

## பின்னிணைப்பு எண் 5

## இராமசரிதம் – மக்கள்பெயர்கள்

(முதல் எண் படலத்தையும், இரண்டாம் எண் செய்யுள் எண்ணையும் குறிக்கும்)

பின்னிணைப்பு எண் 6

### 3. கம்பராமாயணம் — யுத்தகாண்டம்

### இடப்பெயர்கள்

குறிப்பு: போர் நிகழ்ச்சிகளுடன் தொடர்புடைய இடப்பெயர்கள் தரப்படுகின்றன (முதல் எண் படலத்தையும் இரண்டாம் எண் பாடலையும் குறிக்கும்)

அந்தகன் புரி
19:13

அமரர்கோநாடு
29:13

அயோத்தி
13:14
25:27,28,30,79
27:50
37:321
39:13

அயோத்தி மூதூர்
25:36

அளகை
5:56

ஆடகக்கிரி
6:4

ஆடக்குன்று
10:29

இஞ்சிமாநகர்
21:36

இலங்கை
2:20
5:19,26,67,118
8:34
15:340
16:24
21:103,30:16

இறலியப்பெருந்தீவு
29:18

இறைக்குன்று
32:35

ஈமநாடு
5:44

உதய மண்டிலம்
31:8

ஊதயக்குன்று
11:1

ஏமகூடம்
23:24,26

கங்கை
2:10

கந்தமாதனம்
19:15

கந்தருப்பநகர்
15:91

கயிலை
30:94

கனகக்கிரி
21:117

காந்தருப்பம்
30:112

கிலியமைபுவனம்
15:16

குயமகன் திகிரி
30:165

கோசலம்
30:102
39:27

சாகத்தீவு
29:10,16

சித்திரகூடம்
37:181,192,276

சிருங்கப்பேரி
39:31

சேமக்குன்று
18:78

தருவனம்
11:9
17:266
23:50

## பின்னிணைப்பு எண் 7

## இராமசரிதம்

### இடப்பெயர்கள்

## கம்பராமாயணம் - இராமசரிதம் மக்கள் பெயர்கள் ஒப்பீட்டுச் செவ்வகங்கள்

### கம்பராமாயணம்

**மக்கள் பெயர்கள்**

அ) தனிப்பெயர்:

1. ஓரசைச்சீர்ப் பெயர்கள் 7
2. ஈரசைச்சீர்ப் பெயர்கள் 253

ஆ) கூட்டுப்பெயர்:

3) மூவசைச்சீர்ப் பெயர்கள் 106

4) நாலசைச்சீர் (இருஈரசையால் வருவன) பெயர்கள் 116

----

ஆக 482

----




### இராமசரிதம்

**மக்கள் பெயர்கள்**

அ) தனிப்பெயர்:

1) ஓரசைச்சீர் பெயர்கள் 18

2) ஈரசைச்சீர்ப் பெயர்கள் 165

ஆ) கூட்டுப்பெயர்:

3) மூவசைச்சீர்ப் பெயர்கள் 202

4) நாலசைச் சீரும் அதற்கு மேலும்வருவன (இரண்டு அசைகள் சேர்த்து) 206

-----

ஆக 591

-----



## கம்பராமாயணம் - இராமசரிதம் இடப்பெயர்கள் ஒப்பீட்டுச் செவ்வகங்கள்

### கம்பராமாயணம்

**இடப்பெயர்கள்:**

**தனிப்பெயர்:**

| | |
|---|---|
| 1) ஓரசைச்சீர்ப் பெயர்கள் | - |
| 2) ஈரசைச்சீர்ப் பெயர்கள் | 15 |
| **கூட்டுப்பெயர்:** | |
| 3) மூவசைச்சீர்ப் பெயர்கள் | 20 |
| 4) நாலசைச்சீர்ப் (இருஅசைகள் சேர்ந்துவருவன) பெயர்கள் | 21 |
| ஆக | 56 |




### இராமசரிதம்

**இடப்பெயர்கள்**

**தனிப்பெயர்:**

| | |
|---|---|
| 1) ஓரசைச்சீர்ப் பெயர்கள் | - |
| 2) ஈரசைச்சீர்ப் பெயர்கள் | 11 |
| கூட்டுப்பெயர் | |
| 3) மூவசைச்சீர்ப் பெயர்கள் | 30 |
| 4) நாலசைச் சீர்ப்பெயர்கள் (இருசீர்களால் இயன்றவை) | 6 |
| | 47 |



இயல் 4

பின்னிணைப்பு எண் 8

கம்பராமாயணம் - இராமசரிதம் : போர் வீரர் பங்கு

| போர் | கம்பராமாயணம் | | இராமசரிதம் | |
|---|---|---|---|---|
| | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் | பங்குபெறுவோர் | போரின் முடிவு |
| இலங்கை முற்றுகை : | | | மதில்போர் : | |
| 1) மதில் போர் | வானரர்படை<br>அரக்கர்படை<br>(சதுரங்கசேனை)<br>சுக்கிரீவன் | அகழி தூர்த்தல்<br>அரக்கர் பெருமளவு ஆக<br>அழிதல் | வானரர்படை ×<br>அரக்கர் படை | அகழி தூர்த்தல் |
| 2) வடக்குவாயில் போர் | வச்சிரமுட்டி × சுக்கிரீவன்<br>அரக்கர்கள் × " | வச்சிரமுட்டி இறத்தல்<br>அரக்கர் அழிவு | கிழக்குவாயில்<br>நீலன், துவிதன், மைந்தன்<br>× அநேகாயிரம்<br>அரக்கர்படை | அரக்கர்படை அழிதல் |
| 3) கிழக்குவாயில் போர் | நீலன் × அரக்கர்கள்<br>இடும்பன் × கும்பானு<br>(கரடி)<br>நீலன் × பிரகத்தன்<br>அரக்கர் படை<br>17 வெள்ளம் குரங்குப் படை | அரக்கர் பின்னடைதல்<br>தேர், சிலை - இழத்தல்<br>கும்பானு இறத்தல்<br>பிரகத்தன் இறத்தல் | தெற்குவாயில்<br>சுசேன் முதலிய ஐவர்<br>அங்கதன் அரக்கர்படை<br>மேற்குவாயில் :<br>அனுமன், பிரகதன்<br>பிரசாதி × அரக்கர்படை | அரக்கர்படை அழிவு<br><br><br><br>அரக்கர்படை அழிவு |
| 4) தெற்குவாயில் போர் : | சுபாரிசன் ×<br>அங்கதன் | சுபாரிசன் இறத்தல் | வடக்குவாயில் :<br>அமலன், காகுத்தன்<br>லட்சுமணன் × அரக்கர்படை | இராவணன், சுக்கிரீவனிடம் தூதுவிடல் |
| 5) மேலைவாயில் போர் | துன்முகன் × அங்கதன்<br>அரக்கர் சேனை ×<br>வானரர் சேனை | துன்முகன் அழிவு<br>இராவணன் போர்க்<br>கோலம்பூணல் | | இராமன் அங்கதனைத் தூதாகவிடுதல்<br>பயனின்றி இருபடையும் பெரும்போருக்குத் தயாராதல் |

| போர் | கம்பராமாயணம் | | இராமசரிதம் | |
|---|---|---|---|---|
| | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் | பங்குபெறுவோர் | போரின் முடிவு |
| முதல்போர்:<br>(வடக்குவாயிலில்) | இருசேனைகள் கை கலத்தல்<br>இராவணன் × சுக்கிரீவன்<br>அனுமன் × இராவணன்<br>இராவணன்×இலக்குவன்<br>இராமன் × இராவணன்<br>அரக்கர் படைக்கலம் ×அனுமன்<br>இராமன் × இராவணன் (தனிப்போர்) | அசுரர் படை அழிவு<br>இலக்குவன் 10 வில் அறுத்தல்<br>பிரமன் அயர்தல் (வேலால்)<br>அனுமன் எடுத்துச் செல்லல்<br>7–க்கு 7.உம்<br>10–க்கு 5–உம்<br>அம்புவிடல் அனுமன் சலித்தல்<br>சிலையறுத்தல் குடைகொடி, தேர் மகுடபங்கம்<br>இராமன் அறிவுரை 'இன்றுபோய் நாளை வா' | இருசேனைகள் கைகலத்தல்<br>அங்கதன் × இந்திரசித்து<br>சம்புமாலி × அனுமன்<br>சுக்கிரீவன் × அபிப்பிராயதன்<br>அசனிபிரபன் × துவிந்திரன்<br>நீலன் × நிகும்பன்<br>மைந்தன் × வச்சிரமுட்டி<br>தம்பாதி × பிரசங்கன்<br>வீடணன் × மித்திருகன்<br>இலக்குவன் × விருபாட்சன்<br>இராமன் × {சுப்தக்கனன் {யக்ஞகோபன் {அக்கினிகேது {இரசுமிகேது<br>பனசன் × வித்தியுச்சுக்குவன்<br>நளன் × பிரதாபன்<br>" × யசமதரு<br>" × மகாபாச்சுவான்<br>இந்திரசித்து × இராம–இலக்குவர் வானரவீரர் பலர் | அரக்கர்களை ஒவ்வொருவராக வீழ்த்துதல்<br>இரவுப்போர் தொடர்ந்து நடத்தல்<br>நாகபாசத்தால் கட்டுண்டு வீழ்தல் இராவணன் மகிழ்ச்சி சீதை விமானத்தில் களம் கண்டு வருந்துதல் |

| போர் | கம்பராமாயணம் | | இராமசரிதம் | |
| --- | --- | --- | --- | --- |
| | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் | பங்குபெறுவோர் | போரின் முடிவு |
| | | | அனுமன் × தும்ராக்கன்<br>அங்கதன் × விசித்ரதபிட்டிரன் | கருடன் வர எல்லோரும் உயிர்த்தெழுதல்<br>இராவணன் நாகபாசவிடுதலை அறிந்து தூம்ராக்கனைப் படையுடன் அனுப்புதல் |
| | | | அகம்பன் × நளன்<br>" × மைந்தன்<br>" × குமுதன்<br>" × அனுமன் | தூம்ராக்கன் இறத்தல்<br>தெற்குவாயில் – அரக்கன் தலையறுபடுதல் |
| | | | | அகம்பன் பின்னடைதல்<br>அகம்பன் வீழ்தல்<br>இராம–இலக்குவர் புகழ்தல் |
| படைவீரர் போர் | குறிப்பு: கம்பனின் பின்னர்வரும் | | படைவீரர் போர் | மறுநாள் போர் |
| | | | வானரர் × அசுரர்போர்<br>பிரகத்தன் × வானரர்<br>திவிவாதி × "<br>நந்தாகாதி × "<br>சமுன்னதன் × "<br>சகிவன்மார் × "<br>மகாநாதன் × " | இராமன் படைவீரன் பிரகத்தனை அறிதல்<br>பிரகத்தை வானரர் படையை ஓடச்செய்தல்<br>சாம்பவன் இறத்தல்<br>கும்பன் இறத்தல் |
| | | | மகாநாதன் × சாம்பவன்<br>மைந்தன் × கும்பன்<br>நீலன் × பிரகத்தன் | பிரகத்தன் இறத்தல்<br>இராவணன் போருக்கு வருதல் |

| | கம்பராமாயணம் | | இராமசரிதம் | |
|---|---|---|---|---|
| | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் |
| | | | இராவணன் × சுக்கிரீவன்<br>இராவணன் × அநுமன்<br>இராவணன் × நீலன்<br>இராவணன் × நீலன்<br>இராவணன் × இலக்குவன் | சுக்கிரீவன் சலித்தல்<br>அநுமன் விழுதல்<br>இராவணன் கொடி, வில் முடி அழித்தல்<br>நீலன் வீழ்தல்<br>வீழ்ந்த இலக்குவனை அநுமன் எடுத்துச் செல்லல். இராமன் சூளுரை |
| | | | இராமன் × இராவணன்<br>இராவணன் × அநுமன்<br>இராமன் × இராவணன் | ஒருவரோடு ஒருவர் நெடிது அம்பெய்தல்<br>அநுமன் உடலில் அம்பேற்றல்<br>இராவணன் கொடி, வில் பொடியாதல்<br>இராமன் சூளுரை – மணிமகுடத்தை வீழ்த்துதல் |
| கும்பகருணன் போர் | கும்பகருணன் × நீலன்<br>கும்பகருணன் × அங்கதன்<br>கும்பகருணன் × அநுமன்<br>கும்பகருணன் × இலக்குவன்<br>அரக்கர்படை × வானரர் படை<br>கும்பகருணன் × சுக்கிரீவன்<br>இராமன் × கும்பகருணன் | இராவணன் கும்பகருணனைப் படையுடன் அனுப்பல்<br>மற்போரில் நீலன் தளர்தல்<br>அங்கதன் தோற்றல்<br>அப்பால்போதல்<br>குரங்குச்சேனை அழிதல்<br>இலக்குவனைக் கும்பகருணன் புகழ்தல்<br>சுக்கிரீவன் விழுதல்<br>சுக்கிரீவனால் காதும் மூக்கும் இழத்தல்<br>கும்பகருணன் கை, கால்–அழுபடல் தலை கடலில் மூழ்கல் | (கும்பகருணன் போர்)<br>துவித்ன் × வானரர்<br>கும்பகருணன் × அங்கதன்<br>கும்பகருணன் × அநுமன்<br>கும்பகருணன் × சுக்கிரீவன்<br>இராமன் × கும்பகருணன் | கும்பகருணனைப் படையுடன் இராவணன் அனுப்புதல்<br>வானரர்படை ஓடுதல்<br>அநுமன் சூலத்தால் விழுதல் உணர்தல்<br>சுக்கிரீவன் களைத்து விழுதல்<br>கும்பகருணன் எடுத்துச்செல்லுதல்<br>உணர்வு பெற்ற சுக்கிரீவன்<br>கும்பகருணன் மூக்கும் காதும் இழத்தல்<br>இராமனால் சக்கரன் கணையால் தலையை அறுத்தல்<br>கும்பகருணன் இறத்தல் – இராவணன் அவலம் |
| | | | பனசன் × உன்மத்தன்<br>நராந்தகன் × அங்கதன்<br>தேவாந்தகன் × அங்கதன்<br>மகோதரன் × அங்கதன்<br>திரிசிரன் × அங்கதன்<br>" × அநுமன் } துணை<br>" × நீலன் }<br>திரிசிரன் × அநுமன் (வாள்போர்)<br>மகோதரன் × நீலன்<br>மகாபார்ச்சுவன் × ரிசபன் | உன்மத்தன் தலையறுபடல்<br>நராந்தகன் இறத்தல்<br>மகோதரன் ஓடுதல்<br>தேவாந்தகன் இறத்தல்<br>வானரப்படை ஓடுதல்<br>திரிசிரன் இறத்தல்<br>அசுரன் வீழ்தல்<br>மகாபார்ச்சுவன் அழிதல்<br>அதிகாயன் போருக்குத்தயாராதல் |

| போர் | கம்பராமாயணம் | | இராமசரிதம் | |
|---|---|---|---|---|
| | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் |
| அதிகாயன் போர் | வானரர் × அசுரர் | | | |
| | தாருகன் × இலக்குவன் | இலக்குவன் அயரல் | | |
| | காலன் × " | அதிகாயன் வீரவாதம் | அதிகாயன் × வானரர் | பிரமாத்திரத்தால் அதிகாயன் இறத்தல் |
| | குலிசன் × " | | அதிகாயன் × இலக்குவன் | அதிகாயன் தலையை எடுத்து இராமன் திருமுன் வைத்தல் |
| | காலசங்கன் × " | | | |
| | மாலி × " | | | |
| | மருத்தன் × " | | | |
| | அதிகாயன் × அநுமன் | பிரமாத்திரத்தால் கவசம் கீற | | |
| | திரிசிரசு × அநுமன் | அதிகாயன் வீழ்தல் | | |
| | இலக்குவன் × அதிகாயன் | | | |
| | நராந்தகன் × அங்கதன் | படைவீரர்கள் | | |
| | போர்மத்தன் × நீலன் | அரக்கர்கள் | | |
| | வயமத்தன் × இடபன் | ஒவ்வொருவரும் அழிதல் | | |
| | கும்பன் × சுக்கிரீவன் | | | |
| | நிகும்பன் × அங்கதன் | | | |
| இந்திரசித்து போர் | நாகபாசம்: | | இந்திரசித்து போர் | வேள்வி செய்து போர்க்களம் வருதல் |
| | சுக்கிரீவன் × இந்திரசித்து | கும்பகருணன் விழ | இந்திரசித்து × வானரர்படை | |
| | அநுமன் × அசுரர் | இந்திரசித்து சபதம் | வானரர்படை —× (அங்கதன், அநுமன், கோமுகன், சதபலி, கும்பன், தம்பன் சோதிர்முகன், வித்திடிரன், சுமுகன், துர்முகன்) — | வானரர்படை ஓடுதல் |
| | அங்கதன் × " | | | |
| | நீலன் × இந்திரசித்து | | | |
| | குமுதன் ) ×வானரர் படை<br>இடபன் )<br>சாம்பவன் )<br>பனசன் )<br>மயிந்தன் ) | அநுமன் தேர் அழித்தல் | | |
| | | இரவு மாயையால் இந்திரசித்து பொருதல் நாகபாசம் பிணைத்தல் | இராமஇலக்குவர் × இந்திரசித்து | இராம இலக்குவர் வானரர் படை பிரமாத்திரத்தால் விழுதல் |
| | தூம்ராக்கன்×மகாபார்ச்சுவன் | கருடன் வரவால் நாபாசம் விடுதல் | | அநுமன் மருந்துமலையால் யாவரும் எழுதல் |

<table>
<tr><th rowspan="2">போர்</th><th colspan="2">கம்பராமாயணம்</th><th colspan="2">இராமசரிதம்</th></tr>
<tr><th>பங்குபெறுவோர்</th><th>போரின் முடிவுகள்</th><th>பங்குபெறுவோர்</th><th>போரின் முடிவுகள்</th></tr>
<tr><td>(இரவுபோர்)</td><td></td><td></td><td>கம்பனன் × வானரப்படை<br>சோணிதாக்கன் × அங்கதன்<br>பிரசங்கன் () × அங்கதன் +<br>யூபாக்கன் () × மைந்தன்<br>சோணிதாக்கன் × துவிதன்<br>கும்பன் × துவிதன், அங்கதன்<br>மயிந்தன் × அங்கதன்<br>கும்பன் × சுக்கிரீவன்<br>நிகும்பன் × அனுமன்<br>மகாபார்ச்சுவன் × இராமன்<br>இந்திரசித்து × அனுமன்<br>வானரர்படை × அசுரப்படை<br>இலக்குவன் × இந்திரசித்து<br>இந்திரசித்து × அனுமன்<br>" × வீடணன்<br>" × இலக்குவன்</td><td>வானரர் அழிவு<br>கம்பனன் இறப்பு<br>பிரசங்கன் தலைவீழ்தல்<br>சோணிதாக்கன்,<br>யூபாக்கன் இறத்தல்<br>அங்கதன் தளர்தல்<br>கும்பன் வீழ்தல்<br>நிகும்பன் தலை வீழ்தல்<br>மகாராட்சன் கராத்ஜமன் போருக்கு வருதல்<br>மகாபார்ச்சுவன் அழிதல்<br>இந்திரசித்தன் மாயை மைதிலியைப் போர்க்களம் கொணர்தல்.<br>இந்திரசித்து மறைதல்<br>நிகும்பலை வேள்வி வீடணன் அறிதல்<br>இந்திரசித்து தேரில் வீழ்தல் (ஓர் இரவு இரண்டு பகல் போர்)<br>இலக்குவன் நெற்றி பிளத்தல்<br>இந்திரசித்து ஐந்தாத்திரத்தால் தலையறுபடுதல்</td></tr>
</table>

| போர் | கம்பராமாயணம் | | இராமசரிதம் | |
|---|---|---|---|---|
| | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் |
| IV. படைத்தலைவர் வதை | தாம்ராக்கன் × அனுமன்<br>மகபார்சுவன் × அங்கதன்<br>மாலி × நீலன்<br>பிசாசன் × பனசன்<br>சூர்யசத்ரு × சுக்கிரீவன்<br>யக்ஞசத்ரு × இலக்குவன்<br>வச்சிரதமிட்டிரன் × இடபன்<br>" × இராமன் | அனுமன் தேரை அழித்தல்<br>இலக்குவன் வில் முறித்தல்<br>அங்கதன் தேரை எறிதல்<br>இராமன் சூலம் அறுத்தல்<br>இலக்குவன் தோளைவெட்டல்<br>பிசாசன் இலக்குவனால் அழிதல்<br>அனுமன் அரக்கனை அழித்தல் | கம்பனன் × அங்கதன்<br>சோணிதாக்கன் × அங்கதன்<br>பிரசங்கன் × அங்கதன்<br>யூபாக்கன் × "<br>சோணிதாக்கன் × மைந்தன் துவிதன்<br>கும்பன் × அங்கதன், துவிதன்<br>கும்பன் × சுக்கிரீவன்<br>நிகும்பன் × அனுமன் | அங்கதன் சோணிதாக்கனை வாளால் வெட்டுதல்<br>பிரசாங்கனின் தலையைக் கொய்தல்<br>யூபாக்கனைத் துவிதன் அழித்தல்<br>துவிதன் கும்பனை எதிர்த்தல்<br>துவிதன் தளர்தல்<br>சுக்கிரீவன் கும்பனைக் கொல்லுதல்<br>அனுமனை நிகும்பன் தலை எடுத்தல் |
| . மகரக்கண்ணன் வதை | அரக்கர் × வானரர்<br>மரக்கண்ணன் × இராமன்<br>இராக்கதர்கள் × நளன்<br>குருதிக்கண்ணன்<br>சிங்கன் × பனசன் | சாரதியின் தலை அறுத்தல்<br>தலைமேல் நின்று உதைத்தல்<br>தேரை எடுத்து சிங்கன் மீது வீசுதல்<br>மாயையால் வானரமெல்லாம் தன்னுரு ஆக்கல்<br>வருணாத்திரம் பெய்து இரத்தம் வழி உண்மை<br>இராமன் மகராக்கனைக் கொல்லல் | மகராக்கன் × இராமன் | மகராக்கன், இராமனிடம் எந்த ஆயுதம் எடுத்துப் போர் செய்ய வேண்டுமோ, அதனால் போர்செய்வோம் எனல்<br>மகராக்கன் சூலம் எடுத்து எய்ய இராமன் அவனை அம்பபால் கொல்லுதல் |

| போர் | கம்பராமாயணம் | | இராமசரிதம் | |
|---|---|---|---|---|
| | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் |
| மூலபலவதை | நால்வகைச்சேனை × வானரச்சேனை<br>இராமன் × மூலபலச்சேனை<br>இராமன் × வன்னி | இராமன் நேர்படுதல்<br>காந்தர்வாத்திரம் முற்றும் அழிவு<br>ஒருங்கு திரண்ட எஞ்சிய படையை தேவாத்திரத்தால் அழித்தல்<br>வன்னி அழிதல் | வானரர் × அரக்கர்<br>இராவணன் × வானரர்<br>விருபாக்கன் × சுக்கிரீவன்<br>மகோதரன் × சுக்கிரீவன் | கடும்போர்<br>இராவணன் அரக்கருடன் நிற்றல்<br>சுக்கிரீவன் விருபாக்கன் யானையை வீழ்த்துதல்<br>தலைமீது பாய்ந்து தாக்குதல் – விருபாக்கன் அழிதல்<br>மகோதரன் தலையை சுக்கிரீவன் துண்டித்தல்<br>மகாபார்ச்சுவன் வானரரைக் கொல்லுதல்<br>அவன் மழுவால் தாக்க, முட்டியால் சுக்கிரீவன் கொல்லுதல். |
| வேல் ஏற்றமை | அரக்கர் சேனை × குரங்குச்சேனை<br>இராவணன் × இலக்குவன்<br>" × வீடணன்<br>" × இலக்குவன் | மோகனாத்திரம்<br>பிஉஷ் ஜுவாலாத்திரம்<br>இராவணன் வீடணனை எய்ய இலக்குவன் ஏற்றல்<br>வானரர் களங் காணல்<br>இலக்குவனை ஆற்றுதல் | இராவணன் × இலக்குவன்<br>" × வீடணன்<br>" × இலக்குவன்<br><br>(பி.கு. இது பின்னர் கூறப்படுகிறது.) | |

| போர் | கம்பராமாயணம் | | இராமசரிதம் | |
|---|---|---|---|---|
| | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் | பங்குபெறுவோர் | போரின் முடிவுகள் |
| இராவணன் வதை | இராமன் × இராவணன்<br>மகோதரன் × இராமன் | சிவபெருமான் தேரை மாதலி ஓட்ட இராமன் இவர்தல்<br>மகோதரன் இலக்குவனைத் தாக்கப்போதல்<br>இராவணனுக்குத் நிமித்தம்<br>அத்திரங்களுக்கு மறு அத்திரம் விடல்<br>தலைகள் விழல்<br>பிரம்மாத்திரத்தால் இராவணன் அழிதல் | இராமன் × இராவணன்<br>இராவணன் × இலக்குவன் | இராவணன் போரிட இலக்குவன் வரவே அவனைத் தாக்குதல் 'இருவர் பொருதல் முறையல்ல' எனல்<br>ஆசுராத்திரம் பாவகாஸ்திரம் பைசாகாத்திரம் கந்தர்வாத்திரம்<br>இலக்குவன் வேல் ஏற்றல் மருந்துமலையால் குணமுறுதல்<br>தேர்மீது நின்று பொருத இராவணன் தளர்தல் சூலம் அம்பால் அழிதல் நான்குநாள் போர், தலைகள் விழ, பிரமாத்திரத்தால் வீழ்தல் |

## போர் செயல்கள்


போர்
வெட்சி
கரந்தை
நிரைகவர்தல்
மீட்டல்
வஞ்சி
தும்பை
நொச்சி–உழிஞை
வாகை
வெற்றி
காஞ்சி
பாடாண்
நிலையாமை
வீரர்வரலாறு
ஆண்துயர்
பெண்துயர்
பொருள்அறிவு
நிலையாமை
இன்பம்
செல்வம்
யாக்கை

## பண்டையப் படை வகுப்புப் பெயர்கள்

### Names of Ancient Army Divisions

| NAME பெயர் | CONSISTING OF அடக்கம் | CHARIOTS தேர் | ELEPHANTS யானை | CAVALRY குதிரை | INFANTRY காலாள் |
|---|---|---|---|---|---|
| 1. பத்தி Padati | ----- | 1 | 1 | 3 | 5 |
| 2. சேனாமுகம் Senāmukam | 3 பத்தி Padāti | 3 | 3 | 9 | 15 |
| 3. குமுதம் Kumudam | 3 சேனாமுகம் Senamukam | 9 | 9 | 27 | 45 |
| 4. கணகம் Kaṇakam | 3 குமுதம் Kumudam | 27 | 27 | 81 | 135 |
| 5. வாகினி Vāhinī | 3 கணகம் Kaṇakam | 81 | 81 | 243 | 105 |
| 6. பிரளயம் Piralayam | 3 வாகினி Vāhini | 243 | 243 | 729 | 1215 |
| 7. சமுத்திரம் Samuttiram | 3 பிரளயம் Piralayam | 729 | 729 | 2187 | 3645 |
| 8. சங்கம் Sangam | 3 சமுத்திரம் Samuttiram | 2187 | 2187 | 6561 | 10935 |
| 9. அநீகம் Anikam | 3 சங்கம் Sangam | 6561 | 6561 | 19683 | 32805 |
| 10. அக்ரோணி Akrōṇi | 3 அநீகம் Anikam | 19683 | 19683 | 59049 | 98415 |
| 11. ஏகம் Ekam | 8 அக்ரோணி Akrōṇi | 157464 | 157464 | 472392 | 787320 |

| NAME பெயர் | CONSISTING OF அடக்கம் | CHARIOTS தேர் | ELEPHANTS யானை | CAVALRY குதிரை | INFANTRY காலாள் |
|---|---|---|---|---|---|
| 12. கோடி Kōḍi | 8 ஏகம் Ekam | 1259712 | 1259712 | 3779136 | 6298560 |
| 13. மாசங்கம் Māśangam | 8 கோடி Koḍi | 10077696 | 10077696 | 30233073 | 50388480 |
| 14. விந்தம் Vindam | 8 மாசங்கம் Māśangam | 80621568 | 80621568 | 241864704 | 403107840 |
| 15. மாகுமுதம் Makumudam | 8 விந்தம் Vindam | 644972544 | 644972544 | 1934917632 | 3224862720 |
| 16. பதுமம் Padumam | 8 மாகுமுதம் Mākumudam | 5159780352 | 5159780352 | 15479341056 | 25798901760 |
| 17. நாடு Nāḍu | 8 பதுமம் Padumam | 41278242816 | 41278242816 | 123834728448 | 206391214080 |
| 18. மாகடல் Mākaḍal | 8 நாடு Nāḍu | 330225942528 | 330225942528 | 990677827584 | 1651129712640 |
| 19. வெள்ளம் Vellam | 8 மாகடல் Mākaḍal | 2641807540224 | 2641807540224 | 7925422620672 | 13209037701120 |

## பல்தரப் படைகள் பதினாறு

### Sixteen Varieties of Army

1. மூலப் படை = தினம் பயிற்சி செய்து கொண்டு நெடுங்காலமாக நிலைத்துள்ள சேனை.
2. உரிமைப் படை = மானியம், உண்பளம் பெற்று அதன் காரணமாகப் போர் நேர்ந்த காலத்து அரசனுக்காகப் போரிடும் சேனை.
3. கூலிப் படை = போர்க்காலத்தில் மட்டும் கூலிக்காகப் பணியாற்றும் சேனை.
4. துணைப் படை = நட்புக் காரணமாகப் போரில் உதவும் சேனை.
5. அமயப் படை = அவசர நிலையில் சேர்க்கப்படும் சேனை. இது புதுப்படை எனவும் படும்.
6. வன் படை = நாட்டுப்பற்றால் ஏற்பட்ட மன எழுச்சி காரணமாக அமையும் சேனை.
7. பயிற்சிப் படை = போர்ப் பயிற்சி கற்ற சேனை.
8. பயிற்சியில் படை = பயிற்சி பெறாத – உணர்ச்சியுள்ள மைந்தர் கூட்டம்.
9. குழுப் படை = மன்னரால் அமைந்த தலைவனை உடைய சேனை.
10. தனிப் படை = தலைவனை இன்றித் தாமாகவே இயங்கும் சேனை.
11. கருவிபெறு படை = அரசனால் வழங்கப்படும் போர்க் கருவிகளைப் பெற்று விளங்கும் சேனை.
12. தற்கருவிப் படை = தத்தம் போர்க் கருவிகளைக் கொண்டு பொருதும் சேனை.
13. ஊர்திப் படை = காவலனால் தரப்பட்ட வாகனங்களில் ஏறிப் போர் புரியும் சேனை.
14. தன் ஊர்திப் படை = தத்தம் வாகனங்களில் ஏறிப் போர் புரியும் சேனை.
15. கானப் படை = வேடர் முதலிய வன மக்களைக் கொண்ட சேனை.
16. பகைவிடு படை = பகைவனை விட்டு வந்து தம்பால் கூடிய சேனை.

### இருநிலைப் படை
### TWO KINDS OF ARMY

1. அகப் படை Akhap paḍai — Internal Defensive Force
2. மறப் படை Maṛap paḍai — Expeditionary Force

### படை வகை நான்கு
### FOUR KINDS OF ARMY

1. காலாள் படை Kūlāl paḍai — Infantry
2. பரிப் படை Parip paḍai — Cavalry
3. யானைப் படை Yaṇaip paḍai — Elephant Brigade
4. தேர்ப் படை Tērp paḍai — Chariots Brigade

### படை வகுப்பு நான்கு
### FOUR DIVISIONS OF ARMY

1. அணி Aṇi — Order of an army
3. ஒட்டு Oṭṭu — Division of an army
4. யூகம் Yūkam — Strategic formation of an army for bo

### படை உறுப்பு ஐந்து
### FIVE KINDS OF ARMY

1. தூசி Thūsi — Vangurd
2. கூழை Kūḷai — Rearguard
3. நெற்றி Neṛṛi — Van of an army
4. கை Kai — Wings
5. அணி Aṇi — Columns

ஆதாரம்: கையேடு கலைக்காட்சிக்குழு
இரண்டாவது உலகத்தமிழ்க்கருத்தரங்கு மாநாடு
சென்னை 1968.

## படைக்கலங்கள் சில


1


2


3


4


5


6


8


9


10


11


12


13


14


15


16


17


18

1. கொடி
2. உலக்கை
3. சக்தி
4. பரசு
5. மழு
6. நவியம்
8. கூடம்
9. கதை
10. நாகபாசம்
11. சூலம்
12. அம்பு
13. வில்
14. சக்கரம்
15. கத்தி
16. கேடயம்
17. எஃகம்
18. பாசம்




1. கொற்றைவாள
2. கொலைவாள்
3, 4, 12 உடைவாள்
5. கையுறைவாள்
6.10 கோடவாள்
7, 9, 11. ஈவாள்

நன்றி: செல்லைப்பல்கலைக்கழகம்




1, 3, 6 மழு
2, 4 நவியம்
5, 7 கணிச்சி
8, 9. பரசு
10, 11 கதை

நன்றி: சென்னை பல்கலைக்கழகம்

இயல் ஐந்து

## பின்னிணைப்பு எண் - 7

### போர் பற்றிய முக்கிய சொற்களின் பொருள் விளக்கம்

1. இகல் - பகை, போர், வலி என்னும் பொருளது
2. உறழ்வு - பகை, போர், செறிவு, மாறுபாடு எனப்படுவது
3. முரண் - மாறுபடுதல், முரணுதல்
4. திறல் - வலி, வெற்றி ஒளி
5. மறம் - வீரம், பகை, சினம், வலிமை
6. குழம்பு - சிறுபூசல், சிற்றரன்
7. பூசல் - குழப்பம், பகை, அடல்
8. ஒாட்டி - படை, கூட்டம், களம்
9. அமர் - போர், மதில், விருப்பு
10. நேர்தல் - எதிர்ப்படுதல், எதிர்த்தல்
11. கணையம் - வளைதடி, வாத்தியவகை, தண்டாயுதம்.
12. சமம் - போர்; ஒப்பாரோடு உடற்றல்
13. செரு - போர், பகை, மகிழ்ச்சி அகந்தை
14. பொருதல் - போர்செய்தல், மாறுபடுதல், போட்டியிடல்
15. மழவர் - இளம்வீரர், ஏற்றமிக்கவர்
16. மள்ளர் - **போரிடும் வீரர், விரைந்து தாக்குவோர்**
17. வயவர் - வலிமைசான்ற வீரர்
18. வீரர் - வென்றிகொள்வோர்
19. சிலை - முழங்கும் வில்
20. சாபம் - மூங்கிலால் ஆனவில்
21. கொடுமரம் - வளைந்த மரத்தாலான வில்
22. வல்வில் - வேலைப்பாடுடையவில்
23. கோதண்டம் - கோ + தண்டம், அரசனுக்குரியவில்
24. பகழி - பிளந்து அளிக்கும் அம்பு
25. வாளி - வளியென இயங்கும் அம்பு
26. கணை - திரண்டபிடியுடைய அம்பு
27. அம்பு - அழகிய பூ வடிவவுடையது
28. கவண் - தொலைநோக்கி எறியும் கருவி
29. வேல் - குத்துதற்கேற்ற வடிவது
30. எஃகம் - கூர்மையான வேல்

31. அயில் – கூர்த்த அம்பு

32. கைவேல் – கையால் கையாளுவது, தோமரம், குந்தம் போல்வன

33. சக்கரம் – திகிரி, நேமி, ஆழி போன்ற வட்டமானது

34. வாளீர் – ஆற்றல்மிகு தகட்டுக்கருவி

35. கொடுவாள் – சுடர்விடும் வாள் கொல்லும் தன்மையது

36. உடைவாள் – கைவாள், எப்போதுமிருப்பது

37. சூலம் – முத்தலை எழுசக்தி

38. ஈட்டி – இலக்குநோக்கி வீசும் கருவி

39. மழு – பரசு, கணிச்சி, பாலம் – என்பன

40. நவியம் – கோடரி, குந்தாலி

41. தண்டாயுதம் – தடியால் ஆனது கூர்மையான முனை பொருந்தியது.

42. ஆசு – கவசம் – தோலாலானது

43. கவசம் – மேலணி, எக்கத்தால் ஆனது

44. பாரம் – காக்கும் கருவி

# கம்பராமாயணம் யுத்த காண்டமும் மலையாளம் இராமசரிதமும்
## - ஓர் ஒப்பாய்வு

கேரளப் பல்கலைக்கழக பிஎச்.டி. பட்டத்திற்காக அளிக்கப்படும்
ஆய்வுக்கட்டுரை

ச. மீனாட்சிநாத பிள்ளை, எம்.ஏ.,பி.எட்.
(அரசு ஆசிரியர்பயிற்சிக் கல்லூரி
திருவனந்தபுரம்)

**கேரளப் பல்கலைக்கழகம்**
திருவனந்தபுரம்

# முடிவுரை

0.0 கம்பராமாயணம் யுத்தகாண்டம் - மலையாள இராமசரிதம் பற்றிய ஒப்பாய்வில் முகவுரை, இராமாயணக்கதைப்போக்கு, யாப்புவடிவங்கள், மக்கட் பெயரும் இடப்பெயரும், போர்த்தலைமைப் பாத்திரங்கள், போர்நெறிகளும் படைக்கலன்களும் ஆகியவை இடம்பெற்றன. முடிவுரையுடன் ஆய்வு நிறைவுறுகிறது. ஆய்வில் கண்ட முடிவுகளும், இத்துறை தொடர்பான எதிர்கால ஆய்வுக்குப் பரிந்துரைகளும் இங்குக் கூறப்படுகின்றன. ஒப்பாய்வின் வாயிலாக அறியப்படும் உண்மைகள் தொகுக்கப்பட்டு, மிகச் சுருக்கமாக இங்குத் தரப்படுகின்றன.

0.1 முகவுரையில், பொருளின் வரையறையுடன், ஒப்பாய்வின் முன்னோடிகளின் பெயர்களும், அவர்களின் ஆய்வில் உருவான நூற்களும், அவற்றில் அமைந்த பொருளும் தரப்பட்டன. இருமொழி இராமாயண ஒப்பீட்டு ஆய்வு பரிணமித்து வரும் திறன் சுட்டப்பட்டது. இவற்றால், ஒத்த க்கியத் தனித்திறன்களை அறிய முடிகிறது. ஒப்பாய்வுச் சிந்தனைக்கு இவ்வாய்வுகள் ஆர்வமூட்டுகின்றன.

0.2 கவிஞனும் காலமும் என்னும் சிற்றாய்வில் கம்பன் காலம் கி.பி.12-ஆம் நூற்றாண்டு என நிறுவப்பட்டது. இவ்வாய்வுக்கு அரணாக விருத்தப்பாவகையின் வளர்ச்சிநிலை, நூலில் அமைந்த சொல் நிலை, கவிஞன் சோழர்களைப் போற்றும் திறன்கள் முதலியன சுட்டப்பெறுகின்றன. தென்னகத்தில் பல்வேறு மொழிகளில் இராமாயணம் பரவிய காலகட்டமும் இறுவெனக்காணமுடிகிறது.

0.3 கம்பன் காலச்சூழல் சோழர்களின் போர் எழுச்சிக்காலமாகும். ஆதலின், கம்பன் போர்த்திறனை வளப்படுத்தும் முகமாகத் தன் நூலைப் படைத்தான். நாட்டின் இயற்கைவளம் கற்பனைத்தேருக்கு வழித்தடமாக அமைந்துள்ளது.

0.4 மலையாள இராமசரித ஆசிரியர் சீராமன், திருவிதாங்கூரை கி.பி.1285-1370 ஆட்சிசெய்த ஆதித்யவர்மா என்பராவர் என்னும் உண்மை மலையாளப் பேராசிரியர்கள் மேற்கொண்ட ஆய்வுகளால் வெளியாகிறது. டாக்டர் கே.எம்.ஜார்ஜ் அவர்களின் மொழியியற் சிந்தனைகளும், நூலின் அந்தாதிப்பாடல் அமைப்பும், சீராமன் கி.பி.12 ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவன் என்னும் கொள்கைக்கு அரண்செய்கின்றன.

0.5 சிதறுண்ட நாட்டை ஒன்றுபடுத்தி ஒரு வல்லரசாக்கக் கி.பி.12 ஆம் நூற்றாண்டில் வீரமார்த்தாண்ட வர்மா முனைந்தார். மன்னரான நூலாசிரியரும் சாதாரண மக்களிடையே போர் உணர்வைத் தூண்டுவதற்காக இராமாயணப்போர் நிகழ்ச்சிகளை மட்டும் பாடியருளினார். கருத்துக்களைச் சுருக்கி உரைக்கப் பெருமாள் திருமொழி நூலமைப்பையும், நினைவுகூர்ந்து மனப்பாடமாகப் படிப்பதற்காக அந்தாதிப்பாடல்களாலும் இராமசரிதம் படைக்கப்பட்டது.

0.6 இராமகதை அமைப்பும் போக்கும் என்னும் முதல் இயலில் இராமகதை நெடுங்காலமாகப் பரதகண்டம் முழுவதும் வழங்கிவரும் பான்மையும், தமிழகத்திலும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இக்கதை பரந்துள்ளமையும் விளக்கமுறுகின்றன. கம்பனுக்கு முன் தமிழில் சில இராமாயண நூற்கள் இருப்பினும், கம்பன் வால்மீகியைப் பின்பற்றி தமிழ்நாட்டிற்கு ஒவ்வ இராமவதாரத்தைப் படைத்தான். கம்பன் தன் இராமாயணத்தை மலையாளக்கரையிலும் பரப்பினான். கம்பனுக்குப் பின் தென்னிந்திய மொழிகளில் சிறந்த இராமாயணங்கள் தோன்றின.

0.7 வால்மீகி இராமாயணம், கம்பராமாயணம் போர்ப்பகுதிகள், இராம சரிதம் — ஆகியவற்றின் கதைச்சுருக்கம் ஒப்பாய்வுக்கு முன்னோடிகளாகத் தரப்பட்டுள்ளன. ஒப்புநோக்குதற்கு உதவிடும் வகையில் இவை சுருக்கியுரைக்கப்

பட்டன. மூன்று நூற்களும் ஒப்பிடப்பட்டு மாறுபடும் இடங்கள் தரப்படுகின்றன. ஒப்பாய்வில் வெளியான உண்மைகளின் சுருக்கம் வருமாறு.

1) வால்மீகி, சீராமகவி தரும் போர்ப் பகுதியின் முதல் கம்பனின் சுந்தரகாண்டப் பிற்பகுதியாக அமைகிறது

2) கம்பனின் பாயிர அமைப்பையொட்டி சீராமகவியும் பாயிரம் படைக்கிறான். ஆனால், கம்பன் கடவுளரைப் பொதுவாகச் சுட்ட, சீராமன் பலராகச்சுட்டுவான்.

3) கம்பன், சீராமன் – இருவரும் வால்மீகியின் யுத்தகாண்ட நிகழ்ச்சிகளைத் தொகுத்தும் விரித்தும், நீக்கியும் மாற்றியும், கதைப்போக்குக்கு ஊறுவராதபடிப் படைத்துள்ளனர்.

4) கம்பனும் சீராமனும் கதைச்சூழல்கள், காலம், இடம் இவற்றைச் சில இடங்களில் மாற்றுகின்றனர். கதைமாந்தர் செயல்களும் சில இடங்களில் மாறுபடுகின்றன.

5) இரு கவிஞர்களும் இராமபிரானை அவதாரமாகவே போற்றுகின்றனர்.

6) கம்பன் கருத்தின் சில சாயல் சீராமகவியிடம் காணப்படுகிறது.

7) சீராமகவி, அனுமன் பரதனுக்குக் கூறும் சித்திரகூட நிகழ்ச்சிகளைக் கூறும் பான்மை, ஒரு மீள் பார்வையாக அமைந்துள்ளது. இது சீராமனின் சிறப்பாகும்.

8) முடிசூட்டு விழாவில் நாரதன் வாழ்த்துரை, சீராமகவிக்கு ஏற்றத்தைத் தருகிறது.

9) கம்பன் போரை மிகவும் நீட்டமாகத் தரச், சீராமன் சுருக்கித் தருகிறான்.

10) வால்மீகியைப் பெரிதும் பின்பற்றுபவன் சீராமகவியே. கம்பன் தன் தனித்திறனை வெளிப்படுத்துகிறான்.

0.8 'யாப்பமைதி' என்னும் இரண்டாம் இயலில் கம்பராமாயணம் யுத்தகாண்டம், இராமசரிதம் இவற்றின் யாப்பமைதி ஆராயப்பட்டன. கம்பனும் சீராமனும் இராமகதையைப் பாடுவதற்கு விருத்தவகைகளையே கருவியாகக் கொண்டனர். அவற்றில் வெளிப்படும் உண்மைகளாவன:

1) கம்பராமாயணம் யுத்தகாண்டம் 4358 விருத்தப்பாக்களையும், இராமசரிதம் 1814 விருத்தப்பாக்களையும் கொண்டது.

2) கம்பன், வஞ்சிவிருத்தம், கலிவிருத்தம், கலித்துறை, அறுசீர் ஆசிரிய விருத்தம், எழுசீர் ஆசிரியவிருத்தம் ஆகியவற்றைக் கையாளுகிறான். கம்பனில் கலிவிருத்தம் மிகுதியாக இடம் பெறுகிறது. சீராமன் கலிவிருத்தம், அறுசீர் ஆசிரியவிருத்தம் எழுசீர், எண் சீர், பதின்சீர் விருத்தங்களைக் கையாளுகிறான். சீராமனில் அறுசீர் விருத்தம் மிகுதியாக இடம் பெறுகிறது.

3) கவிஞர்கள் தம் உணர்வு, பாத்திரப்பேச்சு, பொருள் - இவற்றிற்கேற்ப விருத்தங்களில் அமைப்பை ஆங்காங்கே மாற்று கின்றனர். சீராமன் ஒவ்வொரு படலத்திற்கும் ஒரேவிருத்த அமைப்பைக் கையாளுகிறான்; கம்பன் ஆங்காங்கே மாற்றுகிறான்.

0.9 இயல் மூன்றில் கம்ப இராமாயணம் - இராமசரிதம் இவற்றில் அமைந்த, மக்கட்பெயர் இடப்பெயர் ஆய்வின் உண்மைகளாவன:

1) தொல்காப்பியம், நன்னூல், அகராதிகள், நிகண்டுகள், கலைக் களஞ்சியங்கள் முதலியன மக்கள் பெயர் இடப்பெயராய்வுக்கு முன்னோடிகளாக அமைகின்றன.

2) சொற்கள் தனித்தோ இணைந்தோ மக்கட்பெயராகவோ இடப் பெயராகவோ அமைகின்றன. அவற்றை மொழியடிப்படையில் தனிப்பெயரென்றும் கூட்டுப்பெயர் என்றும் கொள்ளலாம்.

3) வடமொழிச் செல்வாக்கால் கம்பனில் பெயர்கள் தமிழாக்கப் பட்டும், சீராமனில் வடமொழியும் தன்மொழியுமாகக் கலந்தும் அமைகின்றன.

4) கம்பன் பெயரமைதியில் தமிழ் இலக்கண வழக்கைப் பின்பற்ற, சீராமகவி சமூக – வட்டார வழக்கைப் போற்றுகிறான்.

5) இராமசரிதத்தில் பெயர்களின் எண்ணிக்கையில் முன்னொட்டாகவேனும் பின்னொட்டாகவேனும் அமைந்து மிகைப்படக் காணப்படுகிறது. கம்பராமாயணத்தில் குறைவாகவே அமைந்துள்ளது. அட்டவணை இவற்றை விளக்குகிறது.

0.10 போர்த்தலைமைப் பாத்திரங்களால் சில உண்மைகள் வெளியாகின்றன. பாத்திரங்களின் தலைமைப்பண்பு அவற்றின் மனம் மொழிமெய்களால் அமைகிறது. உயிர்நிலைப் பாத்திரங்களாக இராமன், இலக்குவன், வீடணன், அனுமன் ஆகிய அறநிலை போற்றுவோரும், இராவணன், கும்பகருணன், அதிகாயன், இந்திரசித்து ஆகிய மறநிலை ஒழுகுவோரும் இங்குத்தரப்பட்டு ஆராயப்பட்டன. கம்பனும் சீராமகவியும் பொதுவாக ஒன்றாகவும், சிறப்பாக தத்தம் தனித்திறன்களுக் கேற்பவும் பாத்திரங்களைப் படைக்கின்றனர்.

1) கம்பன் படைக்கும் இராமன், தன்னேரில்லாத தலைவன்; வீரர்களுக்குள் வீரன்; அவன்பரம்பொருளாயினும் மனிதனாக நடந்துகொள்ளுகிறான். பகைப்புலமிருந்து வந்து வீடணனை அடைக்கலமாக ஏற்கிறான். சேதுபந்தனத்தை மூன்றே நாட்களில் முடிக்கிறான். சுக்கிரீவன்பால், பேரன்புடையவன் என்பது 'உன்னிய கருமம் எல்லாம் உன்னோடு முடிந்தது' என்னும் தொடரால் விளக்கமாகிறது. தும்பைசூடி போர் மேற்செல்லும் இராமன், முதல்போரில் தோற்ற இராவணனை, 'இன்று போய் போர்க்கு நாளை வா' என்ற அருட்திறத்தால் பகைவரைப் பொறுக்கும் பெற்றியனாக விளங்குகிறான். இலக்குவன் போரில் மூர்ச்சித்த காலை இராமன், 'தமயனான நான், தம்பிமாள இனி நான் வாழேன், உன்னுடன் வந்தேன்' என அரற்றுகின்றான். மனிதப் பண்புடன் சகோதர பாசத்துக்கு அடிமையாகின்றான்.

பகைப்புலத்து ஓங்கும் சாரதிமேல் அம்பெய்யாது அருட்திறனாளராக விளங்குகின்றான். போரில் வீழ்ந்த இராவணனின் புறப்புண்கண்டு, 'தன் வெற்றியும் வீரமும் பழுதுபட்டன' என்று எண்ணி, வீரத்திற்கு எடைபோடுகிறான். போரில் பெற்ற வெற்றியை 'வீடணன் தந்த வெற்றி' என்றே மதிப்பிடுகிறான்.

2) சீராமன் படைக்கும் இராமன், போர்த் தொடக்கத்திலேயே இராவணனிடம், 'எட்டுத்திசைகளில் போய் மறையினும் கடலில் புகுந்து ஒளியினும், முனிவர்க்கும் மூவுலகுக்கும் துன்பமில்லாமல் காக்க, உன் வாழ்வை இத்துடன் முடிக்காமல் விடேன்' எனத் தன் அவதார நோக்கத்தை வஞ்சினமாக வெளியிடுகிறான். போரில் பட்ட விழுப்புண்ணின் சிறப்பைப் "போர்க்களத்தில் மரணமடைவது அழகல்ல; உன் போர்க்காயங்கள் மரணம்வரை நிலைத்து நிற்கும்' எனப் பகைவனுக்கே உணர்த்துகின்றான். வீடணன், தன் தமையன் இராவணன் இறப்புக்கு வருந்தியகாலை, இராமன், 'ஒன்றுகேள் எவர்தான் வாழ்நாள் முழுதும் வாழ்ந்தார்?' என வாழ்க்கை நிலையாமையை உணர்த்துகின்றான். போர் முறைகளை இரு கவிஞர்களும் போர்த்தலைமை ஏற்கும் பாத்திரங்களின் போர்ச் செயல்களால் ஒத்தநிலையில் காட்டிப், , படைப்பாற்றலால் தத்தம் திறன்களைக் காட்டி நிற்பதை அறிய முடிகிறது.

3) இராமனுடன் பிறந்தோருள், கருதியதை முன்னின்று முடிப்பதில் இலக்குவன் சிறந்தவன். உணர்ச்சி, அறிவு, தெளிவு, இவற்றால் சிறந்தவன். அண்ணன் சொல்லுக்கு அடிபணிந்து வீடணனுக்கு முடி சூட்டுகிறான். தன்னுடன் பொருதும் இராவணனை 'என் கைவாளிக்கு இலக்கு இவன்' – என வஞ்சினம் கூறுவான். இராவணன் இவன் போர்த்திறமையை, 'வில்லினால் இவன் வெல்லப்படான்' எனப் புகழ்ந்துரைப்பான். இராமனும் இவனது வலிமையை 'எண்ணாயிரங் கோடி இராவணரும், விண் நாடரும் வேறு உலகத்து எவரும் நண்ணாத் தன்மையன்' எனக்கூறுவான். இவ்வாறு இராமனுக்குப் பேரன்பனாகவும், அறங்காக்கும் பெருவீரனாகவும், கடமையில் சிறந்தோனாகவும் கம்பன் படைத்துக்காட்டுவான்.

4) இராம இலக்குவன் பற்றி 'சுகசாரணன் வாயிலாக, குற்றமற்ற மனத்தினர், இராவணன் அழிவிற்கு வேண்டி வந்துள்ள அரசநாயகர்கள்' என சீராமகவி கூறுவான். இலக்குவன் இராவணனிடம் வில்லேந்தி அம்பெய்துப் போரிடுக; 'அது தான் உத்தமர்க்கழகு' - என அறிவுறுத்துகிறான். கும்பகருணன் இலக்குவனை 'வீரத்தில் வீரன் நீ, உத்தமன் நீ' எனக்கூறுகிறான். நிகும்பலைப் போரில் இவன் திறன் கண்ட இராமன், 'நீ துணையாக என்னுடனிருக்க இவ்வுலகிலுள்ள எல்லா எதிரிகளையும் நான் வென்றுவிட்டவன் ஆவேன்' எனப் புகழ்ந்துரைக்கின்றான். இவற்றால், கம்பனும் சீராமனும் இலக்குவனைப் படைப்பதில் வெவ்வேறு நிலையில் சிறந்து விளங்குகின்றனர்.

5) இராமகதையில் ஓர் இன்றியமையாத படைப்பு அனுமன் என்னும் பாத்திரம். வலிமைக்கு வரம்பான வாயுவின் மகன் சொல்லின் செல்வன். சுக்கிரீவனின் தொண்டன். வீடணனை அடைக்கலமாக ஏற்பதில் இராமன், 'மாருதிவடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி' எனப்,போரில் முதல் கீர்த்தி முத்திரை பெற்றவன். இராவணனுடன் மற்போர் செய்யும் ஆற்றல் மிக்கவன். கும்பகருணனிடம், 'மலையெடுத்து எறிந்து 'இதனைத்தாங்கினால் அமர்புரியேன்' எனச் சபதம் கூறி அதன்படி நின்றவன். போரில் இடுக்கண் உற்றபோது மருந்துமலையால் அவற்றைப் போக்கியவன். தக்க சமயத்தில் பரதன்முன்தோன்றி உயிர்காத்தவன். முடிசூட்டு விழாவில் அரியணை தாங்கும் பெருமை பெற்ற தொண்டன் - இவ்வாறு கம்பன் அனுமனைப் படைத்துக்காட்டுகிறான்.

6) சீராமன் படைக்கும் அனுமன், சீதையை அடைந்த காலை 'இன்று முதல் துன்பம் அழிந்தது; பதினான்கு உலகும் பயம் நீங்கி வாழும்; இராவணன் உயிரற்று வீழ்ந்தான்' எனக்கூறுவான். வீடணனோ அனுமனை "ஆழ்கடல் தந்தான், போருக்கென வந்தவரின் எமனானான்; இந்திரனும் அஞ்சும் இலங்கையைப் பொடியாக்கினான்; இராவணன் அழிவுக்குத் துணையாக எவரும் வழிபடும் வல்லமையானான்" எனப்புகழ்கிறான். சீதை அனுமனுக்கு முத்துமாலையளித்து, "இராமசரிதம் நிலைத்து நிற்பதற்கு மேலும் மரணமில்லா வாழ்வு உண்டாகுக" என வாழ்த்துகிறாள். இருவர் படைப்பும் அனுமனுக்குப் பல நிலைகளில் ஏற்றத்தைத் தருகிறது.

7) இராவணன் உடன்பிறந்தோரில் அறநிலைபோற்றும் பாத்திரப் படைப்பு வீடணனை. இராமனிடம் அடைக்கலம் புகுந்த வீடணன், இலங்கைக்கு வேந்தனாகிறான். இலங்கைப்போரில் வெற்றிக்கு வழிகோலிய இவன், தன் அண்ணனை "அழிவு எய்துவான் அறிவு நீங்கினான்" எனக்கூறுகிறான். மேலும், "புன்தொழில் இராவணன், அழுகிற்றே; கொற்றவர்க்கு உற்றது" என்றும் கூறுவான். வீடணன் கும்பகருணனை தன்மையை 'மாளவது மெய் என்று துணிந்தே போர்க்களம் வந்துள்ளான்' என்பான். இலக்குவன் - அதிகாயன் போரின் நிலைகண்ட வீடணன், 'இந்திரசித்தும் இறப்பது உறுதியே' என எண்ணுகிறான். வீடணன், இலக்குவன், அநுமன், சாம்பவன் முதலியோருக்கு வழிகாட்டும் நல்லோனாக விளங்குகிறான். தன் அண்ணன் இறந்தபோது, "தெய்வ கற்பின் பேர்களைத் தழுவுவான் உயிர்கொடுத்துப்பழி கொண்ட பித்தா! பின்னைப் பார்மகளைத் தழுவினையோ?" என அவன் செயலுக்குக் கழிவிரக்கம் கொள்ளுகிறான். இராமன் முடிசூட்டுவிழாவில் பங்குபெற்று விடைபெறும் வீடணன் "சராசரம் சுமந்த சால்பின் பின்னையே ஒப்பார் நின்னை அலது இலர்" எனப்புகழாரம் சூடி நிற்கின்றான். இவ்வாறு கம்பன் வீடணனை அற வாழ்க்கையைத் துவக்கம் முதல் இறுதிவரை ஒரே பெற்றியாகப் படைத்துக்காட்டுகிறான்

8) சீராமகவி படைக்கும் வீடணன், இராவணனை மந்திர ஆலோசனையில், 'இராமன் வலியன், சீதையைக் கொடுப்பதே நன்மை' எனக்கூறுகிறான். பகைப்புலத்தை வீடணன் ஒவ்வொரு போரிலும் விரித்துக்கூறுவான். மாயாசீதை பற்றி ஆய்ந்த வீடணன், 'அரும்பெருஞ்செயல்களில் தர்மத்தைப் பின்பற்றி நடந்தால் துன்பமே வராது; இது ஞானிகள் கூற்று; சீதைபற்றிய சொல் பொய், தர்மமே நல்லது; அதுவெல்லும்' எனக்கூறுவான். இந்திரசித்து மறம்போற்றும் மாண்பினனாக வீடணனை 'எதிரிகளுக்கு உளவு சொல்ல உதவினாய்' எனப் பழித்துரைப்பான். வீடணன், 'அவனிடம்' சதியால் அறிவுகெட்டு அலைவது ஒரு நாளும் உத்தமருக்குப் பொருத்தமானது இல்லை', எனப் பதிலுரைப்பான். இரு கவிஞர்களும் வீடணன் படைப்பில் ஒரே நெறியையே பின் பற்றுகின்றனர்.

9) எதிர் நிலைப்பாத்திரங்களுள், இராவணன் முதலிடத்தைப் பெறுபவன். அவன் தவமும் பக்தியும் ஆண்மையும் ஆட்சித்திறனும் பேராற்றலும்

உடையவன். வலிமைமிகு கும்பகருணனைத் தம்பியாகப் பெற்றவன். இந்திரசித்து, அதிகாயன் மற்ற மூவரையும் மக்களாகப் பெற்று மறவாழ்க்கை மேற்கொள்ளுபவன். மந்திராலோசனையில் வீடணன் அறவுரையைத் துச்சமாக மதித்துப் போர்தொடுத்தவன். முதல் நாள் போரில் இராமனிடம் தோற்று வெறுங்கையனாக மீண்டவன். "என்னையே நோக்கி யான் நெடும்பகை தேடிக்கொண்டேன்" எனத் தன் மகனிடம் கூறியவன். இந்திரசித்தன் இறந்தபோது "எனக்கு நீ செய்யத் தக்க கடன்களெல்லாம் யேங்கி யேங்கி உனக்கு நான் செய்வதானேன்" என்று பேசுபவன். இந்த அழிவு சீதையால் விளைந்தது எனக்கருதுபவன். இராமன் 'பரம்பொருள்' என்று உணர்ந்த காலத்தும் மானம் ஒன்றையே கருதி, போர்தொடுத்துத் தன் சுற்றத்தோடு அழிந்தவன். இவ்வாறு பலபடக் கம்பன் அவல வீரனாக இராவணனைப் படைத்துக்காட்டுவான். பெருவீரமும் பேராற்றலும் உடையவனாயினும் தன்முனைப்பே மிக்கோங்க அழிந்து படும் இராவணனது பாத்திரப்படைப்பு இணையற்றதாக விளங்குகிறது.

10) அறம்பேசிய வீடணனை இகழ்ந்த இராவணன், "நீ எனக்குத் தம்பியாய் இருந்தாய்; இந்த உறவு மூலம் இனியும் பேசமுடியாது' என எச்சரிக்கிறான். வீடணன், இவனை இராமனுக்கு அறிமுகப்படுத்தும்பொழுது "உதயசூரியனுக்குச் சமமானவன், சிவனுக்கு அன்பன்; வாரணப்பறகள், வெண்ணிறஎகிறன், சிங்கச் சின்னத்தைத் தேரில் அணிந்தவன், பெருவீரன்", எனக்கூறுவான். இந்திரசித்து இறந்தபோதுற்ற அவலத்தில், 'முன்பு இலங்கை நகரில் துன்பம் சூழ்ந்ததாக நான் அறிந்ததே இல்லை?' — என இராவணன் கூறி வருந்துவான். இவன் இறப்பில் வருந்திய வீடணன், பிறப்பு இறப்பு பற்றிய தத்துவத்தை இராமன்வழி அறிகிறான். இவ்வாறு இராவணனின் தனித்திறன் சீராமனால் உணர்த்தப்பெறுகிறது.

11) இராவணன் உடன் பிறந்தோர்களுள் கும்பகருணன் ஒருவன். ஓங்கி உலகளந்த உத்தமனுக்கு இணையான உருவமுடையவன். இராமனுக்கு வில்போல, கும்பகருணனுக்குச் சூலமே போர்க்கருவியாகப்பயன்படுகிறது. இலங்கை வேந்தன் தவறிழைத்தபோது, தவறினைச் சுட்டிக்காட்டி நெறிப்படுத்த முயன்றவன், செஞ்சோற்றுக்கடன் கழிப்பதையே வாழ்வின் நோக்கமாகக்கொண்டு உயிர்த்தியாகம் செய்தவன்.

"ஆனதோ வெஞ்சமர்? அலகில் கற்புடை சானகி துயர் இனந்தவிர்ந்த தில்லையோ?" எனமொழிந்த கும்பகருணன், "வென்றி இவண் வருவேன் என்று உரைக்கிலேன் விதி நின்றது; பிடர்பிடித்து உந்தநின்றது" எனக்கூறிப், போர்மேல் செல்கிறான். தன்னை அழைத்த வீடணனை "நீர்க்கோல வாழ்வை நச்சிவாழேன்" எனப்போர்க்கோலம் பூண்டு போர்செய்கிறான். இராமன் இவனை, "ஐயன்விற்றொழிற்கு ஆயிரம் இராமன் அமைவிலர்" என வியந்துரைப்பான். இராவணனிடமிருந்து 'தன் தம்பி வீடணனைக் காக்குமாறுவேண்டி' போர்க்களத்தில் நெடும்போர் செய்து உயிர்துறக்கிறான். கம்பன், கும்பகருணனை இராமகதையில் தன்னேரில்லாத தலைவனாகப் படைத்துக்காட்டுவான்.

12) சீராமகவி படைக்கும் கும்பகருணன் படுக்கையிலிருந்து எழும் பொழுதே நமக்குத் தீங்குசெய்தவர் எவர்? அசுரரோ? தேவரோ? என வினவுவான். போர்க்களம் செல்லும் அவன், "இராம இலக்குவரும் வானரரும் உனக்கு உணவாவர்; சீதைக்கு உன்மீது அன்புவரும்; விரைவில் உன்னைச்சரணடைவான்" எனக் கூறுகிறான். பின்னர் நியாயமாக, "நல்லவர் தீது செய்யார் ; இராமனோடு போர்வேண்டாம்; தீங்குவரும் முன்பே சீதையை இராமனிடம் கொடுத்துவிடுக" என அறிவுரை கூறுவான். மாருதி , இலக்குவன், இராமன் முதலியோர்களுடன் போர் செய்து புரந்திராத்திரத்தால் அழிந்துபடுகிறான். கம்பனும் சீராமனும் கும்பகருணன் பாத்திரப் படைப்பில் ஒரே நெறியையே பின்பற்றுகின்றனர்.

13) மிகப்பெரிய உடம்பை உடைய அதிகாயன் இராவணன் மைந்தருள் ஒருவன். இந்திரனையும் வெல்லக்கூடிய ஆற்றல் பெற்றவன். மறப் போர் செய்பவன். தன் தந்தையிடம் "உன் தம்பியைக் கொன்றவனை தம்பியைக் கொன்று துயர் துடைப்பேன்" எனப்படை மேல் செல்வான். இலக்குவனுடன் தனிப்போர் செய்து உயிர் துறக்கிறான். அதிகாயனை போர்நெறி, மறனிழுக்கா மாண்பு, வஞ்சினம், போர்நெறி - இவற்றால் கம்பன் இவனை ஒரு வெந்திறல் வீரனாகப் படைத்துக் காட்டுகிறான்.

14) சீராமன் அதிகாயனை இராவணன் மக்கள் திரிசிரசு, நராந்தகன், தேவாந்தகன் போன்ற ஒருவனாகவே படைத்துள்ளார். இலக்குவனிடம் அதிகாயன் செய்யும் போர் மறப் போராகவே இராமசரிதத்திலும் இடம்பெறுகிறது. இரு கவிஞர்களும் மூலநூலையே பின்பற்றுகின்றனர்.

15) கம்பன் படைப்புகளில் இந்தரசித்து ஒப்புயர்வற்றவன். வீரமும் சகோதரபாசமும் மிக்கவன். "வீரத்தே நின்ற வீரன்; வீரருள் வீரன்" எனக் கம்பன் இவனைப்புகழ்வான். தம்பி அதிகாயன் இறந்தபோது தந்தையிடம், "கொன்றார் அவரோ? கொலை சூழ்க என நீ கொடுத்தாய்" எனக்குமுறுவான். "எம்பியைக் கொன்றவனைக் கொல்லாது வரேன்" என வஞ்சினம் கூறிப் போர்க்களம் செல்லுகிறான். நாகபாசம், பிரமாத்திரப் போர்களில் மாயைபல செய்கிறான். போர்க்களத்தில் இராவணனிடம் "அம்பினால் உடல் குறைந்த கும்பகருணன் அல்லன் நான்; இராவணன் மகன்"எனச் சூளுரைக்கிறான். நிகும்பலையில் இலக்குவனுக்கும் இந்திர சித்துக்கும் நடக்கும் போரின் சிறப்பைக் கம்பன் விரித்துரைப்பான். இலக்குவன் பிறைமுக அம்பால் இந்திரசித்து அழிகின்றான். இராவணன் மண்டோதரி இவர்களின் அவலம் இந்திரசித்தின்பால் இரக்க உணர்வைப் பெறச்செய்கிறது. மறம் சுமந்த உடல், அறம் தெரிந்தும் மாய்ந்து போகிறது. கம்பன் பேரிருக்கத்திற்குரியவனாக இவனைப்படைத்த பான்மையைக் காணமுடிகிறது.

16) சீராமன் படைக்கும் இந்திரசித்து தன் சகோதரர்கள் நால்வர் இறந்துபடவே, "இராமலக்குவனை அம்பால் எய்து, வானர வீரர்களைக் கொன்றொழிப்பேன்" என வஞ்சினம் கூறிப்போர் செய்கிறான். மாயப்போர் உடற்றும் இவன் செயல்கண்டு இராமன், "இங்கினி நம்மால் ஒன்றும் செய்வதற்கில்லை" எனக்கூறித் தளர்கிறான், வீடணனை, "எதிரிகளுக்கு உளவுகூறும் நீ அழிவாய்"எனச் சபிக்கிறான். இலக்குவன் ஐந்தாத்திரத்தால் இந்திரசித்து அழிகிறான். அரக்க மாதரும் மண்டோதரியும் இவன் வீரவரலாற்றைக் கூறிப்புலம்புகின்றனர். இராவணன் அழுது அரற்றுவான். சீராமகவி கம்பனிலிருந்து சிறிது மாறுபட்டு இவ்வீரனைப் படைத்துக்காட்டுவான்.

0.11 கம்பன், சீராமகவி ஆகியோர் போர்நெறிச் செய்திகளாகப் பல தந்து அக்கால மக்கள் வாழ்வின் அற மற மனப்பாங்கினைச் சுட்டிக்காட்டி, வருங்கால மக்களுக்கு வழிகாட்டுகின்றனர். யுத்தகாண்டப் போர்நிகழ்ச்சிகள் அக்காலப் போர்நெறிகளையும் படைக்கலங்களையும் பற்றிய சில உண்மைகளைத் தருகின்றன. அவையாவன:

1) போர்கள் தனிப்போராகவோ கூட்டப் போராகவோ நிகழ்கின்றன. சுக்கிரீவன் இராவணன் மற்போரைத் தனிப் போராகக் கொள்ளலாம். போர் நிகழ்ச்சிகளுக்கிடையே நிகழும் அங்கதன்-இந்திரசித்து, நீலன்-நிகும்பன் போன்ற போரும் இதில் அடங்கும். இராவணன், அனுமன், இலக்குவன் இராமன் ஆகியோர் உடற்றும் போர்க், கூட்டுப்போராகக் கொள்ளப்பட்டது.

2) போருக்கு முன் மந்திராலோசனை, தூது முதலியன நடைபெறுகின்றன. இராவணன் மந்திராலோசனையும், அங்கதன் தூதும் இதற்குச்சான்றாகும்.

3) ஒப்பார் இருவர் எதிர்த்துப் போர் செய்யும் நெறி பேணப்பட்டது. இராமசரிதத்தில், விரூபாக்கன் இலக்குவனோடு போர் செய்வதற்கு மறுக்கிறான். போரில் தோற்ற இராவணனை, "இன்று போய் நாளை வா" என இராமன் கூறுகின்றான். இச்செய்தியை இருவரும் தருகின்றனர்.

4) போரில் வானரப்படை கல், மலை, மரம் இவற்றைப் படைக்கலன்களாகக் கொள்ள, அசுரப்படை, வில், அம்பு, சத்தி, வேல், மழு, சூலம் – போன்றவற்றைப் படைக்கலங்களாகக் கொள்ளுகிறது.

5) கம்பரும் சீராமகவியும் போர்க்களக் காட்சிகளை அமைப்பதில் சிலநெறிகளைக் கையாளுகின்றனர். படைவீரர்கள் ஒருவரோடு ஒருவர் கைகலந்து போரினைத் தொடங்குகின்றனர். அதனைத் தொடர்ந்து, சிறுபடைத்தலைவர்கள் முன்னணிக்கு வந்து போரிடுகின்றனர். இந்நெறியில் முதல்போர், கும்பகருணன்போர் அமைந்தமை எடுத்துக்காட்டுகளாகச் சுட்டப்பெற்றுள்ளன.

6) படைகளும் படைகளும் முதலில் கைகலந்து போரினைத் தொடங்கும். படைகள் அழிந்ததும் இரு தரப்பிலுமுள்ள தலைவர்கள் ஒருவரையொருவர் எதிர்த்துப் போர் செய்கின்றனர். இந்நெறியில் அனுமனுடன் இந்திரசித்து செய்யும் போரும், வேலேற்ற பகுதியில், இலக்குவனும் இராவணனும் உடற்றும் போரும் எடுத்துக்காட்டு களாகத் தரப்பட்டுள்ளன.

7) படைவீரர்கள் தங்களுள் போரிட்டு மடிவதைத்தொடர்ந்து, படைத்தலைவரே எதிரிகளைத் தாக்கவருகின்றனர். ஒரு பக்கத் தலைவர் கொல்லப்படின், அவருக்குத்துணையாக வந்த சிறுதலைவர்கள் போரைத் தொடர்ந்து நடத்துகின்றனர். இலக்குவன் அதிகாயனோடு நடத்திய போரிலும், இந்திரசித்து மேற்கொண்ட பிரமாத்திரப் போரிலும் இந்நெறி போற்றப்பட்டது.

8) ஒத்த நிலையில் உள்ள சிறுபடைத்தலைவர்கள் மட்டுமே, பெருந் தலைவர்களின் துணையின்றி, நடத்தும் நெறிகளும் அமைந்துள்ளன. படைத்தலைவர் வதைப்படலம் இந்நெறியால் ஆனது.

9) போர்த்துவக்கத்திலேயே தலைவனும் தலைவனும் போரிடத் துவங்கும் நெறியும் காணப்படுகிறது. மகரக்கண்ணன் வதை, இந்திரசித்து வதை இந்நெறியால் ஆனதாகும்.

10) புறப்பொருள் மரபான பூச்சூடல், நாழிலாட்டு முதலியன கம்பராமாயணப்போர் நிகழ்ச்சிகளில் இடம்பெறுகின்றன. கும்பகருணன் தும்பை சூடிச்சென்றான். இராவணன் நெடுந்தும்பை சூடினான். மூலபலப்படையைக் கொன்று இராமன் நாழிலாட்டு சிறான். இவை இவற்றிற்கு எடுத்துக்காட்டுகளாகும்.

11) வஞ்சினமுரைத்தல், வீரவாதம் புரிதல் முதலியன போர் நெறிகளுள் போற்றப்படுகின்றன. இந்திரசித்து 'இலக்குவனைக் கொல்லாது மீளேன்' என வஞ்சினமுரைக்கிறான். அதிகாயன் அனுமனிடம் வீரவாதம் புரிகின்றான்.

12) பகைவரேயாயினும் போர்த்திறனைப் புகழ்ந்துரைக்கும் நெறியும் காணப்படுகிறது. இலக்குவன் வில்லாற்றலை இராவணன் புகழ்கிறான். இலக்குவனின் வில்லாற்றலை இந்திரசித்தும், அதுபோலவே இந்திரசித்தின் வில்லாற்றலை இலக்குவனும், வியந்து பாராட்டுகின்றனர்.

13) இராக்காலங்களிலும் போர் நடக்கிறது. நாகபாசம், பிரமாத்திரம், இந்திரசித்து வதை ஆகியன மூன்று இரவில் நடக்கின்றன.

14) தீவியல் புனைவாக அத்திரங்கள் இரு காவியங்களிலும் இடம் பெறுகின்றன. கம்பன், அத்திரங்களைப் படை என்றே கூறுகின்றான். சீராமகவி மூலநூலையொட்டி அத்திரங்கள் என்றே கூறுகின்றான்.

15) நிகும்பலையில் காற்றுப்படை, அயன்படை, வருணப்படை, சூரியன்படை, அயன்படை, மாயோன்படை என்பனவற்றை இந்திரசித்து முதலில் ஏவ, இலக்குவன் அவற்றை அதே படைகளால் தடுத்த செய்திகளைக் காணமுடிகிறது.

16) இராவணன் விடுத்த மோகப்படையை நாராயணன் படையாலும், தாமதப்படையைச் சிவன் படையாலும், ஆசுரப்படையை அக்கினிப் படையாலும், மயன்படையைக் காந்தருப்பப்படையாலும், மாயப் படையை ஞானப்படையாலும், நிருதிப்படையைக் காருடைப்படையாலும், இராமன் மாற்றி, இராவணன் அத்திரங்களைச் செயலிழக்கச் செய்யும் நிகழ்ச்சி இராவணன் வதையால் அறியமுடிகிறது.

17) அத்திரங்களை விடும்பொழுது அவ்வவ் அத்திரத்திற்குரிய தெய்வங்களை வழிபட்டு மந்திரம் ஓதி வில்லில் தொடுப்பது மரபாகப் போற்றப்படுகிறது. பொதுவாக, அத்திரங்களில் பிரம்மாத்திரம் பேராற்றல் வாய்ந்ததாகக் கூறப்படுகிறது. சிவன் படையும் நாராயணன் படையும் அதனினும் வலிமை மிக்கனவாக உணர்த்தப்படும் இடங்களும் உண்டு.

18) படைத்தலைவர்களால், போரை நடத்தவியலாதபோது தெய்வத்தின் துணை கைகூடுகிறது. இலக்குவனை நாகபாசத்தால் பிணித்தபொழுது இராமனும் மயங்கி விழவே, இறையருளால் கலுழன் வருகிறான். அனுமன் மருந்துமலை கொணர்ந்து பிரமன்படையை விடுக்கிறான். பரம்பொருள் உதவும்பான்மை இவற்றால் விளங்குகிறது.

19) போர்க்களத்தில் இசைக்கருவிகளும் இடம்பெறுகின்றன. போர்ப் படை செல்லச் சங்கமும் பறையும் முழங்கப்படுகின்றன. கும்ப கருணனை எழுப்பப் பல்வேறு இசைக்கருவிகள் பயன்படுத்தப்பட்டன. போர் தொடங்கும் முன் சிலர் நாணைத்தெறித்து பேரொலி செய்கின்றனர். இலக்குவனும் இந்திரசித்தும் நாணொலி செய்து போரைத் துவக்குகின்றனர்

ஏறத்தாழ ஒரேகாலக் கவிஞர்களான கம்பன், சீராமன் ஆகிய இருவரும் காப்பியக்கதையை ஓரளவு ஒட்டியும், கவிபுனைவதில் விருத்தப்பாக்களைக் கையாண்டும், மக்கட்பெயர், இடப்பெயரைச் சுருக்கியும் பெருக்கியும், பாத்திரப்படைப்பை வீரமும் பெருமிதமும் தோன்றக் காட்டுகின்றனர். மேலும், தத்தம் தனித்திறன்களை வெளிப்படுத்தியும், போர்நெறிகளையும் படைக்கலங்களையும் மூல நூலை ஒட்டியே படைத்தும், அளிக்கும் திறன் இராமகதைக்கு அந்தந்த மொழிகளில் வழக்காற்றுக்கு ஏற்பச் சிறப்பைத்தருகின்றது. நாடு, மொழி, சூழலுக்கேற்ப இருவரும் தம்மை இனம்காட்டிக் கொள்ளுகிறார்கள். காப்பியங்களை ஒப்பிடுவோர்க்கு இவ்வுண்மை தெரியவரும்.

அடுத்துவரும் ஆய்வாளர்களுக்கு

கம்பராமாயணம் - இராமசரிதம் பற்றிய ஒப்பாய்வுச் சிந்தனையில் தோன்றிய ஆய்வுக்குரிய கருத்துக்கள் சிலவற்றைப் பரிந்துரைக்கலாம்..

'யாப்பமைதி' என்னும் பகுதியில் பொதுவாக இரு நூற்களின் பாவமைப்பை வகைதொகை செய்து அதற்கான சில காரணங்களும் காணவியன்றது. அதற்கும் மேலாக, இருநூற்களிலும் அமைந்த பாவண்ணங்களையும், மாறுபடும் திறன்களையும் பாத்திரப்படைப்பு, வருணனை போன்ற நீர்மையால் ஒப்புமைப் படுத்தி ஆய்வு செய்யலாம். மொழியாக்கத்திறனை வளர்க்க இம்மாதிரியான ஆய்வு பயனுறும்.

மக்கட்பெயர், இடப்பெயர் ஆய்வின் வளர்படியாக இரு நூற்களிலும் மொழி நிலையில் தற்சமம்-தற்பவம் ஆட்சியையும் ஆக்கத்தையும் வகைதொகை செய்து ஆய்வு செய்யலாம்.

போர்த்தலைமைப் பாத்திரங்களுக்கு அப்பால், பிற துணைப்பாத்திரங்களையும் இரு காப்பியங்களையும், ஒப்பிட்டு ஆய்வு செய்யலாம்.

மேலும், கீழ்வரும் தலைப்பை அடியொற்றி ஆய்வு செய்வதானால், இரு மொழி இலக்கிய நேர்மையும் கம்பனின் தனிச்சிறப்பையும் பல கோணங்களில் அறிய வாய்ப்பாகும்.

1) படிமப்படைப்பு (symbolism) கம்பனிலும் இராமசரிதத்திலும்
2) காப்பிய நோக்கில் கம்பனும் எழுத்தச்சனும்
3) கம்பராமாயணமும் இராமகதாப்பாட்டும் (மலையாளம்)
'பாட்டும் பொருளும்'

4. 'கம்பராமாயணமும் திக்கனஇராம சரிதமும்' (தெலுங்கு)

5. 'கம்பராமாயணமும் துவிபத இராமாயணமும்' (தெலுங்கு)

6. 'கம்பராமாயணமும் தோரவே இராமாயணமும்' (கன்னடம்)

7. 'கம்பராமாயணமும் பாஸ்கர இராமாயணமும்' (தெலுங்கு)